உ

திருமுருகானந்தா

# திருவுந்தியார்-உரைச்சுவடி




எழுதினவர்

சிவனடியார். சு. மாசிலாமணி தேசிகர்

திருநகர்.







வெளியிடுவோர்

மதுரைத் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்.

உ

திருமுருகானந்தா

## சன்மார்க்க நன்னூல் - நான்காம் காண்டம்

# திருவுந்தியார் - உரைச்சுவடி



எழுதினவர்

சிவனடியார் க. மாசிலாமணி தேசிகர்

திருநகர்.

வெளியிடுவோர்

மதுரைத் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்



1967–68

பதிவுற்றது

விலை. நூலகப் பதிப்பு ரூ: 2 - 50
பொதுப் பதிப்பு ரூ: 2 - 00

உ

திருவுந்தியார் உரைச்சுவடி

## பொருளடக்கம்

457



மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்

291ஆவது குரு மகா சந்நிதானம்

திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர

ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B T

திருவருள் துணை

மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம் 291வது குருமகா சந்நிதானம் திருவருள் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகளது

# ஆசியுரை

வேதாகம உண்மைகளைக் கூறுகின்ற பற்பல சாஸ்திரங்களுள், தமிழில் உள்ள பதினான்கு சைவசித்தாந்த சாஸ்திரங்களே தலை சிறந்தனவாகும். ஏனென்றால் சச்சிதானந்தமய மான கடவுள் ஒருவர் உண்டு; உயிர்கள் பல உண்டு; உயிர்களை அநாதியே பந்தித்திருக்கும் மும்மலங்கள் (அஞ்ஞானம்) உண்டு, என்பவற்றிற்குரிய பிரமாணங்களும் (நிரூபணங்களும்) சைவ சித்தாந்த சாஸ்திரங்களில் விளக்கியிருப்பது போல உலகத்திலே இதுவரை வேறு எந்த நூலிலும் விளக்கப் பெற வில்லை. கடவுளது இலக்கணங்களும், உயிர்களது இலக்கணங்களும், உயிர்களைப் பந்தித்திருக்கின்ற மும்மலங்களின் இலக்கணங்களும் மதிநுட்பமுடைய எவரும், அநுபவத்தில் உணர்ந்து ஏற்றுக்கொள்ளுகிற முறையில் சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் சொல்லுவது போல உலகிலுள்ள வேறு எந்த நூலிலும் சொல்லவில்லை.

அறம், பொருள், இன்பம் என்னும் பொருள்களைப்பற்றி தமிழில் திருவள்ளுவர் ஒன்றே முக்கால் வரியில் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்ற முறையில் மக்கள் கடைப் பிடிக்க வேண்டிய சட்ட திட்டங்களை இல்லறம், துறவறம், அரசியல், அங்கவியல், ஒழிபியல், களவியல், கற்பியல் என்ற

எட்டு இயல்களில் 1330 குறட்பாக்களில் அருளியிருப்பது போல உலகிலே வேறு எந்த மொழியிலும் அருளப்பெறவில்லை என்பது யாரும் மறுக்க முடியாத உண்மையாகும்.

அதே போல பதி (கடவுள்), பசு (உயிர்கள்), பாசம் (மும்மலங்கள்) ஆகிய முப்பொருள்களைப் பற்றி பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயன் இயல் என்ற நான்கே இயல்களில் ஒவ்வொரு இயலுக்கும் மூன்று சூத்திரங்கள் விதம் 12 சூத்திரங்களில் நாற்பது வரிகளில் மெய் கண்ட தேவர் அருளிய சிவஞான போதம் என்ற அரிய பெரிய கருத்துக்களைக் கொண்ட மிகச் சுருங்கிய நூலும் அது கூறும் உண்மைகளை விளக்குவதற்காக எழுந்த இதர பதினொரு நூல்களில் அருணந்தி சிவாச்சாரியார், 629 பாடல்களில் அருளியிருக்கின்ற சிவஞான சித்தியார் போன்ற மிகப் பெரிய நூலும் வேறு எந்த மொழியிலும் கிடையாது. சிவஞான சித்தியாரை தவிர அருணந்தி சிவாச்சாரியார் அருளிச் செய்த நூல் "இருபா இருபஃது" ஆகும். இந்த மூன்று நூல்களையும் அனுசரித்து எழுந்த நூல் மனவாசகங் கடந்தார் அருளிய "உண்மை விளக்கம்" ஆகும். மேலே சொன்ன நான்கு நூல்களையும் அனுசரித்து எழுந்த நூல்கள் உமாபதி சிவம் அருளிய 1. சிவப் பிரகாசம் 2. திருவருட் பயன் 3. வினாவெண்பா 4. போற்றிப் பஃறொடை 5. கொடிக்கவி 6. நெஞ்சு விடுதூது 7. உண்மை நெறி விளக்கம் 8. சங்கற்ப நிராகரணம் ஆகிய எட்டும் ஆகும்.

"சிவஞான போதம்" என்ற நூலை அருளிய மெய்கண்ட தேவர் காலம் கி. பி. பதிமூன்றும் நூற்றாண்டு என்றும் அவருடைய மாணவர்களாகிய அருணந்தி சிவாச்சாரியாரும் ("சிவஞான சித்தியார், இருபா இருபஃது" ஆசிரியர்); மனவாசகங் கடந்தாரும் ("உண்மை விளக்கம்" ஆசிரியர்) அதே நூற்றாண்டினரே என்றும், சித்தாந்த அஷ்டகம் என்ற எட்டு நூல்களை அருளிச் செய்த உமாபதி சிவம் பதினான்காம் நூற்றாண்டினர் என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

ஆனால் சிவஞான போதத்திற்கு முற்பட்ட சைவ சித்தாந்த நூல்களே திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் பன்னிரண்டாம் நூற்றாண்டில் அருளிய திருவுந்தியாரும் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் அருளிய திருக்களிற்றுப் படியாரும் என்ற உண்மையை பல பேரறிஞர்கள் தங்கள் ஆராய்ச்சியில் கண்டு கூறி இருக்கிறார்கள். ஆனதினாலேயே சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கினையும் கூறுகின்ற செய்யுள்

"உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் வந்த அருட்
பண்புவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மை நெறி சங்கற்ப முற்று"

என்று வரையறுத்துக் கூறுகின்றது.

இவற்றிலிருந்து சித்தாந்த சாஸ்திரங்கள் பதினான்கினுள் "திருவுந்தியார்" முற்பட்டது என்பது புலனாகும். இனி சைவ சமய தோத்திரங்கள் பன்னிரண்டு திருமுறைகளாக வகுக்கப் பெற்றிருக்கின்றன. அவற்றுள் முதல் மூன்று திருமுறைகளையும் அருளியவர் நமது ஆதீனத்தை ஏழாம் நூற்றாண்டில் நிறுவிய திருஞான சம்பந்தப் பெருமான் ஆவார். ஆகவே சித்தாந்த சாஸ்திரங்களின் முதல்வர் அருளிய திருவுந்தியார் விரிவுரையை திருமுறைகளின் முதல்வர் பெயரால் திகழ்கின்ற மதுரை திருஞான சம்பந்த சுவாமிகள் மடாலயத்திலிருந்து வெளியிடுவது மிகவும் பொருத்தமானதும் சாலச் சிறந்தது மான திருவருட் குறிப்பென்றே கருத வேண்டியதிருக்கிறது.

திருவுந்தியாருக்கு திருவாடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த தில்லைச் சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசத் தம்பிரான் ஒரு பொழிப்புரையும் அவ்வாதீனத்தைச் சேர்ந்த பெயர் குறிப் பிடப் பெறாத இன்னொருவரது பொழிப்புரையும் இதுவரை வெளி வந்துள்ளன. ஆனால் சித்தாந்த சாஸ்திரங்களில் முதல்

நூலான திருவுந்தியாருக்கு விளக்கம் தரும் விரிவுரை இது வரை யாராலும் எழுதப் பெறவில்லை. அந்தக் குறையை நீக்குவதற்கு மதுரை திருநகர் வாசியான சிவனடியார் உயர்திரு க. மாசிலாமணி தேசிகர் பி. ஏ. அவர்கள் முன் வந்திருப்பதை அறிந்தும் மட்டற்ற மகிழ்ச்சியுற்றோம்.

அவர்கள் தமிழக அரசாங்கத்தில் பல துறைகளிலும் பணியாற்றி இறுதியாக டெபுடி கலெக்டர் (Deputy Collector) உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றவர்கள். நல்ல சாஸ்திர, தோத்திர ஞானமும் பெற்ற அனுபூதிமான். ஆங்கிலத்திலும், தமிழிலும் ஆழ்ந்த புலமையுள்ளவர்கள். ஆனதால் திருவுந்தியாருக்கு தமிழிலும், ஆங்கிலத்திலும் விளக்கவுரை தரக்கூடிய தகுதி உள்ளவர்கள். பாடல்களைப் புதிய முறையில் வரிசைப் படுத்தி விரிவுரை வகுத்திருக்கிறார்கள். இவ்வகையான விளக்கவுரை தமிழிலும், ஆங்கிலத்திலும் வரவேண்டியது இன்றியமையாத செயலாதலால் அதனை நமது ஆதீன வெளியீடாகவே வெளியிடத் தீர்மானித்துள்ளோம். உலக மக்கள் யாவரும் திருவுந்தியாரில் கூறி இருக்கும் உண்மைகளை உள்ளவாறு உணர்ந்து அதன்படி நடந்து உய்வு பெறத் திருவருள் பாலிக்குமாறு எல்லாம் வல்ல அங்கயற்கண்ணி பங்கனும் ஆலவாய் அண்ணலைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்

# திருவுந்தியார் உரைச்சுவடி

## முன்னுரை

சிவஞானவொளி நிறைந்த தொன்மைத் தமிழ் நாட்டி லிருந்த குமரி நாடு முதல் வடபால் இமயத்தையொட்டிய சிந்து நதி தீரம் வரையில் சற்றேறக்குறைய ஐயாயிரம் ஆண்டு களாக சைவசமயக் கொள்கையுங் கலாச்சாரமுஞ் சிவலிங்க வழிபாடும் இப்பரத கண்டத்தில் பொது மக்களிடையிலும் பரவியிருந்தனவென்று ஆராய்ச்சியினலறிந்த உண்மை யாகும். ஆயினும் அவற்றிற்கு ஆதாரமாயிருந்த பழமையான தமிழ் மறைகளும் பெரும்பகுதி ஆகமங்களும் திருவருட் சம்மதத்தால் கடற்கோள் முதலிய ஆதிதெய்வீக ஏதுக்களால் அழிவுற்றன.

பிறகு, இற்றைக்கு பற்பல நூற்றாண்டுகட்கு முன்னர் தமிழகத்துத் திருப்பதியாகிய திருவாடுதுறையில் சிவன் கோயிற் பிரகாரத்தில் திருமூலர்பிரான் சிவயோகாரூட ஞானி யாய்ப் பல்லாண்டுகள் தங்கியிருந்து, வடமொழிச் சிவாகமங் களிற் சிறந்த ஒன்பது சாத்திரங்களின் நுண்ணிய பொருள் களைத் தம் அநுபவத்திற் கண்டு அவற்றைத் தமிழில் ஒன்பது தந்திரங்களாக ஓர் ஞான நூலியற்றி அதற்கு "மூவாயிரந் தமிழ்" என்பெயரிட்டுத் தம் மாணக்கர்கட்கு சிவஞானப் பொருளை உபதேசித்தருளியதுமன்றித் தமிழ் நாட்டிற் சில சைவ மடங்களையுந் தாபித்தார். சரித்திரத்திற்குட்பட்ட காலத்தில், முதன் முதலாக சித்தாந்த சைவ சமயத்துக்குத் தமிழில் உண்மை சரித்திரத்தை ஆக்கித் தந்து காலக்கிர

மத்தில் மங்கியிருந்த அத்துவித சித்தாந்த ஞானத்திற்கு புத்துயிரளித்து அதனைத் தமிழகத்திற் பரவச் செய்த முனி புங்கவர் திருமூலர்பிரான் என்று கொள்ளக்கிடக்கின்றது.

திருவள்ளுவ நாயனர் இயற்றிய தமிழ்மறை யென்னும் திருக்குறளில் திருமூலர் நூலிற்காணும் பலப்பல பதங்களையும் பொருள்களையும் எடுத்தாண்டிருப்பதிலிருந்து கி. பி. முதலாவது நூற்றாண்டில் விளங்கியவராகச் சரித்திரச் சான்றுகள் கூறும் திருவள்ளுவ நாயனருடைய காலத்துக்குத் திருமூலர் பிரானுடைய காலம் முந்தியதாகுமென ஊகித்தறியலாம்.

திருமூலநாயனருக்குச் சற்றேறக்குறைய பதின்மூன்று நூற்றாண்டுகட்குப் பின்னர் தமிழகத்தில் திருவியலூர் என்னுஞ் சோழநாட்டுச் சிற்றூரில் அவதரித்து சிவாகம சித்தாந்த முத்தராய்த் திகழ்ந்த உய்யவந்த தேவநாயனர் பன்னிரண்டாவது ஆங்கில நூற்றாண்டில் இயற்றியருளிய "திருவுந்தியார்" என்னுஞ் சிவயோக ஞானநூல் நாற்பத்தைந்து செய்யுட்களைக் கொண்டு உருவிற் சிறிதாயினும் இந்துமத ஞானபோதனைகளின் ஒப்புயர்வற்ற சிகரமாகிய அத்துவித சித்தாந்தச் செந்நெறியைப் போதிப்பதாகையால் அது பதினன்கு சித்தாந்த சாத்திரங்களில் காலத்தால் முதலாவதாகத் திகழ்கின்றது. "மூவாயிரந்தமிழ்" என்றும் "திருமந்திரமாலை" அல்லது "திருமந்திரம்" என்றும் வழங்கி வரும் திருமூலநாதரின் சாத்திரத்தில் யோகஞானப் பகுதிகளிற் காணும் சுவானுபவப் பொருள்களிற் பல திருவுந்தியாரில் அடங்கியிருக்கக் காணலாம். சிலவற்றை இவ்வுரைச் சுவடியில் எடுத்துக் காட்டியிருப்பதையுங் காணலாம்.

திருவுந்தியார் காலத்துக்கு ஒரு நூற்றாண்டுக்குப் பின் தமிழகத்தில் அவதரித்த அதீத சிவமுத்தராகிய மெய்கண்ட தேவ சிவாச்சாரியார் சித்தாந்த ஞானத்தை மேலும் தமிழகத்திற் பரவச் செய்யத் திருவுளங்கொண்டு தமிழில் "சிவஞான போதம்" என்ற ஆகம மெய்ஞ்ஞான நூலை இயற்றியருளி தம் மாணவர்கட்கு போதித்தருளினர். இச்சாத்திரத்தில் திருவுந்

தியாரிற் காணும் பல சித்தாந்தப் பொருள்கள் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

இவ்வித சிறப்பு வாய்ந்து மெய்கண்ட சாத்திரங்களில் காலத்தால் முதலாவதாகத் திகழ்ந்துவரும் திருவுந்தியார் சாத்திரத்தின் முக்கிய போதனை அட்டாங்க சிவராசயோகமாகும். எண்ணிறந்த யோக வகைகளிற் சிவயோகம் சிறந்ததென் பதை "மெய்ம்மைச்—சிவயோகமே யோகம் அல்லாத யோகம்-அவ்யோகம் என்றே அறி" என்ற திருக்களிற்றுப்படியாரின் போதனையிலிருந்து அறியலாம். சிவயோகமே சிவபரமுத்தி ஞானத்திற்கு நேர் சாதனமென்பதைத் தமிழகத்திலுள்ள சித்தாந்த சாத்திர நூலுணர்வுடையோரிற் பலர் மறந்தும் மலைவுற்றுமிருக்கின்றனர். நமது மெய்ஞ்ஞான வள்ளலார் களின் போதனைகள் இவ்வித மலைவுக்குச் சற்றும் இடந்தர வில்லை. உதாரணமாக,

"யோகச் சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோகநிர் வானமே யுற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே";

"ஞானச் சமயமே நாடுந்தனைக் காண்டல்
ஞான விசேடமே நாடு பரோதயம்
ஞானநிர் வானமே நன்றறி வானருள்
ஞானபி டேகமே நற்குரு பாதமே".

இவை சிவாகமத் திருமந்திரப் பொருள்களாகும். இவற்றுள் சிவயோக சிவஞானத் துறைகளிலுள்ள நன்னான்கு நிலைகளையும் அவற்றாலுறும் பயன்களையும் தெளிய வுரைத்துள்ளார் திருமூலபிரான். இவற்றின் பொருளை யறிந்தோர்க்கு சிவயோகத்துக்கும், சிவஞானத்துக்குமுள்ள இயைபு புலனாகும். மேலாகப் பார்ப்பவர்க்குங்கூட யோக நிலை ஞானநிலைக்கு ஒரு படிதான் தாழ்வானது என்று புலப்படும். சிவகுரு கடாட்சத்தின் மூலமாய் முத்தி பஞ்சாக்கர உபதேசம் பெற்று

இறையடி நிலையிற் கூடாத யோகாரூடருக்கும் பிறவிநோய் தீர்வதில்லை யாதலால் பயனைப்பொருத்து யோகியின் முடிந்த நிலை மோன ஞானியின் முடிந்த நிலைக்குக் கீழானது என்னும் உண்மை "உன்னுந்துரியமும் ஈசனோ டொன்றுக்கால் — பின்னையும் வந்து பிறந்திடுந்தானே,' என்ற திருமந்திர மெய்யுரை கொண்டும், "உற்ற சரிதையனுக் கோராயிரம் பிறப்பு—மற்றவர்க்கு நூறாகும் வன்பிறப்பு — முற்றுகின்ற — யோகிக் கொரு பிறப்பு உண்மைச் சிவஞான — மோகிக் கிப்பிறப்பின் முத்தி" என்ற ஞானவள்ளலாரின் மெய்ப் போதனையைக் கொண்டும் உறுதிப்படும்.

எண்ணுறுப்புக்களைக் கொண்ட சிவயோகத்தில் ஏழாவது கூறு தியானம்; முடிவான கூறு சமாதி (நிட்டை). மேலாலவத்தையிலுள்ள சிவயோகிக்கு நான்காவது அவத்தை (நிலை அல்லது யோகபூமி) பரதுரியமெனப்படும். இதனை யோகி தியானத்தாலடைகிறார். இந்திரியங்களை யொருவி மனதைத் தன் வசமடக்கி தன்னகத்தே ஒரு குறியின்கண் தன்னறிவை நிறுத்தியடையும். இத்துரிய நிலையில் சிவயோகி தன் உண்மை இயல்பை உணர்கிறார். இதனை, "உன்னையறியாது உடலை முன் நானென்றாய்—உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்" என்ற திருமந்திரவாக்கு உறுதிப்படுத்தும்.

மேலே குறித்த திருமந்திரச் செய்யுட்களில் யோகவிசேடனாகிய தியான யோகி துரிய நிலையில் தன்னைக் கண்டறிவது போல ஞானச் சமயியும் தன்னைக் காண்கின்றார் என்று நாயனார் கூறியுள்ளார். ஆதலால் யோகவிசேட நிலை ஞானச் சமய நிலைக்குப் பயனில் ஒப்பாகு மென்றவாறு. அப்பால் தியானயோகி பாசத்தை யொருவி உருவாய 'சத்திரத் தியானத்தில் நிலைத்தபோது தற்பரனுடைய திருவடிக் காட்சியை சோதிவடிவில் தன்னகத்துட்கண்டு தேறுகிறார். ஈசன், "ஊனமிலா யோகத்தில் உள்ளொளியாயே நின்றான்"; "உந்திக் கமலத்துதித் தெழுஞ்சோதி"; "பாச மொருவத் தன்னிழலாம் பதி"; "ஒளியின் உருவம் அறியில் ஒளியே—ஒளியும்

உருக உடனிருந்தானே"; "உளங்கொளி யாவதென் உள் நின்ற மாமணிச் சோதி — விளங்கொளியாய் மின்னில் ஒடுங்கி — விளங்கொளியாய்த் துளாகின்றானே" "சத்திகொண்ட எரியில் வடிவாம் — எரிகொண்ட ஈசன் எழில் வடிவாமே", என்ற மெய்ஞ்ஞானிகளின் அநுபவ வாக்குகள் இதனை வலியுறுத்தும். இவ்வித பேரோதயக் காட்சியுறும் சிவயோகியை நிர்வாணி யென்றும் அதேயநுபவமுடைய சிவஞானியை விசேடனென்றும் வகுத்துக் கூறினார் முனி புங்கவர்.

அப்பால், சிவயோகியானவர் திருவருட்பதிவாலும் குருபிரானிடமிருந்து பெற்ற சித்தாந்த மகாவாக்கிய அநுசந்தானத்தாலும் துரியங்கடந்து அதாவது தியானநிலை தாண்டி சிவயோகத்தில் முடிவாகிய துரியாதீத நிலையில் சிவ நிட்டை (பிரம நிட்டை அல்லது ஞானநிட்டை அல்லது சமாதி) உறுகிறார். சத்திநிபாத மென்னுந் திருவருட் பதிவு பூரணமாய் ஏற்படும் நிலை இதுவே. இந்நிலையெய்திய சிவயோகியை யோக அபிடேகனென்றும் ஒத்த பலனையடையும் சிவஞானியை ஞானநிர்வாணியென்றும் நாயனார் கூறினாரிங்கு.

இச்சமாதி நிலையில் ஞானசாதகனுக்கு இருவழி திறக்கும். ஒன்றைப்பற்றி அறிவு சென்றால் எண் சித்திகளிற் பல கைவரும். இதனைத்தான் "ஒண் சித்தியுற்றல்" என்றார் மேலைச் செய்யுளில். "சமாதியில் எட்டெட்டுச் சித்தியும் எய்துமே" என்றதும் திருமந்திர வாக்கே. சித்தியில் மகிழ்வுறும் யோகி பெரும்பாலும் சமாதியிலேயே நிற்பர். ஆனால், அவர் ஞானத்தின் முடிந்த பயனாகிய திருவடிப் பேறென்னும் பரமுத்தி சீவன் முத்தி நிலைகளைக் கைவிட்டவராவார். இப்பேறு துரியாதிதங் கடந்த சுத்த நிலையில் கைவரும் பயனாகும். இச்சுத்த நிலையையும் எண்சித்தி யோகாரூடர் எய்தக் கடவரர்வார். அஃதின்றி "சித்தியினால் மகிழ்ந்தவர்கள் சீவன் முத்தியடையார் — சீவன் முத்தியடைந்தாலுஞ் சடத்தின் முத்தியடையார்" என்றது குருராசர் என்ற ஞான சித்த முனிபுங்கவரின் அநுபவப் போதனையாகும். ஆகை

யாற்றன் எண்சித்தியோகி ஞானப்படியில் ஞானநிர்வாணத் துக்கு மேலேறாமல் நின்று விடுகிறார். சிவஞானத்தில் சரியை முதலிய நான்கு உட்கூறுகளைப் பகுத்துக் காணுங்கால் எண் சித்தியோகியின் நிலை ஞானத்தின் யோகம் என்ற நாதாந்த நல்லொளி நிலைதானொழிய ஞானத்தின் ஞானம் என்ற தன்னை சிவனுள் பொருத்திய திருவடி நீழல் நிலையாகாது.

ஆனால், சிவநிட்டை நிலையில் திறக்கும் முதலாவதாகிய எண் சித்தி வழியைப் பற்றாமல் உதாசீனஞ் செய்து வைராக்கியத்துடன் விலகித் திருவடியே தஞ்சமென்று ஆண்டானடிமைத் திறம் போற்றும் மற்றொரு சுத்தவழியினூடு தன்னறிவைச் செலுத்திச் சாதிக்கும் அதீதயோகி சிவனடியிற் படிந்து சிவஞானியாய்ப் பரமுத்தி யெய்துவார். அவர் நிட்டையினின்று நழுவி விழிப்புற்றுக் கீழ்வரும்போது துரிய சாக்கிர நிலையில் சிவன் முத்தராய் அணைந்தோர் தன்மை எய்தி மிளிர்வார். இதனையே ஞானபீடக நிலை யென்றார் நாயனார். அணைந்தோர் தன்மையை, "செம்மலர் நோன்றாள் சேரலொட்டா" என்ற தொடக்கமுடைய சிவஞான போத சூத்திரத்தாலும் "மனமில்லை மாசில்லை மானாபிமானம்" என்ற தொடக்கமுடைய திருமந்திரத் திருவாக்காலும் அறியலாம்.

ஆதலால் சிவயோகியின் முடிந்த சமாதி நிலைக்கும் சிவஞானியின் முடிந்த பரமுத்தி நிலைக்கும் இடையிலுள்ள வரம்பு அதிநுட்பமானதும் அதிகப் பிரயாசையின்றித் தன்னிழப்பில் திருவருட்சகாயங் கொண்டு கடத்தலுக்கு எளியதுமாகு மென்றார் மேலோர். தசகாரிய உபதேசங் கூறிய ஞான வள்ளலார்.

" அந்நியமே யில்லையெனக் காருயிரா மீசனென
உன்னியவன் தானாக யோகஞ்செய்(து) என்னினைவும்
அற்றவனே யானேமென் றுணர்ந்தத் தெய்தலருள்
உற்றவனே யோகமென வோர் "

என சிவயோக இலக்கணங் கூறியிருத்தலால் சிவசமாதியுற்ற ஞானயோகி அட்டமா சித்திகளில் அழுந்தினுலொழிய சிவானந்தப் பேறு அடைவதற்குத் தடையேதுமில்லையெனப் பக்குவிகள் அறியலாம்.

இம்மையிலோ அல்லது முற் பிறப்பிலோ சிவயோகம் முடிவாயுள்ள சிவதவங்களின் பயனைப் பெற்றுயர்ந்த ஒரு ஞான பாத்திரனுக்கு சிவகுருநாதர் காட்சியளித்து ஞானோபதேசஞ் செய்வாரென்று சிவஞான போதத்தில் மெய்கண்டார் கூறியுள்ளதிலிருந்து சிவயோக சாதனைப் பலனின்றி சிவஞானம் பலிக்காது என்பது சிவாகம முடிவு எனத் தாமும் கண்டுணர்ந்து போதித்தாரென அறியக் கிடக்கின்றது. அதனுற்றன் சிவயோகத்தைப் பக்குவம் முற்றிய இனிய காய்க்கும், சிவஞானத்தை அக்காய் முதிர்ந்த மிக்கினிய பழத்துக்கும் ஒப்பு கூறி விளக்கியுள்ளார் சித்தாந்த ஞானிகள். ஆயினும் முன் காலத்திருந்த சிவஞானச் செம்மல்களாகிய ஒரு சிலர் சிவயோகப் படியிலேறிக் கடக்காமலே சிவஞானிகளாய்த் திகழ்ந்தது எவ்வாறெனின் அப்பரம சீலர்களிற் சிலர் முற்பிறப்பில் யோக தவத்தை முடித்து ஞானப் பழத்தைச் சுவைக்குமுன் அப்பிறவியொழிய அவ்வூழின் வலியால் புதிய பிறப்பைத் தாங்கி வந்து விட்ட குறை தொட்டுக்கொண்டவுடன் சிவஞானப் பாலுண்டு சிவஞானிகளாய்த் திகழ்ந்தார்கள். மற்றுஞ் சிலர் அஞ்ஞான்றே சிவஞான பூரணராயிருந்தும் சிவனருட் கட்டளையைத் தாங்கி பூவுலகிற்குப் போந்து பக்குவ ஆன்மாக்களுக்கு வழிகாட்டிகளாய் அவதரித்து சிவஞானிகளாய் மிளிர்ந்து கட்டளையை நிறைவேற்றிச் சாந்தியுற்றவராவார்கள். இவ்வாறே அவ்வித ஞானச் செம்மல்களின் பூவுலக வாழ்வைக் கருதிப் பற்ற வேண்டுவது அறிவுடையோர் கடனாகும். வேறு விதமாகக் கொள்ளுதல் சித்தாந்த முத்தி நெறிக்கு முரணாகும். ஆதலால் சிவஞானத்துக்கு அந்தரங்க சாதனம் சிவயோகமென்பதைக் கடைப்பிடித் தொழுகல் கற்றறிந்தோர் கடனாகும்.

இந்தவுண்மைத் திருவுந்தியார் சாத்திரத்தைக் கற்றுணர்ந்தோர்க்குத் தெற்றென விளங்கும். இப்பால் இச்சாத்திரத்தின் மூலமும் அதற்கு ஆங்கிலச் செய்யுள் வடிவிலமைக்கப்பட்டதொரு மொழி பெயர்ப்புங் கொண்ட சிறு நூற்பிரதியொன்று சிலகாலத்துக்கு முன் எனக்குத் திருவருட் சம்பந்தத்தாற் கிடைத்தது. அதிற்கண்ட ஆங்கில மொழி பெயர்ப்பைச் செய்யுட் பொருளுடன் ஒப்பிட்டு நோக்கி ஒன்றற்கொன்று முரண்பட்டதாயிருந்ததைக் கண்டு மனம் நொந்தேன். ஏனெனில், முதநூற்பொருளைக் கற்றறியாத ஆங்கில மொழி வல்லுநரிடையில் அந்நூல் பரவிற்றென்றால் அத்துவித சித்தாந்த ஞானப் பொருளைப் பற்றி அவர்களுடைய மனதில் தாழ்வான எண்ணம் எழக்கூடிய முறையில் அம்மொழி பெயர்ப்பு அமைந்திருந்தது. அதனால் விளையக்கூடிய விரும்பத்தகாத பலனை ஒருவாறு தடுக்க முயலுவது உண்மைப் பொருளுணர்வுடையோரின் கடமையெனவுணர்ந்தேன். ஆகையால் முதநூலுக்கு எனதறிவிற் கொண்ட பொருளை திருவருளுதவி கொண்டு விளக்கியெழுதி ஆங்கிலங் கற்றோர்க்கும் உபயோகமாகுமாறு ஆங்கில வசனமொழி பெயர்ப்புங் கூட்டிக் கையேட்டில் எழுதி முடித்தேன். இவ்விதம் திருவருளால் உருப்பெற்ற உரைச்சுவடியை இப்பால் அச்சேற்றிப் வெளியிடச் செய்யலாயிற்று. இவ்வாறு செய்வது திருவருட் பிரேரணையின்மேலேற்பட்டதொரு சிவப்பணி என எண்ணுவதைத் தவிர்த்து பொன்னையேனும், புகழையேனும் நாடியன்று என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்போழ்து நாட்டில் வழங்கிவரும் திருவுந்தியார் நூலை ஆராய்ந்து பார்க்கும் போது ஞானாசிரியர் இந்நூல் முழுவதையும் பொருள் வரிசையில் தொடர்ச்சியாக இயற்றித் தம் மாணவருக்குப் போதித்தருளினாரென்றாவது அல்லது அவருடைய மாணாக்கராவது குருபிரானிடமிருந்து அவ்வப்போது தாம் கேட்ட செய்யுட்களை பொருள் வரிசைப் படுத்தி ஏட்டில் எழுதிவைத்தாரென்றாவது காண்பதற்கிடமில்லை. தமது திரு

வுளத்தில் அவ்வப்போது உதித்த உண்மைகளைக் கொண்டு செய்யுட்களை ஆசிரியர் பல சந்தர்ப்பங்களில் இயற்றி மாண வருக்கு உபதேசித்தருளினாரென ஊகித்தறிய இடமுண்டு எனலாம். இப்பால் இவ்வரிய ஞானயோக நூற்பொருளைக் கற்போர்க்கு அநுகூலமாகும்படி செய்யுட்களை அவ்வவற்றின் பொருளையுன்னிப் புதியவரிசையிலமைத்து இவ்வுரைச் சுவடியை வெளியிடலாயிற்று. எனது உணர்வில் தெளிந்த பொருளின்படி சிவபிரானுடைய தடத்த சொருப இலக்கணங் களையும் அருட்செயல்களையும் பற்றிய செய்யுட்கள் 12-ம், ஞானசாதகனுக்குரிய பொது அறிவுரைகளடங்கிய செய்யுட் கள் 7-ம், சிவயோக ஞானபோதனைகளடங்கிய செய்யுட்கள் 24-ம், முடிவில் சிவபரனின் வாழ்த்துச் செய்யுளொன் றும், நூற்பயனைக் கூறுஞ் செய்யுள் ஒன்றுமாக 45 செய்யுட்களையும் பகுத்து உரை நிகழ்த்தியுள்ளதைக் கற்றோர் ஏற்பரென்று கருதுகிறேன். ஆயினும் செய்யுட் களின் வரிசை முக்கியமன்று; அவற்றின் பொருள்தான் முதலிடம் பெறவேண்டும்.

ஒவ்வோர் செய்யுட்களின் இறுதியில் வளைவுக் கோட்டிற் காணும் எண் நடைமுறைப் பதிப்புகளிற் காணும் வரிசை எண் எனக் காண்க.

இச்சிறிய உரைச்சுவடி அடியேனுடைய சிவகுருபிரானா ரின் கடாட்சத்தையும் எனது விரிவற்ற சித்தாந்த ஞான நூலுணர்வையும் தொடக்க சிவஞான யோகாநுபவத்தையும் அடிப்படையாகக் கொண்டதாகும். இதிற் குற்றங் குறை களைக் காணுஞ் சித்தாந்த சாத்திரவல்லுநர்களும் சிவயோகி களும் மோனிகளும் பெருமனங்கொண்டு அடியேனுக்கு எழுதித் தெரிவித்தால் குற்றத்தைக் களைந்து குணத்தை நிரப்பி அடுத்த பதிப்பு வெளியிடுவதற்குப் பேருதவி புரிந்தவர் களாகிய அப்பெரியார்கட்கு அடியேனுடைய நிறைந்த நன்றி உரித்தாகும். இது குற்றமற்ற உரைச் சுவடியாயில்லை யெனி னும் இவ்வரிய ஞானயோக சாத்திரத்திற்குப் பல யோகாரூட

அநுபவிகள் சான்றாண்மை மிக்க சாத்திரப் பெரியோர்களின் உதவி கொண்டேனும் நூலின் உண்மைப் பொருளைப் பிரதிபலிக்கவல்ல குற்றமற்றதோர் சிறந்த உரைநூல் தமிழகத்திற் பரவுவதைக் கற்றோரனைவரும் ஏற்பாரென்பதில் நம்பிக்கையுடையேன் என்பதையும் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்பால் இவ்வுரை நூல் மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத்தின் வெளியீடாகப் பிரசுரமாவதைக் கேட்டதும் தமிழறிந்தோர் இந்நூலைப் பெரிதும் நாடுவார்கள் என்பது திண்ணம். ஏனெனில் தற்போது மதுரை ஆதீன கர்த்தராயுள்ள 291-வது குருமகா சந்நிதானம் "திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீஞான சம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமி அவர்கள்" ஆவர். இவர்கள் சித்தாந்த சைவ சமயத்தைப் பொது மக்களிடையில் பரவச் செய்வதையே தங்களுடைய தனி சிவப் பணியாகக் கொண்டு இதற்கேற்ப இறந்தவர்களுடன் உரையாடல், இரேகை சாஸ்திர ஆராய்ச்சி முதலிய பற்பல உபாயங்களைக் கையேற்றுத் தீவிர முயற்சி செய்து வருவது தமிழகம் முழுவதிலுமுள்ளவர்க்குத் தெரிந்துள்ளது. இந்துக்களிடையே சன்மார்க்கத்தைப் பரவச் செய்வது ஒருபுறமிருக்கபிறமதச் சார்புடையவர்களும் தலை சிறந்த சித்தாந்த நெறியை மனமாற ஒப்புக் கொள்ளும்படி அவர்கட்கு பல நாட்களில் நீண்ட நேரங்களில் பகிரங்கமாகத் தங்கள் சந்நிதியில் வைத்து போதனை செய்து வருவதும் சைவ சித்தாந்தக் கருத்துடைய பல அரிய ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டு வருவதும் நம் தமிழகத்தில் ஓர் புதிய சரித்திரத் திருப்பத்தைத் தோற்றுவிப்பதற்கு ஆணிவேர் போன்றுள்ளன. அந்நாளில் தொன்மை மிக்க சைவ சமயத்துக்குப் பல வழிகளில் இடையூறுகளைச் செய்து வந்த சமணர்களுக்குச் சைவ சமயத்தின் மேதக்க சிறப்பும் ஒப்பற்ற ஆற்றலும் விளங்கும்படி செய்து சமண குருக்களையும் அரசர்களையும் சிவசன்மார்க்கர்களாக ஆக்குவித்து உலகப் பிரசித்தி பெற்ற திருஞானசம்பந்தசம்பாச்சாரிய அவர்களின் சுவட்டைப் பின்பற்றி அவர்களின் ஞாபகச்

சின்னமாய் அமைந்துள்ள மதுரையிலுள்ள சித்தாந்த ஆதீனத்தை இன்னான்று பரிபாலித்துவரும் பரமாச்சாரிய சுவாமிகள் இவ்வித சிவப்பணியைச் செய்து வருவதைக் காண சிவசன்மார்க்க உலகமே அவர்கட்கு மனம் நிறைந்த வந்தன வழிபாடு செய்யக் கடமைப்பட்டிருக்கிறது எனலாம்.

மேலும் இந்திய சமய சமூகக் கலாச்சாரங்களை நேரில் கண்டு தெரிந்து கொள்ளவரும் அயல் நாட்டவர்கள் மாதந் தோறும், வாரந்தோறும், மதுரை ஆதீனத்துக்கு வந்து பரமாச்சாரிய சுவாமி அவர்கள் ஆங்கிலத்தில் நிகழ்த்தும் சித்தாந்த சமய பிரசங்கங்களையும் உரையாடல்களையும் போதனைகளையும் கேள்வி சமாதானங்களையும் கருத்துடன் கேட்டு மகிழ்வெய்தி சிரஞ்சாய்த்துச் சென்று கொண்டிருக் கிறார்கள்.

இவ்விதச் சிறப்புக்கள் வாய்ந்து விளங்கும் மதுரை ஆதீன கர்த்தராகிய பரமாச்சாரிய சுவாமி அவர்கள் "திருவுந் தியார் – உரைச் சுவடியை" ஆராய்ந்துபார்த்துத் தங்களு டைய ஆதீனத்தின் சார்பில் அதனை (வெளியிடத் திருவுளங் கொண்டு ஏற்றுக்கொண்டதற்கு அடியேன் மனம் நிறைந்த நன்றியை ஆச்சாரிய சுவாமி அவர்கட்கு பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், இமைப் பொழுதும் எனது நெஞ்சைவிட்டு அகலாது ஆண்டருளும் மதிகுருபரனார் கருணையுடன் அடியேனுக்கு அருளிய இரண்டு தீட்சா நாமங்களில் ஒன்றான "தேசிகர்" என்ற சொல்லை எனது இயற்பெயரோடு பத்திப் பரவசத்துடனும் பணிவுடனும் இணைத்துக் கொண்டுள்ளேன் என்பதை இந்நூலின் மூலம் வெளியிட விரும்புகிறேன்.

"திருமந்திரம்"<br>திருநகர்<br>மதுரை–6.

இப்படிக்கு<br>உரைச்சுவடி எழுதினவர்<br>சிவனடியார்<br>**க. மாசிலாமணி தேசிகர்.**

உ

# திருவுந்தியார் — உரைச்சுவடி

## மேற்கோள் நூல் அட்டவணை

| வரிசை எண் | நூலின் பெயர் | ஆசிரியர் பெயர் |
|---|---|---|
| 1 | திருக்களிற்றுப் படியார் | திருவுந்தியார் ஆசிரியரின் குரு வழி திருக்கடவூர் உய்யவந்தார். |
| 2. | சிவஞான போதம் | மெய்கண்ட சிவாச்சாரியார் |
| 3 | சிவஞான சித்தியார் | அருணந்தி சிவாச்சாரியார் |
| 4 | உண்மை விளக்கம் | மனவாசகம் கடந்த சிவாச்சாரியார் |
| 5 | சிவப்பிரகாசம் | உமாபதி சிவாச்சாரியார் |
| 6 | மூவாயிரந் தமிழ் (திருமந்திரம்) | திருமூலநாதர் |
| 7 | திருக்குறள் | திருவள்ளுவதேவர் |
| 8 | ஞானக்குறள் | ஔவைப் பிராட்டியார் |
| 9 | விநாயகர் அகவல் | ,, ,, |
| 10 | திருவாசகம் | மணிவாசகப் பெருமான். |
| 11 | தேவாரம் | தேவார மூர்த்திகள் மூவர் |
| 12 | பகவத்கீதை (தமிழ்ச் செய்யுள்) | திருப்பட்டனூர் |
| 13. | திருஅருட்பா | இராமலிங்க வள்ளலார் |
| 14. | சிவஞானபோதச் சிற்றுரை | சிவஞான முனிவர் |
| 15 | சிவானந்த போதம் | சுந்தரானந்தர் |
| 16 | சிவானந்தலகரி | ஆதி சங்கராச்சாரியார் |
| 17 | யோக சாராவளி | ,, ,, |
| 18 | ஞானாமிர்தம் | வாகீசர் |
| 19 | முதுமொழி ஞானம் | அகத்தியமா முனிவர் |
| 20 | தாயுமானவர் பாடல் | தாயுமானார் |
| 21 | வள்ளலார் சாத்திரம் | ஞானவள்ளலார் |
| 22 | அவிரோத உந்தியார் | சிவப்பிரகாசர் |
| 23 | சித்தாந்த சாராவளி | |

இவைகளும் வராகோபநிடதம், யோக சூடாமணி, தியான பிந்து, யோககுண்டலி, அடயோக பிரதீபகை என்ற வடமொழி யோக நூல்களும், தத்துவ விளக்கம் என்ற சித்தாந்த ஞானநூலும், பதினெண் சித்தர்களின் பல யோக ஞான நூல்களும் ஆவன.

திருவியலூர் உய்யவந்ததேவ நாயனர் இயற்றியருளிய

# திருவுந்தியார்

## முதனூல்—பொருண் முறை

(ஆங்கில மொழிபெயர்ப்புடன்)

## இலக்கணச்சந்தி பிரிந்தது

## பகுதி—1. சிவபரன்

(சொரூப கூடத்த நிலையன்)

1 *அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்*
*சகளமாய் வந்தது என்று உந்தீபற*
*தானாகத் தந்தது என்று உந்தீபற.* (1)

**(God, Transcendental and Immanent)**

Truth is One (which is God). Formless (as Sachidanand) and inconceivable to one and all. In His grace, He assumes form (Advaita) and reveals Himself to man; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(அறிவு சொரூபன்)

2 *எங்ஙன் இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லுகேன்*
*அங்ஙன் இருந்தது என்று உந்தீபற*
*அறியும் அறிவு அதுஅன்று உந்தீபற.* (4)

### (Incomprehensible Being in Wisdom)

How can I describe Him as to what He is? He is beyond description. What is comprehended by human intellect is not He; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (தடத்த உலகவடிவன்)

3 அதுஇது என்னாது அனைத்தும் அறிவாகும்
அதுஇது என்று அறிந்து உந்தீபற
அவிழ்ந்த சடையான்என்று உந்தீபற. (39)

### (The Universe, His objective form)

The Supreme Lord Siva of matted locks, is All-Wisdom. He cannot be conceived by your (human) intellect as this and that. But you should realise that (in His embodied subtle state of Advaita) He appears as the seen Universe; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (பாவனாதீதன்)

4 ஆக்கில்அங் கேஉண்டாய் அல்லதுஅங்கு இல்லையாய்ப்
பார்க்கில் பரம் அதுஅன்று உந்தீபற
பாவனைக்கு எய்தாதுஎன்று உந்தீபற. (9)

### (He is beyond fantasy)

If, out of your imagination, you create a form (for the Lord) He appears to be there (for a time). If not, not. Such a form (which is limited and impermanent) is not the Lord. He is beyond your fantasy (bhavana); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(சீவ அறிவாதீதன்)

5. கருதுவ தன்முன் கருத்தழியப் பாயும்
ஒருமகள் கேள்வன் என்று உந்தீபற
உன்ன அரியன் என்று உந்தீபற. (19)

**(The Lord eludes intellectual inquiry)**

The Lord, who is the consort of (Chit–Sakti) the incomparable Lady, eludes your intellectual inquiry (about Him) at every step. He is too difficult to comprehend (by your worldly knowledge); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(அதிசூக்கும சருவவியாபி)

6. சொல்லும் பொருள்களும் சொல்லா தனவும் அங்கு
அல்லனாய் ஆனன் என்று உந்தீபற
அம்பிகை பாகன் என்று உந்தீபற. (21)

**(The Lord extremly subtle and Ominipresent)**

The Lord whose (left) half is His consort (Parvathi) is neither the objects (Known and) expressed by words, nor those (unknown and) unexpressed. But He is Omnipresent in all; knowing thus, rouse, rouse your Kundalini (for realisatian).

(சீவ சிருட்டி தாதா)

7. கிடந்த கிழவியைக் கிள்ளி எழுப்பி
உடந்தை யுடனே நின்று உந்தீபற
உன்னையே கண்டது என்று உந்தீபற. (14)

**(Man, God's creation and abode)**

Identifying Himself with (Tirodana) Sakti, which He actuates, the Lord not only willed that you be born

(here on earth) but also stood (invisibly) united with you; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation.)

(இதுவுமது)

8 மூலை இருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியர் என்று உந்தீபற
தவத்தில் தலைவர் என்று உந்தீபற. (12)

**(The aforesaid)**

The Lord (out of His Grace) helps the soul out of its unknown corner (in the other world after death) to (take a fresh body and) be reborn on earth (to improve its knowledge). He is indeed All-Powerful, (All-Merciful) Lord. He is the goal of all penance (viz., Sariya, Kriya and Yoga); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(திதிசம்மார கருத்தா)

9 அண்டம் முதலாம் அனைத்தையும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே உந்தீபற
குறைவற்ற செல்வம் என்று உந்தீபற. (42)

**(He the world's sustainer and destroyer)**

The Lord Siva (in his Ominipresence) sustains the entire Universe and swallows it up (in the end and yet stands Absolute above all). Know Him as the Lord of Eternal Bliss; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(ஆளுடை நாதன்)

10 ஏகனும் ஆகி அனேகனும் ஆனவன்
நாதனும் ஆனான் என்று உந்தீபற
நம்மையே ஆண்டான் என்று உந்தீபற. (5)

### (Gracious Lord and Master)

He, being One, has (by His immanence) become many at the same time. He is the sole Lord (of the Universe). As our gracious Master, He has complete sway over us (His servants); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (அருளாளன்)

11. மருளும் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவாதே உந்தீபற
அதுவே இங்கு உள்ளதுஎன்று உந்தீபற. (18)

### (He, the Lord of Grace)

The Lord's inner eye (of Wisdom in His adwaita state) does not cognize delusion or knowledge in man (as they are perishable products of Maya). Yet, He is inseparably united to Grace which alone remains (as the substratum) in this world; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (இதுவுமது)

12. அவன்இவன் ஆனது அவன்அருளால் அல்லது
இவன்அவன் ஆகான்என்று உந்தீபற
என்றும் இவனே என்று உந்தீபற. (40)

### (The aforesaid)

The Lord (being immanent in all), out of His Grace, appears as (and acts through) the soul (in its wordly state). And, but for His Grace, the soul cannot become (merged in and enjoy through) the Lord (in its

final spiritual state of beatitude). It will ever remain as Jiva (rolling in the whirlpool of birth and death); knowing thus, rouse, rouse your Kundalini (for reali·sation).

## பகுதி—II. அறிவுரை

### (அசத்தை ஒருவுதல்)

13. பழக்கம் தவிரப் பழகுவது அன்றி
உழப்புவது என் பெணே உந்தீபற
ஒருபொரு ளாலேஎன்று உந்தீபற. (2)

### (Giving up the unreal)

It is the natural habit of man (to identify himself with the body). Give it up Oh, Sishyai! By the Grace of the Lord take to the practice (of Sariya, Kriya and Yoga to know your true self). Delaying will be waste·ful; knowing thus, rouse, rouse your Kundalin (for realisation)

### (மெய்யன்பு படிதல்)

14. உள்ளம் உருகில் உடனுவர் அல்லது
தெள்ள அரியர் என்று உந்தீபற
சிற்பரச் செல்வர்என்று உந்தீபற. (7)

### (Love of the Lord and His creatures)

Unless your soul melts (in love of the Lord and His creatures) you will not realise His subsisting pre·sence by your side. Otherwise, He the Lord of All–absorbing Wisdom remains incomprehensible; know·ing thus rouse, rouse your Kundalini (for realisation).

## (மாயாவாதத்தைப் பழித்தல்)

15. வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர்
பித்தேறி னார்கள் என்று உந்தீபற
பெறுவதுஅங்கு என்பெ(ண்)ணே உந்தீபற. (28)

## (Decrying the Ekanma-Mayavadins)

Those (Ekanma Mayavadins) who are looking for the seed (the ultimate cause) forgetting the offshoot from the seed (the manifest world in which the Lord is immanent) are very much deluded. For, what can they gain thereby? (little or nothing); knowing thus rouse, rouse your Kundalini (for realisation).

## (புறச் சமயத்தை ஒருவுதல்)

16. சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்று
ஆவி அருதேஎன்று உந்தீபற
அவ்வுரை கேளாதே உந்தீபற (31)

## (Avoid pseudo-philosophers)

Do not take to other paths (of pilosophy except Adwaita Siddhantha) which are (useless) like empty corn-ears and waste not (and cut short) your life. Do not even lend your ear to their (eloquent) doctrines; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

## (அறமற்ற இல்வாழ்வைப் பழித்தல்)

17. பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டார் என்று உந்தீபற
காணாதார் காணார் என்று உந்தீபற. (35)

### (Decrying non-dharmic house holder)

A man and his wife (living in adharma) may be compared to a devil and a person possesed by it respectively. One who realises this truly understands (the nature of a purposeless house holder's life) and not otherwise; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (மாயாக்கள்ளை ஒருவுதல்)

18. *காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே*
*மாயக்கள் உண்டார் என்று உந்தீபற.*
*வறட்டுப் பசுக்கள் என்று உந்தீபற.* (43)

### (Avoiding inebriating liquor of passion)

Those who cannot obtain and enjoy the Nector of True Wisdom that wells up within the body are satisfied with the inebriating liquor of sensual pleasures. They resemble barren cows; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (காயத்தைக் காத்தல்)

19. *முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து*
*அத்தி பழுத்தது என்று உந்தீபற*
*அப்பழம் உண்ணாதே உந்தீபற.* (41)

### (Fortify the physique by giving up lust)

Do not allow creepers of lust entwine your soul-which is to attain Mukti (or liberation from birth and death) and make your body soon to wither. Beware lest you reap such a fruit; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

## பகுதி—III. சிவயோக ஞானம்

### (பற்றற்றானைப் பற்றல்)

20. பற்றை அறுப்பதுஓர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பர் என்று உந்தீபற
பாவிக்க வாரார் என்று உந்தீபற. (15)

### (Clinging fast to the Feet of the Lord)

If you cling fast to the (Feet of the) Lord, He will bestow (on you) His (gracious) help to cut asunder your (unsuitable) attachement (to the world and to your self). But, if you approach him through your mental fancy (Bhavana), you will be denied such help; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (ஆறாதாரங் கண்டேறல்)

21. ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல உந்தீபற
விமலற்கு இடம்அது என்று உந்தீபற. (8)

### (Godhood beyond six psychic centres)

Beginning from Muladhara (concentrate your pure mind on the several stages upward till through Brahmaranthra you) pass on to (the bounless expanse of) Niradhara which is the Lord's purest abode; knowing thus, rouse, rouse your Kundalini for realisation .

### (பிராண மனோலயம்)

22. காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவது ஆற்றல் என்று உந்தீபற
அல்லாதது அல்லல் என்று உந்தீபற. (22)

### (Controlling mind and breath)

Divert your mind to the thought centre and thereby divert your breath too (towards its centre) and make them both still. That achieved is the true might (of a Siva yogi). Other wise misery (of birth and death) will be your lot; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (நோக்காது நோக்கல்)

23. தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்
நோக்கில் குழையும் என்று உந்தீபற
நோக்காமல் நோக்க என்று உந்தீபற. (11)

### (Seeing and yet, not seeing)

The Lord (whom the yogi or the gnani realises) as Tharparam (the Master) remains unaffected as He moves the Universe (by His sankalpa) and yet moves it not (by Karana). He becomes easy of perception to the inner eye of a yogi (of Divine Wisdom) who will shut his eyes up (to the world and his self); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (மனமிறந்த யோகி)

24. உழவாது உணர்கின்ற யோகிகள் ஒன்றோடும்
தழுவாமல் நிற்பர் என்று உந்தீபற
தாழ்மணி நாவே போல் உந்தீபற. (16)

### (Yogi in divine contemplation).

Yogis who, being consciously attached to the (Feet of the, Lord, stand still (in their divine contemp-

lation) remain unattached to anything else like the motionless tongue of a silent bell; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (சிவதுரிய ஞானநிலை)

25. நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடில்
நாலாம் நிலையாம் என்று உந்திபற
நாதற்கு இடமது என்று உந்திபற. (36)

### (Siva's State of Jnana Turiya)

If the Yogis anthakarana (mind) becomes pure, still and united to the unattached soul the yogi attains the fourth state (of yoga called jnana Turia) which is the Lord Siva's State; knowing thus. rouse, rouse your Kundalini (for realisation).

### (நாதானு சந்தானம்)

26. திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிடு என்று உந்திபற
நேர்பட அங்கே நின்று உந்திபற. (17)

### (Concentration on subtle Nada)

If you (in Turiya Yoga) follow and concentrate on the subtle sound (Nada) that emenates (from within your inner eye of wisdom) will feel the August Presence of the Lord of Cosmic Dance where you have to take your stand and worship (His Glory); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(பஞ்சாக்கரத் தியானம்)

27. அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சாது உணர்ந்து இருந்து உந்தீபற
துய்ய பொருள் ஈதுஎன்று உந்தீபற. (10

**(Contemplation of the Lord of Panchakara)**

Realising that the Lord is the Purest of the pure ever remain wakeful in cognition of Him by making (your anthakarana and the soul which are actuated by) the five letters of Pravana coalesce with (Him who is conceivable by) the five (letters of Mukti) and wisdom (which is the essence of soul) with wisdom (which the Lord personfies); knowing thus, rouse your Kundalini (for realisation).

(துரியாதீத சிவமுத்தி நிலை)

28. ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற்ற இடம்சிவம் உந்தீபற
தேடும் இடம்அது அன்று உக்தீபற. (13)

**(The state of liberation beyond Turiya)**

If a Turiya Yogi (still with a touch of his anthakarana) becomes free from all traces of it and attaches himself entirely to (the Feet of) Lord the soul reaches a state beyond Turiya where it loses its individuality in the Lord, where there is no more seeking and where all further quests cease. This is the Siva's state of liberation (Mukti); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation)

### (இதுவுமது)

29. சொல்லும் இடம்அன்று சொல்லப் புகும்இடம்
எல்லை சிவனுக்கு என்று உந்தீபற
என்றால்நாம் என்செய்கோம் உந்தீபற. (29)

### (The aforesaid)

The state which has to be finally reached by a Thuriya Śiva Yogi through guidance (of his Gnana guru and by diving deep into the Supreme Wisdom) cannot be conceived by the human mind and expressed in words as it is the Supreme State of Siva (who is beyond all conception). We (the ordinary human beings) are helpless in this respect; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (திருவடிபற்றிய துறவு)

30. எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டார் உலகம் என்று உந்தீபற
வீடே - வீடாகும் என்று உந்தீபற. (24)

### (Firm stand at the Lord's Feet.)

Those Thuria Yogis who cling fast to the Feet of the Lord of eight attributes will be the true renouncers of the world. Such a renunciation itself will lead them to liberation from death and birth –Mukti – (as it paves the way towards Godhood); knowing thus rouse, rouse your Kundalini (for realisation)

### (சீவன் சித்தாசி ஒன்றுபடல்)

31. சித்தமும தீய கரணமும் சித்திலே
ஒத்ததே ஒத்தது என்று உந்தீபற
ஒவ்வாதது ஒவ்வாது என்று உந்தீபற. (25)

## (Jiva becoming pure spirit to attain Godhead)

If on realising the spiritual identity of the purified soul (which is eternal and) knowledgeable) with the Lord (who is Eternal All knowing and All Bliss) the Turiya Jnana Yogi loses his individuality in the Lord. His mind and senses would become completely scorched (and his craving for the world will also cease); knowing, thus, rouse, rouse your Kundalini (for realisation).

(உயிரில் இறையொளி படிதல்)

32. வீட்டில் இருக்கில்என் நாட்டிலே போகில்என்
கூட்டில்வாள் சாத்தி நின்று உந்தீபற
கூடப் படாதது என்று உந்தீபற. (30)

## (Becoming annointed with the Light of the Lord)

When the Siva-Jnani lives in his house (as an house holder) or in the forest (as an ascetic) he should attain and cling to the state where his soul is annointed with the Light of the Lord. Otherwise, it will be not possible for him to continue to be in union with the Lord; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(அமுதநிலை)

33. உள்ளும் புறம்பும் நினைப்புஅறில் உள்உள்ளே
மொள்ளா அமுதுஆம் என்று உந்தீபற
முளையாது பந்தம் என்று உந்தீபற. (26)

### (Imbibing the Divine Nector)

If a Siva–Jnana Yogi annihilates every thought and reminiscence from his mind he will receive within himself the (untouchable and) measureless Divine Nector; and the seed of birth (namely ignorance) sprouts in him no more; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (அல்லல் அறுத்தல்)

34. *அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்கு*
*அவிழும்இவ் அல்லல் என்று உந்தீபற*
*அன்றி அவிழாது என்று உந்தீபற.* (27)

### (Becoming misery – free)

A Siva–Yoga Jnani whose soul becomes merged with the Lord (of Supreme Wisdom) who is free from all misery will himself become free from his life's misery (of pleasure and pain). Otherwise he will never be free from it; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (தன்பணி அறுத்தல்)

35. *நம்செயல் அற்றுஇந்த நாம்அற்ற பின்நாதன்*
*தன்செயல் தானே என்று உந்தீபற*
*தன்னையே தந்தான் என்று உந்தீபற.* (6)

### (Becoming free from Egoism)

When a Jnana–yogi realises (in his deep contemplative trance) that the soul is entirely dependent on the Lord (through every moment of his life) the scales of 'I'–ness and mine–ness drop off his soul. From that

moment (the fruit of his) actions (which are limited to the Lord's service) pertain to the Lord (without affecting the doer); and (on such an enlightened soul) the (merciful) Lord bestows His true state (of sublime and eternal Bliss); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(இதுவுமது)

36. கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாரார் என்று உந்தீபற
பிறப்பு இறப்பு இல்லைஎன்று உந்தீபற. (3)

(The aforesaid)

The Jnana-yogi who realises the Lord (as Master) and acts (as His servant without attachment) has no more karma to make him reborn in flesh. Therefore he has no more birth and no more death (in this world); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(இதுவுமது)

37. சென்ற நெறிஎல்லாம் செந்நெறி ஆம்படி
நின்ற பரிசு அறிந்து உந்தீபற
நீசெயல் செய்யாதே உந்தீபற. (37)

(The aforesaid)

On realising that the Turiya Jnana state which a yogi has reached following the several intermediate states, (such as sariya and kriya), is entirely due to (the continuing grace of) the Lord abiding in him, he must give up all actions (emanating from his selfwill or egoism). knowing thus rouse, rouse your Kundalini (for realisation).

(அறிவின் முடிந்த பயன்)

38. பொற்கொழுக் கொண்டு வரகுக்கு உழுவதுஎன்
அக்கொழு நீஅறிந்து உந்தீபற
அறிந்துஅறி யாவண்ணம் உந்தீபற. (38)

**(The eternal fruit of Wisdom)**

Why reap (a base) varagu crop with the aid of a golden plough? Give up your little knowledge and fleeting pleasures and enjoy eternal bliss through divine Wisdom which is your heritage; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(அத்துவித முத்திப் பேறு)

39. கள்ளரோடு இல்லம் உடையார் கலந்திடில்
வெள்ள வெளியாம் என்று உந்தீபற
வீடும் எளிதாம் என்று உந்தீபற. (23)

**(Final emancipation and eternal Bliss)**

If the dweller in the body (of a Turia Jnana yogi) becomes one (in Adwaita relation) with the Lord (who being immanent in the body hide like) a thief, his emancipation (from the bonds of birth and death) and his enjoyment (of eternal Bliss) in His vast expanse becomes easy of attainment; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

(நின்மல துரிய சாக்கிரம்)

40. துரியம் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரம்
துரியமாய் நின்றது என்று உந்தீபற
துறந்தார் அவர்கள் என்று உந்தீபற. (32)

## (Wakeful state of a Jivan Mukta)

Even in his seemingly wakeful state a (Siddhanta) Jnana yogi in Turiyadhita state (who is immersed in God-consciousness) will ever be in his self-conscious Turiya state (of deep devotion to the Feet of the Lord). Such yogis only have truly renounced (the world); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

## (நின்மல சாக்கிர சிவபோகம்)

41. பெற்றசிற் றின்பமே பேரின்பமாய் அங்கே
முற்ற வரும் பரிசு உந்தீபற
முளையாது மாயை என்று உந்தீபற. (33)

## (Siva Boga of Jivan Mukta)

The little worldly pleasures which (unasked for) reach a Turiadhida yogi (or fully liberated soul or jivan mukta) in his wakeful (Turiya) state are enjoyed as divine bliss as he (who is already one with the Lord) enjoys them only through the Lord; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

## (பேரின்ப சுத்த நிலை)

42. இரவு பகல்இல்லா இன்பவெளி யூடே
விரவி விரவிநின்று உந்தீபற
விரைய விரையநின்று உந்தீபற. (20)

### (Swimming and immersing in the sublime state of Bliss)

Reaching the state of Bliss (through and beyond Turiya) where there is neither night nor day swim and merge your self completely in it (the Lord's feet beyond Bindu and Nada) in full speed; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (சிவானந்தப் பேறு)

43. பேரின்ப மான பிரமக் கிழத்தியோடு
ஓர்இன்பத்து உள்ளான் என்று உந்தீபற
உன்னையே ஆண்டான் என்று உந்தீபற. (34)

### (Final State of Bliss and Beatitude)

The Lord who is Mukta's benign Master and who is inseperable from Arul Sakti (the Personification of Bliss) bestows eternal Bliss on the Mukta; knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

### (சிவபரன் வாழ்த்து)

44. சிந்தையின் உள்ளும்என் சென்னியினும் சேர
வந்தவர் வாழ்க என்று உந்தீபற
மடவாள் உடனே என்று உந்தீபற. (44)

### (Prayer to Siva-Paran)

May the Lord (Parama-Siva) who with his consort (in seperable Parasakti) came to live with me (in ever-lasting union) both in my mind (in my wordly state) as well as on the crown of my head (in my spiritual state) live for ever; praying thus rouse, rouse your Kundalini (for realisation).

### (நூற்பயன்)

45. வையம் முழுதும் மலக்கயம் கண்டிடும்
உய்யவந் தான்உரை உந்தீபற
உண்மை உணர்ந்தார் என்று உந்தீபற. (45)

### (Purpose of this Treatise)

The Jnana yogi who realises (within himself) the true essence of this treatise (viz, Tiruvunthiar) of Uyyavantha Devar will witness the dissipation of (the bonds of his own Annavamala (the cause of ignorance) which binds the entire living beings of this world in diverse ways); knowing thus, rouse, rouse your Kundalini (for realisation).

The end of Tiruundiyar, (i. e., The Holy Kundalini or The Serpent fire)



உ

திருமுருகானந்தா

# திருவியநல்லூர் உய்யவந்த தேவநாயனார்
## அருளிச்செய்த

# திருவுந்தியார் — உரைச்சுவடி

## (மூலமும் விளக்க உரையும்)

### காப்பு

முந்தை மலஞ்சிதைய முத்திநெறி கண்டெய்த
உந்தீ பறவென்றே உய்யவந்த தேவருள்
உந்தியார் முன்னூற்றிவ் வுரைச்சுவடி கடைத்தேற
தொந்திசரி கணபதிதாள் தொழுதிறைஞ்சி
நின்றேனே.

(பொதுவிளக்கம்): தனித்தனி செய்யுட் பொருளைக் காணுமுன் ஒவ்வோர் செய்யுளின் இரண்டாவது, மூன்றாவது அடிகளின் ஈற்றிலுள்ள "உந்தீபற" என்ற பதத்தின் பொருளையும் "திருவுந்தியார்" என்ற நூற்பெயரின் பொருளையும் ஆராய்ந்தறிவாம்.

"உந்தீபற" என்ற தொடர் செய்யுளில் இரட்டித்த பதமாய் நிற்பதன்றி நூலின் பெயருக்குக் காரணமாயுமிருக்கிறது. இது சித்தாந்த சிவயோக

ஞானநூலாகையால் ஞானபரமாகவே சொற்களுக்குப் பொருள் காணவேண்டும். உந்தீ (உம்+தீ) என்ற சொல் உமது கனல் என்ற நேர்பொருளைக் கொள்ளும் ஞானயோக நூலின்படி மகனுடலில் குண்டலினி (குண்டலி) என்றதொரு தெய்வீக சக்தி கனல் வடிவில் மூலப்பகுதியில் நின்று உடலுக்கு வேண்டிய சூட்டைக் கொடுத்து உதவுகிறது. உடல் அசைதல், உயிர்த்தல், வளர்தல், தேய்தல், மாருதல் போன்ற பிராணச் செயல்கட்கும் அந்தக்கரண தொழிற்பாட்டுக்கும் உறுதுணையாயிருப்பது இச் சக்திதான். இதன் ஆதிக்கம் வீணத்தண்டின் அடி நிலையாகிய மூலாதாரம் முதல் மணிபூரகம் என்ற உந்திச்சுழித்தடம் முடிய பரவியிருக்கிறது. உமது தீச்சக்தி படியும் இடமாதலாற்ருன் நாபித்தானம் தமிழில் உந்தி எனப்பட்டது. உந்தீ என்றது கடைக் குறையாக உந்தி என்ருயிற்று. இதனை உந்திக்கமலம் என்றுங் கூறுவர். இதற்கு மேல் மற்றும் இரண்டு முக்கிய தானங்கள் கமலவடிவில் உள. அவைதாம் இதயகமலம், சகத்திரதள கமலம் எனப்படும். அடிக்கமலமாகிய உந்தி அக்கினி பீடம், நடுக்கமலமாகிய இதயம் சூரிய பீடம், முடிக்கமலமாகிய சகத்திரதளம் சந்திரபீடம் எனப் பெயர் பெறுவனவாம்.

உந்திக் கமலத்துள்ள குண்டலினி சக்தி மூலாதாரத்தில் எண்வளையமாய் வட்டவடிவில் சுருண்டுகிடந்து உடலிலுள்ள பரமார்த்த சூக்கும முத்தி வழியை அடைத்து மூடிக்கொண்டிருக்கிறது. இது இயற்கையாகவே இறைவனல் அமைந்த நிலை.

இவ்வியற்கை நிலையிலேயே அது சுழுனை வழியை அடைத்து நிற்குமானல் காமாக்கினி உடலில் மிதமிஞ்சி வளர்ந்து பரவி மகனின் பஞ்சேந்திரிய இகவாழ்க்கைப் பிடிப்பிற்கும் உடலின் அழிவிற்குங் காரணமாகும். பரஞான வாழ்விற்குத் தடையு மாகும். ஆனல் அட்டாங்க சிவயோக சாதனையினல் குண்டலி சத்தியாளைக் கருதித் தூண்டி எழுப்பி சுழுனை வழியைத் திறப்பித்து அவ்வழியே கருதி நோக்கி பிராணனை இதய கமலத்தின் வழியாக உச்சிக் கமலத்தைத் தாவி ஏறச் செய்தால் குண்டலி சத்தி ஞானக்கினியாக மாறி சந்திரமண்டலத் துறையுந் தாயினிடமிருந்து மூவா மருந்தென்னும் அமுதவாரி உடலை உண்பித்து உடலுக்குரிய நரை திரை, மூப்பு, மூர்ச்சை என்னும் பிணிகளைத் தடுத்து அதனை உறுதிபெறச் செய்வதுமன்றி சாகாவர மென்னும் நித்திய வாழ்வையும் திருவடி ஞான முத்திப் பேற்றையும் யோகசாதகன் பெறுவதற்குப் பேருதவியும் அளிக்கிறது. மேலும் உலக உற்பத்திக் குரிய மூன்று உபாதான காரணங்களில் குடிலை சத்தி என்னும் மாமாயை முதன்மையானதும் பரிசுத்தமானதுமாகும். அசுத்தமாயையும் பிரகிருதி யும் மற்றிரண்டு அசுத்த உபாதானங்களாகும். இக் குடிலையை பராசத்தி என்னும் சிவசக்தி அதிட்டித்து அதனின்றும் நான்கு வாக்குகளும் ஐந்து கலைகளும் பிறக்கின்றன. மக்கட்குச் சிறப்பாயமைந்த பேச்சு கல்வி, கேள்வி, ஆகம வேதங்கள், மந்திரங்கள் இவை முதலானவைகட்கு எல்லாம் காரணமாயுள்ளது இந்தக் குடிலை சத்திதான். இது பரமசிவனுக்கு

மந்திரசத்திபோல் உள்ளடங்கியிருந்து வேண்டும் போது உபயோகமாகும் பரிக்கிரம (வைப்புச்) சத்தியாகும். இது ஏகமாய் சடமாய், நித்தியமாய், சுத்தமாய் பரமசிவனுக்கு (இ)லய, போக, அதிகாரங்கள் மூன்றினுக்கும் இடமாய், சகல தத்துவா தத்துவங்களிலும் வியாபித்திருப்பதாகும். ஞான யோக சாதகர்களின் சங்கற்ப விகற்பங்களைக் களைந்து சாந்தி பெறச் செய்ய உபகரிப்பதும் இச்சத்திதான். சிவசத்தி அதிட்டித்த இது மகனுடைய மூலப் பகுதியில் அடங்கியும் தொழிற்பட்டும் இருக்கும் போது குண்டலினி என்று பெயர் பெறும்.

இச்சந்தர்ப்பத்தில், "மூலாதாரத்தில் மூண்டெழு கனலைக் காலால் எழுப்பும் கருத்தறிவித்தே" என்றும், "குண்டலி அதனிற் கூடிய அசபை - விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து" என்றும் தனது குருபிரான் தனக்கு உபதேசித்தருளிய யோக ஞான வழியை ஞானப்பழங்கிழவியாகிய ஔவைப் பிராட்டியார் தான் இயற்றிய "விநாயகர் அகவலில்" சுட்டியுணர்த்தியுள்ளார் என்பதைக் காண்க. "திருமந்திரத்தில்" காயசித்தி உபாயங் கூறுமிடத்து "உந்திச் சுழியின் உடனேர் பிராணனைச்-சிந்தித் தெழுப்பிச் சிவமந்திரத்தினால் - முந்திமுகட்டில் நிறுத்தி அபானனைச் - சிந்தித் தெழுப்பச் சிவனவனாமே" என்று திருமூலநாதர் கூறியுள்ளதையும் அறிக. மேலும் சிவஞானபோதம் 9ம் சூத்திரம் 3வது அதிகரணத்திலுள்ள "அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை" என்று வெண்

பாவின் பொருளையறிந்தால் குண்டலித்தானமாகிய உந்தியிலிருக்கும் ஞானக்கினியை மேலே எழுப்ப வேண்டிய அவசியத்தை உணரலாம்.

ஆகையால் உந்தீபறத்தல் என்பது சிவயோக சாதனக்கூறு என்றறியக் கிடக்கின்றது. 'உந்தீபற' என்ற பதத்திற்கு உன் ஆதார குண்டலியாகிய உந்திக்கனலை உயரப் பறத்தலைச் செய்வாய் என்று பொருள் கொள்ளல் சிறப்புடைத்தாகும். இரண்டு அடிகளிலும் உள்ள பதங்களை ஒன்றுபடுத்திக் காணுமிடத்து உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு என அடுக்கு மொழிகளைக் கொண்டுரைத்தல் சாலப்பொருத்தமுடைத்து.

இந்நூலின் 21-வது (8) செய்யுட்பொருளை உற்று நோக்கினல் உந்தீபற என்ற போதனை ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானம் என்னுஞ் சிவநிலையை அடைவதற்காகத்தான் என்று தெளிவாக அறியலாம். மேலும், 18-வது (43) செய்யுளில் ஞான அமுதுண்ண வேண்டியது மகனின் உரிமையெனச் சொன்னுர் ஆசிரியர். இந்த ஞானமிர்தம் மூலக்கனலைப் பிராணனைக் கொண்டு சிந்தித்தெழுப்பி சந்திரனேடு கலக்கச் செய்யும் சிவராசயோக நிட்டருக்கு அநுபவமாகக் கிட்டும் வரப்பிரசாதம் என்று சிவயோக நூல்களும் மணிவாசகப் பெருமான் முதலிய சிவயோக ஞானிகளின் மறைநூல்களும் பதினண் சித்தர் நூல்களும் போதிக்கின்றன. "கட்டிய மூலாதாரக் கனலதை எழுப்பிக் காலால் – முட்டிய மேருத்தண்டு முழுத்

துளை யதன்மேற் செல்ல – ஒட்டிய மேலைவாசல் ஒளிபெற நாடியூடே – நாட்டியே குறைக்கவல்லார் நற்றவம் புரிவோர்தாமே'' என்று அகத்தியர் ''முதுமொழி ஞானம்'' 28-ல் கூறியுள்ள போதனை யை அறிந்தால் அட்டாங்க சிவராசயோகமாகிய நீள்தவத்தின் உண்மைக்கூறு இன்னதென்று அறியக் கிடத்தலோடு இப்பதத்தில் அடங்கியுள்ள போதனையின் மாண்பை அறியவுங் கூடும்.

மேலும், வரகோபநிடதம், யோகசூடாமணி, தியானபிந்து, யோக குண்டலி, அடயோக பிரதீ பிகை முதலிய யோக நூல்களிற் கூறப்பட்ட ''உட்டியன (உட்டீன) பந்தம்'' என்ற யோகாப் பியாசத்தில் பிராணனனது சுழுனை என்னும் சூனிய நாடியில் பறவைக்கதியாகப் பறத்தலை (உட்டீனஞ் செய்தலை)ச் செய்கின்றது என்று கூறப்பட்டிருக் கிறது. இதில் பிராணனை நேரே பிடித்து அவ்வாறு பறக்கச் செய்தல் ஞானசிவயோகிகட்குத் தகாத அடயோகமாகும். அவ்வாறன்றி மனங் கொண்டு கருதிப்பார்த்து செய்தால் சிவராச யோகமாகும். இதனைச் சிவகுரு மூலமாய்த் தெளி தல் வேண்டும். குண்டலி சத்தி கந்தத்தானத்தில் யோகிகட்கு மோட்சத்தின் பொருட்டும் மூடர் கட்குப் பந்தத்தின் பொருட்டுமாகத் தூங்குகிறது. அக்குண்டலி சத்தி எப்புருடனால் சாதனஞ் செய்ய (அதாவது மூலத்தினின்றும் மேலே கொண்டுவர)ப் படுகிறதோ அவன் முத்தனாகின்றான் என்ற விரி வான போதனையை வாசிட்டத்தின் சூடாலை கதையிற் காணலாம். ஆதிசங்கரர் தம் குருவுபதேச

உணர்வையும் தம் சிவயோக சாதன மெய்யனுபவத்தையுங் கொண்டு இயற்றருளிய "ஆனந்தலகரி" என்ற உலகப் பிரசித்தமான ஞானயோக சூத்திர நூலை ஆராய்ந்து உணர்பவருக்கு அந்தப் புருடோத்தமர், ஆதார குண்டலினி சத்தியின் உதவி கொண்டும் அட்டாங்க சிவயோக பயிற்சி கொண்டும் அடையத்தகும் முடிந்த ஞான அநுபவங்களை மேம்படுத்திக் கூறியிருப்பது புலனாகும்.

இவ்விதமாக உபநிடதம் முதலிய முன்னூல் வாக்கியங்களையும் சிவராசயோகத்தில் தமக்குள்ள சுவானுபவத்தையுங் கொண்டு குண்டலினி என்னும் ஆதார சத்தியாளை உறக்கத்தினின்றும் எழுப்பி மேலே பறந்தேறச் செய்வாய் என்று ஞானசரியராகிய உய்யவந்த தேவநாயனார் தம் மாணக்கட்கு உறுதிபட உணர்த்து முகத்தால் "உந்தீபற" என்ற போதனையை ஒவ்வோர் செய்யுளிலும் இரண்டிடங்களில் அமைத்து இந்நூலை இயற்றியுள்ளார் எனப் போதரும்.

இவ்வாறன்றி, "உந்திப்பற" என்றது பழங்காலத்து மகளிர் விளையாட்டுகளில் ஒன்றின் பெயரென்றும், எழுந்துபற என்பது இத்தொடரில் நேர் பொருளென்றும், உந்தீபற என்ற பதம் அத்தொடரின் திரிபென்றுங் கொண்டு ஞாசிரியர் இம்மகளிர் விளையாட்டுப் பெயரைத் தன் ஞான சாத்திரத்திற் கண்ட பொருளுக்கு இசைச் சித்திரமாகப் பொருத்திக் கொண்டார் என்று ஊகித்து திருவுந்தியார் என்ற நூற்பெயருக்கும் எழுந்துபற

என்பதே பொருளாகும் என்று சொல்வாருமுண்டு. இது உண்மைப் பொருளை அறியாமையினால் ஏற்பட்ட குறையாகும். இது பிள்ளைத் தமிழ், அம்மானை, பொன்னூசல், பள்ளி எழுச்சி போன்று மக்களுக்குப் புத்தியைப் புகட்ட எழுந்த துதிநூல் அல்ல. பழுத்தயோக ஞானநெறியை ஞானபாத சாதகர்கட்குப் போதிக்க எழுந்த ஞானசாத்திரமாகும். இதில் மகளிர் விளையாட்டுப் பெயரைப் பொருக்கியெடுத்து நூற்பெயர்ப்பதமாக ஞானசிரியர் அமைத்தார் எனல் அவருக்கும் அவருடைய ஞானநூலுக்கும் சிறப்பைத் தரத்தக்கதாகாது. "பெண்டிர் பிடிபோல ஆண் மக்கள் பேய் போலக் கண்டாரே கண்டார்" என்று அறமற்ற உலக இல்வாழ்வின் உண்மை இயல்பை எடுத்துக் காட்டுமுகத்தான் அதனைப் பழித்துக் கூறி உடல், உலகப் பற்றுகளை துறந்து பிரபஞ்ச முழுவதிலும் அத்துவிதமாய் ஒன்றுபடக் கலந்து நிற்கும் முதல்வனுடைய திருவடியே தஞ்சமெனப்பற்றி நின்று துரிய துரியாதீத நிலைகளில் ஏறிச் சிற்றம்பலக் கூத்தனைக் கண்டு செயலற்றிருக்கும்படி போதிக்கும் ஞானசிரியர் பெண்டிர் விளையாட்டுப் பெயரைத் தன் ஞானசாத்திரத்தில் ஏற்றுமுகத்தான் உலகவரின் களியாட்டத்தைச் சிறப்பித்தாரெனல் ஆசிரியரின் மெய்ந்நோக்கத்தை அறியாத குறையிலிருந்து பிறந்த விபரீதப் பொருளாகும்.

மேலும், இவ்வாசிரியரின் காலத்துக்கு முந்திய திருவாசகத்திலுள்ள திருவுந்தியார் பாசுரத்தைப் பார்த்து இந்நூலை இயற்றி யிருக்கலாமென ஊகித்

தாலும் மணிவாசகப்பெருமான் திருவுந்தியார் என்ற தொடருக்கு மகளிர் விளையாட்டுப் பெயர்ப் பொருளை கருத்திற் கொண்டாரென்பதற்கு ஆதாரமின்றி அவருடைய தோத்திரப் பாவிற் பொருந்தியுள்ள பொருள் பதிவலியைக் குறித்ததாகும். ஆயினும் அதிற்பொதிந்துள்ள உண்மைப்பொருள் "ஞான வெற்றி" என அதன் தலைப்பில் குறிக்கப்பட்டிருப் பதைக் கொண்டு காணலாம். பதிவலித்திருவிளை யாடல்களின் உண்மைப் பொருளை அறிய வேண்டில் திருமூலர் பிரானின் திருமந்திரத்திலுள்ள "பதிவலி வீரட்டம் எட்டு" என்ற பகுதியின் பொருளை உணர் தல் வேண்டும். திருவாசகத்துக்கு முந்திய காலத் தது 'திருமந்திரம்'. இதில் "முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள் – முப்புரமாவது மும்மலகாரி யம்" என்றும், "மூலாதாரத்து மூளும் ஒருவனை மேலைத்துவாரத்து மேலுற நோக்கிமுற்–காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய் – ஞாலக்கடவூர் நயமாய் இருந்ததே" என்றும், "இருந்த மனத்தை இசைய இருத்திப் – பொருந்தி இலிங்க வழியது போக்கித் – திருந்திய காமன் செயலழித் தங்கண் அருந்தவ யோகங்கொறுக்கை அமர்ந்ததே" என்றும் போதித்திருப்பதிலிருந்து அறியக்கிடப்பது என்னவெனில் கூறுதும். சிவபிரான் அண்டத்தில் திருவிளையாடல் புரிந்து தன் வலியின் மாண்பை அறியத் தக்கோர்க்கு மெய்ப்பித்தது போல பிண்டத் தில் உறையுஞ் சீவனும் திருவருட்பதிவின் உதவியி னால் முப்புரஞ் செற்றலும், காலனைக் காய்தலும், காமனின் செயலை அழித்தலும் மூலக்கனலை உயர

எழுப்பும் அங்கியோகம் என்னும் அருந்தவ அட்டாங்க யோக தவத்தின் பயனாகும் என்பதாம். காலனைக் காயுந் தவப்பலன் வாய்ந்த சிவயோக நிட்டருக்குக் காமனைக்காய்தலும் முப்புரஞ் செற்றலும் சிரம சாத்தியமாயிராது. இதன் விளக்கம் சிவகுரு சந்நிதியில் கிடைக்கக் கூடும்.

நூலுக்கு இட்டுள்ள பெயரை ஆராயுங்கால் உந்தி என்பதுதான் நூற்பெயரின் முக்கிய பகுதியாகும். அத்துடன் 'திரு' என்ற சிறப்பு அடைமொழியும் ஆர் என்ற சிறப்புப் பலர்பால் உயர்திணைவிகுதியுங் கூடி திருஉந்தியார் என நின்றது. உந்திப்பற என்ற விளையாட்டுப் பெயரில் உந்து பற என்ற இரண்டு கூறுகள் உண்டு. அவற்றுள் பற என்ற ஒரு பகுதியைக் கைவிட்டு உந்து என்ற மற்றொரு பகுதியைக் கொண்டு நூலின் பெயர் அமைந்ததெனின் 'திருஉந்துவார்' என்றிருக்க வேண்டும். அவ்வாறன்றி உந்தி என்ற சொல்லை உந்து என்னும் வினையிலிருந்து தோன்றிய வினையெச்சச் சொல்லைக் கொண்டு நூலின் பெயர் அமைந்தது எனல் கற்றறிந்தோர் கொள்ளத் தக்கதாகாது. நூலின் பெயர் "திருஉந்திப்பறப்பார்" அல்லது "திருஉந்தீ பறப்பார்" என்றிருந்தால் பதத்திற்குஅவர் கொண்ட பொருள் பொருந்தக் கூடும்.

இவ்வாறன்றி, 'உந்தி' என்பதுதான் மகளிர் விளையாட்டுப் பெயர், அது இடுகுறிப் பெயராய் இருக்கக் கூடும் என்போமானல் பறவைக்கதியாய் உயர எழு என்று பொருள்படும் "பற" என்ற

சொல்லை உந்தி என்ற மகளிர் விளையாட்டுப் பெய ருடன் ஆசிரியர் தன் நூலுக்கு இசையப்பொருத்திக் கொண்டார் எனக்கொள்ளவரும். வந்தால் உந்தி விளையாட்டின் சொரூபம் அழியும். பழங்காலத்து மகளிர் விளையாட்டில் பறவை போல் உயர எழும்பு தல் பொருத்தமான ஒரு அம்சமாக இருந்திருக்கக் கூடுமா என்ற வினவிற்கு விடைகாண வேண் டியது இவண் அவசியமானது.

இஃதன்றியும், உந்திபற என்ற விளையாட்டுப் பெயர் உலக வழக்கில் உந்தி என்று குறுகிற்று எனக்கொள்வோமானால் திருவாசகத்தில் அம்மானை, தெள்ளேனம், தோணோக்கம் என்ற விளையாட்டுப் பெயர்களைப் பாசுரங்களில் அமைத்துப் பத்திப் பொழியும் மறைமொழி தோத்திரச் செய்யுட்கள் இருப்பதைக் காண்கிறோம். ஆனால் அந்தந்த பாசு ரங்கட்குப் பெயர் அமைந்திருப்பதை நோக்குங்கால் திரு அம்மானை திருத்தெள்ளேனம், திருத் தோணோக்கம் என்றிருக்கக் கண்டோமல்லது திருஅம்மானையார் என்று ஆர் என்ற சிறப்பு விகுதியைக் கூட்டி அப்பெயர்கள் அமையவில்லை. ஆனால் உந்தி என்னும் பெயர்க்கு மட்டும் ஆர் என்ற விகுதியைக் கூட்டி ''திருவுந்தியார்'' என்றி ருக்கக் காண்கிறோம். இதற்கு அறிவுடையோர் ஒப்பக் கூடிய தக்க காரணம் இன்னதென்று காணக்கிடைக்கவில்லை எனில் அது நம்முடைய அறிவின் குறையை வெளிப்படுத்தும். உந்தி என்ற சொல் மற்ற அம்மானை போன்றதொரு விளையாட்டு பெயரைச் சொல்லளவில் குறித்து நின்றாலும் அதன்

உண்மைப் பொருள் நூற்பொருளுக்கு ஏற்ப பரஞானத்தோடு இயைந்ததாய் இருத்தல் வேண்டும் என்று நுண்ணறிவுடையோர் காண்பர். அதன் உண்மைப் பொருள் என்ன என்பதை மேலே பல ஞான நூலாதாரங்களைக் கொண்டு விளக்கியுள்ளேன். திருஉந்தி என்றதோடு ஆர் என்ற சிறப்பு விகுதி ஆதார குண்டலினி சத்தியாளைக் குறித்து கூட்டப்பட்டதுதான் என்று அறியக்கிடக்கின்றது.

ஆகையால் திருஉந்தியார் என்ற மகுடத்திற்காணும் உந்தி என்னுஞ் சொல்லும் உந்தீபற என்ற போதனைப் பதமும் உண்மையில் திவ்விய குண்டலினிசத்தியைப் பொருளாகக் கொண்டது என்றறியலாம்.

உந்தீபற என்ற பதத்திற்கு உம் தீ வினை அதாவது கொடியவினை பறப்பதாக என்று பொருள் கொள்வாருமுளர். இங்கு தீ என்றதற்குத் தீவினை என்னுது தீக்குணம், தீயயெண்ணம், தீச்சொல், தீநாட்டம் என்று பலப்படப் பொருள் கூறினும் பொருந்தாதென்று மறுத்தற்கு இடமில்லை; ஆதலால் இது மயக்கப் போலியுரை எனக் கண்டு ஒதுக்குக.

இனி நூற்பொருளை ஆராய்வோம்.

# திருவுந்தியார்

## பகுதி 1: சிவபரன்

### (சொரூப நடத்த நிலையன்)

**அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்**
**சகளமாய் வந்ததென் றுந்தீபற**
**தானாகத் தந்ததென் றுந்தீ பற (1)**

(கொண்டுகூட்டு): அப்பொருள் அகளமாய் யாரும் அறிவரிது. (தானாகச்) சகளமாய் வந்தது. தானாகத் தந்தது என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (நுண்ணறிவுடையோரால் உசாவப்படும்) மெய்ப்பொருளாகிய கடவுள் (சச்சிதானந்த சொரூபமாய்) உருவற்றிருக்கும் நிலையில் (நுன்னறிவும், நிறைந்த தேட்டமும், தீவிர முயற்சியும் கொண்ட) எவராலும் அறிதற்கு அருமையாயுள்ளது. (பிறிதொரு காரணமின்றித் தன் சங்கற்ப மாத்திரையானே அத்துவித) உருவு கொண்டு வந்து (உயிர்களின்மாட்டு இரக்கங் கொண்டு) தானாகத் தன்னை (அவர்கட்குக் காட்டித்) தந்தது; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): அகளம் உருவமில்லாதது. சகளம் உருவொடு கூடியது. இவை எதிர்மறைச்

சொற்கள். பொருளென்றது மெய்யை. அது அழி வில்லாது என்றும், ஒருபடித்தாய்த் தலைசிறந்து நிற்கும் கடவுளைக் குறித்து நின்றது. அனுமான அளவைக் கொண்டு ஊகித்தறியும் அருத்தா பத்திக் கும் பொருள் என்ற பெயருண்டு. நுண்ணறிவு கொண்ட உலகோரிற் பலரும் தொன்றுதொட்டுப் பலவாற்றானும் உசாவும் பொருள் எல்லாவற்றிலும் தலை சிறந்ததாயும் அறிதற்கு அரியதாயுமுள்ள பொருளாதலால் 'அப்பொருள்' என மெய்யைச் சுட்டியுரைத்தார். நுண்ணறிவும் தீவிர முயற்சியும் நிறைந்த தேட்டமுங்கொண்டோர் பலர் உலகிற் காணப்படினும் அவர்கட்கும் அறிவரிது என்பார் 'யாரும் அறிவரிது' என்றார். ஆதலால் எவ்வித பெருமுயற்சிக்குந் தேவையாயுள்ள இப்பண்புகளை உடையர் அல்லாதாருக்கு என்றும் அம்மெய்ப் பொருள் அறியப்படுவது அன்று என்பதாம். 'என்று' என்ற சொல் என்றறிந்து என்ற பொருளில் நின்றது. ஒரு பொருளை முழுவதுமாய் அறிவதற் குக் கேட்டுத் தெளிதலோடு அமையாது தான் அதனை அநுபவித்தலும் வேண்டப்படுமாதலால் கேட்டுத் தெளிந்த செய்யுட் பொருளைத் தன்ன தாக்கிக் கொள்ளும் பொருட்டு உந்தீபற என்னும் யோக சாதனையை ஆசிரியர் போதித்துள்ளாரென ஊகித்தறியக் கிடத்தலால் அநுபவித்தற்பொருட்டு என்ற தொடரைச் சொல்லெச்சமாகக் கொண்டு பொருளுரைக்கப்பட்டது. நூல் முழுவதிலும் இவ் வாறே பொருள் கொள்க.

பொருள் என்றது மெய்ப்பொருள் என்றோம். அதன் இயல்பு இருவகைத்து. மக்களின் நுண்ணறிவிற்குஞ் சொல்லிற்கும் எட்டாது உருவமற்று ஏகமாய் நிற்கும் நிலை ஒன்று. இதனை அதன் சச்சிதானந்த சிறப்பியல்பு அல்லது சொரூபநிலை என்பார். தன்னிச்சை போல் உருவெடுத்து வந்து நுண்ணறிவு கொண்டு அறியும்படியாக உயிருடன் கலந்து நின்று தன்னைக் காட்டித் தந்து நிற்பது மற்றோர் நிலை. இதனை அதன் அத்துவிதப் பொது இயல்பு அல்லது தடத்த நிலை என்பார் மெய்யுணர்ந்தோர். இவண், "ஏகன் அனேகன் இறைவனடி வாழ்க" என்றும், "ஆன் நடைமைந் தகளசகளத்தர்" என்றும், "உருவன்றியே நின்றுருவம் புணர்க்கும்" என்றும் மெய்ஞ்ஞானிகள் கூறியுள்ள திருவாக்குகளை ஒப்பு நோக்குக.

தந்தது எதை என்று விரித்துக் கூருமல் தானுகக் தந்தது என்று கூறிவிடுத்தார். ஏன்? முதலிரண்டு அடிகளிலும் இதற்கு விடை தொக்கியிருப்பதைத் தம் மாணுக்கர் நுண்ணறிவால் அறிந்துகொள்ளட்டுமென்று விடுத்தார். ஞானிகள் கடுகைத்துளைத்துக் கடலைப் புகட்டியது போன்று சுருங்கிய சொற்களில் ஞானனுனுபவப் பெரும்பொருள்களை நிரப்பி வைத்து நூல் செய்வதின் நோக்கம் என்னவெனின் தம் மாணவரின் சிந்தனு சித்தியைப் பெருக்கி நுண்ணறிவை வளரச் செய்ய வேண்டித்தான். இங்கு தானுகத் தந்தது எதை என்ற வினுவிற்கு மனவாக்குகளுக்கு அதீதமாய் மக்களின் காட்சிக்கு எட்டாமல் அகளமாய் நின்ற பொருள் உருவு கொண்டு சகள

மாய் வந்தது என்றதனுல் காட்சிக்கு எளியதாய் வந்ததென்ற பொருள் அடங்கியிருத்தலால் விடை பகராது விடுத்தார். ஆதலால் தந்தது என்றதற்குக் காட்டித்தந்தது என்று சொல்லெச்சமாகக் கொண்டு உரை செய்யப்பட்டது. இவ்வாறன்றித் தந்தது தன்னை என்று பகரக் கூடாதோ எனின் கூடாது. ஏனெனில் மேலே 35வது (6) செய்யுளில் ஆசிரியர் தன்னையே தந்தான் என்று கூறியிருத்தலால் இங்கும் அவ்வாறு பொருள்படக் கூறுதல் குற்றத்துட்படும் என்க.

அகளமாயுள்ளது சகளமாய் வருதற்கும் இந்நிலையில் தன்னைக் காட்டித் தருவதற்கும் யாது காரணம் எனவினவுவாரை நோக்கித் தனக்கு அன்னியமான காரணம் யாதொன்றுமின்றி மகனின் மூல மலக்கட்டை அறுத்தெறிய வேண்டித் தன் அருளாட்சி கொண்டே வடிவெடுத்துவந்து காட்சி தந்த தென்பார். தானுகவே என்ற சொல்லை இரண்டு அடிகட்கும் இடையில் சிம்ம நோக்கமைய நிறுத்தியுள்ளார்.

தானுகச் சகளமாய் வந்ததென்று கூட்டியுரைக் காவிடில் வரும் இழுக்கென்னையோ வெனின் கூறுதும். உயிர்கட்கு அதனதன் வினைக்கீடாக முதல்வன் உருவம் அமைத்துக் கொடுக்கிருன். அதுபோல அவன் கொண்ட சகலகோலமும் அவனுடைய வினைக்கீடாகப் பிறிதொரு பொருளால் படைத்தளிக்கப்பட்டதோ என ஐயம் எழாமைப்பொருட்டு முதல்வன் இயல்பாகவே தன்வயத்தனுகவும் பாசத்தின்

நீங்கினவனுகவும் முடிவில்லாத ஆற்றலுடைய வனுகவும், இருத்தலால் மற்ஞெருன்றின் பிரேரணை யும் உதவியுமின்றி தான் எடுத்த கோலத்தைத் தானுகவே ஏற்ருன் என உறுதிபடக் கூறினர் என்க. தன்னைக் காணமாட்டாத உயிர்கட்குத் தன்னைக் காட்டித் தருவதற்காக அவைகளுடன் அத்துவித கோலங்கொண்டு நின்ருன் என்றவாறு.

(கருத்து) : மெய்ப்பொருளுக்கு சொருபம் (அருவம்) தடத்தம் (உருவம்) என்ற இருநிலைகள் உண்டு (என்றவாறு).

(அறிவு சொரூபன்)

2. எங்ஙா னிருந்ததென் றெவ்வண்ணஞ்
சொல்லுகேன்
அங்க னிருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற (4)

(கொண்டுகூட்கு) : (அது) எங்ஙன் இருந்த தென்று எவ்வண்ணஞ் சொல்லுகேன். அங்ஙன் இருந்தது. அறிவு அறியும் (பொருள்) அது அன்று (என்று) உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்) : (மெய்ப்பொருளாகிய) முதல் வன் எவ்வாறு இருந்தானென்று (அநுபவித்த நான்) எவ்வகையிற் சொல்லி (உனக்கு) உணர்த்துவேன். சொல்லிக்காட்ட இயலாத தன்மையாய் இருந் தான். சுட்டறியும் அறிவு கொண்டு அறியப்படும் பொருள் அவனன்று; என்றறிந்து (அநுபவித்தற்

பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப் பெழுப்பு.

(விளக்கம்): எங்கள் என்ற சொல்லிற்கு பதிலாக இங்ஙன் என்ற பாடமோதி யுரைத்தல் பொருந்தாது. அது என்ற சொல்லை முதலடி யுடனுங் கூட்டியுரைக்க வேண்டும். பதிஞானக் கண் கொண்டு முதல்வனது காட்சியையும் சத்தியின் பதிவுகொண்டு அவனுடன் இரண்டறக் கலந்த அநுபவத்தையும் அடைந்த ஆசிரியர் அவற்றைப் பெறாத மாணுக்கனுடைய வினாவிற்கு விடைபகர்வது போல் செய்யுளைத் தன் அநுபவங் கொண்டு அமைத்துள்ளார். அவனருளே கண்ணு கக்காண்கினல்லால் இவ்வண்ணன் இவன் இறை வன் என்றெழுதிக் காட்டொணுது என்றும், "எவ்வணஞ் சொல்லுகேன் எந்தை இயற்கையே" என்றும், "ஆயும் அறிவுகடந்த அரன்" என்றும், "மகட்குத் தாய் தன் மணளேேடாடிய சுகத்தைச் சொல்லென்ருல் சொல்லுமா றெங்கனே" என்றும் கூறியுள்ள திருவாக்குகளை இவண் எடுத்துக் காட்டு தல் பொருந்தும்.

அறிவு அறியும் பொருள் அது அன்று என்று மாற்றி பொருள் என்பதை எச்சமாகக் கொண் டுரைக்க வேண்டும். அறியும் என்றது அறியப்படும் என்ற பிறவினைப் பொருள் கொள்ளும். அறிதல் அறிவை கொண்டாகலான் சுட்டறிவு என்றது ஒரு பொருளை முந்தி அதுவதுவாகச் சுட்டிக் காணும் அளவை அறிவு. இது உடற் கருவிகளோடு உயிர்

கூடி நின்று உலகறியும் தூல அறிவு. சிவஞான மென்னும் மெய்யறிவினலும் அறிதல் கூடுமாதலா லும், முதல்வன் மெய்யறிவினல் அறியப்படுவன் ஆதலாலும் சுட்டறிவு கொண்டு அறியப்படான் எனக் காண்க.

இவ்வாறன்றி அறியும் அறிவு அது அன்று என்று நேரே பொருள் கொள்வோமானல் அறிவு ஆகுபெயராய் அறிவு அல்லது சித்துப்பொருளாகும். ஆகவே சுட்டறிவினல் அறியப்படும் சீவனை (பசுவை)ப் போன்றதொரு சித்துப் பொருள் அவ னன்று என்று கூறலும் ஒருவகை. சீவனுஞ் சித்துப் பொருளாதலாலும் பசுஞானம் பாசஞான மென்னும் சுட்டறிவு கொண்டு உயிரையறியக் கூடுமாதலா லும்உயிரைச் சுட்டறிவு கொண்டு அறிவதுபோல் முதல்வனை அறிய முடியாது என்றவாறு.

எல்லா அறிவுக்கும் அப்பாற்பட்ட அறிவு என்று பொருள் கோடல் பொருந்தாது. ஏனெனில் சுட்டறிவு மடங்கி வியாபக அறிவு என்னும் பதி ஞானத்திற்கு முதல்வன் அறியப்படுபவன் ஆதலா லும் எவ்வறிவு கொண்டும் அறியப்படான் எனில் சூனியமாய் முடியுமாதலாலும் என்க.

(கருத்து): பழத்தின்சுவை தின்றூர்க்கன்றி அறியப்படாததுபோல முதல்வனுடைய சானித் தியம் அவனைக் கண்டுணர்ந்தவர்க்கன்றி அறிய ஒண்ணு து(என்றவாறு).

(நடந்த உலக வடிவன்)

3 அதுஇது என்னு அனைத்தறி வாகும்
அதுஇது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த சடையானென் றுந்தீபற. (39)

(கொண்டுகூட்டு): அதுஇது என்னு அனைத்தறிவாகும் அது அவிழ்ந்த சடையான் இது(ஆகும்) என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): அதுஇது என்று சுட்டியறியும் அறிவால் அறியப்படாமல் வியாபக முற்றறிவு சொரூபமாய் நின்ற பொருளாகிய விரிந்த சடையுடை சிவபெருமான் (அத்துவித சம்பந்தத்தால்) இப்பிரபஞ்சமாய் தோற்ற மளிக்கிறான்; என்றறிந்து (அனுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): முதற் செய்யுளில் அகளமாய் அறிவரிதப் பொருள் என்றதனையே இங்கு அதுஇது என்னு அனைத்தறிவாகுமது என்றார். அங்கு அறிவரிது என்று பொதுப்படக்கூறி இங்கு சுட்டறிவிற்குக் கோசரமாகாமல் என்று விரித்துரைத்தார். அங்கு அகளப் பொருள் என்றார்; இங்கு அப்பொருளுக்கு முற்றறிவே சொரூபம் என விளக்கினார். அங்கு சகளமாய் வந்தது எனப் பொதுப்படக் கூறி இங்கு அனைத்து உருவங்களினும் மேம்பட்ட தியான உருவாயுள்ள சிவபிரானை அவிழ்ந்த சடையான் என்று குறிப்பிட்டார். அங்கு சகளவுருக் கொண்டு நின்ற நிலை என்னவென்று கூறவில்லை; இங்கு அந்நிலை சராசரப் பிரபஞ்சமாய்த் தோற்ற மளித்தலாகும் என்று அதன் அத்துவித கோலத்தைக் கூறினார். இவ்வாறாக முதற் செய்யுளின் பொருளை விளக்கிக் கூறுதல் இச்செய்யுளின் கருத்தெனக் காண்க.

சிவபிரான் விரிந்த சடையுடைப் பெம்மானாகிய சிவபிரானாக பத்தர்கட்குத் தோற்றமளிப்பது பிரபஞ்சத்தை அளித்தருளும் ஆற்றலை மக்கட்கு உணர்த்தும் பொருட்டேதான். உலகுக்குப் பிராணாதாரமாயுள்ளது தண்ணீர். வற்றாத நீர் நிலையாகிய ஆகாய கங்கையை சிவபெருமான் தன் முடியில் தரித்துத் தண்ணீரைத் தன் விரிந்த சடையின் மூலமாய் உலகுக்கு ஊட்டியளிக்கின்றான் என்பது சிவனடியார்களின் அநுபவமும் ஐதிகக் கூற்றுமாகும். சிவபிரானுடைய இருக்கைகளில் வடநாட்டில் முக்கியமானது இமயம். அம்மகத்தான பனிமலைத் தொடரில் கயிலாயம் என்றொரு சிகரம் உண்டு. அச்சிகரம் இலிங்க வடிவத்தில் அமைந்துள்ளது. சிவபிரானுக்கு அருவத் திருமேனியாயுள்ள இலிங்கம் அக்கயிலாய மலையுச்சியில் கோவில் கொண்டுள்ள சிவபிரானை நினைப்பூட்டுவதற்கு சரித்திரத்திற்கு எட்டாத காலத்திருந்த சிவமுனிகளால் நிர்மாணிக்கப் பெற்று தொன்று தொட்டு இதுகாறும் சிவபக்த கோடிகளின் உள்ளத்தில் ஊன்றப்பெற்று திவ்விய தியான மூர்த்தமாக அமைந்து விட்டது என்றுங் கூறலாம். பிர்மபுத்ரா பாகீரதி, கங்கை, சிந்து முதலிய மகத்தான நதிகளெல்லாம் இமயமலைத் தொடரின் வானளாவிய பனிமண்டலத்திலிருந்து வற்றாத ஆறுகளாக வழிந்தோடி வந்து பாரத நாட்டைச் செழிக்கச் செய்து வருகின்றன. உள்நாட்டங்கொண்டு கயிலையை சிவபிரானாகப் பாவித்தால் அதிற் காணப்படும் பனிவரைகள் சிவபிரானுடைய சிரசிலிருந்து

அவிழ்ந்து விரிந்து படரும் சடைகள் போலத் தோற்றமளிப்பனவாகும். அவற்றின் வழியாக ஓடிவரும் ஆற்றுநீர் இந்திய உலகை உண்பிக்க உதவுகின்றது. ஆகையால் இந்த அற்புத இயற்கைத் தோற்றம் மனோபாவனையில் ஆழ்ந்த சிவபக்தர்கட்கு கங்கையைத் தரித்த விரிந்த சடையுடைய சிவபிரானாக உள்ளக்காட்சி யளிக்கும் என நுண்ணறிவு கொண்டு அறியலாம். ஆகலான் முதல்வனுடைய இக்கோலம் இடையறாது உலகுடன் கூடிநின்றளிக்கும் அருள்நிலையை உணர்த்தி நின்றது. "வெள்ளப்புனற்சடை வேத முதல்வனை" என்று தொடங்கும் திருமந்திரச் செய்யுட் பொருளையும், "சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி" என்ற தொடக்கத் திருவாசகச் செய்யுட் பொருளையும் நோக்குக.

இந்த அளித்தாற்றல் பிரபஞ்சத் தோற்றம் முதல் அது ஒடுங்குமளவும் நிகழுமாதலால் பிரபஞ்சந் தோன்றி நிற்குமளவும் முதல்வன் காட்டாக்கினி போல் அதனுடன் கூடி நின்று மறைந்து பிரபஞ்சமாகவே தோற்றமளிக்கிறான் என்பார் அதுஇதுவாகும் என்றார். முதற் கண் நின்ற அது இது என்ற சொற்கள் சுட்டுப் பொருள்களை யுணர்த்தி ஆகுபெயராய்ச் சுட்டறிவைக் குறித்து நின்றன. ஆகுபெயராய்க் கொள்ளாமல் சுட்டுப் பெயர்களாகவே கொண்டு அதுஇது என்று பொருள் கூறலும் ஒருவகை. அப்போது அதுஇது என்றது உம்மைத் தொகையாகும். ஆயினும் முதல்வனது முற்றறிவு சொருபத்தை அனைத்தறிவாகும் என்று

உடன் கூறியிருத்தலால் சுட்டறிவிற்கு எட்டாத வன் என்று பொருள்படக் கொள்ளலே சிறப்புடைத் தாகும்.

பின்னடியிலுள்ள அதுஇது என்ற சொற்களில் அது அகள அறிவுப் பொருளையும் இது பிரபஞ்சத் தையுங் குறித்து நின்றன. ஆகும் என்ற சொல்லை இரட்டுற மொழிந்து அதுஇதுவாகும் என்று கூட்டி யுரைக்கப்பட்டது. ஆகும் என்றது ஆதல் என்ற பண்புப் பெயரினடியாகப் பிறந்த வினைமுற்று. ஆதல் எனின் தெரிதல் அல்லது காணல் என்ற பொருள் கொள்ளும். ஆதலாற்றான் ஆகும் என்ற தற்குத் (தோன்றும்) தோற்றமளிக்கும் என்றுரை செய்யப்பட்டது. ஆகும் என்ற சொல்லை இவ்வாறு இரட்டுற மொழியாவிடில் அதுஇது என்றறி என்ற விடத்து சித்தாந்தப் பொருளன்றி பொருள் ஒன்றே என்றுரைக்கும் புறச்சமயப் பொருளைத் தந்து நிற்கக் கூடும். ஆதலால் அவ்வாறு கொள்ளல் திரிபுணர் விற்கு இடமாவதுமன்றி இச்செய்யுட் பொருளுக்கு மாறுபட்டதுமாகும் எனக் காண்க.

அதுஇதுவாகும் என்ற விடத்து சித்துப்பொருள் சடப்பொருளாய்த் தோன்றுவது எப்படி என்ற வினு எழுமாதலால் அதற்கு விடையாக அகளமாய் நின்ற உருவமற்ற நிலையில் அமையாதாயினும் ஐந்து தொழில்களை நடாத்தும் பதியாகி, உலகுடன் அத்துவித சம்பந்தத்தில் கூடி நின்றளிக்கும் நிலை யில் அவ்வாறு தோற்ற மளித்தல் கூடுமென்பார் அது அவிழ்ந்த சடையானகி இதுவாகும் என்று அதற்கும் இதற்கும் இடையில் ஏற்பட்ட சம்பந்த

விசேடத்தை உணர்த்தியுள்ளார். இக்காரணம் பற்றியே அவ்வாறு கொண்டுகூட்டிப் பொருள் காணப்பட்டது.

"அரக்கொடு சேர்த்தியக்னைத் தவக்கற் போல் – உருக்கி உடங்கியைந்து நின்று – பிரிப் பின்றித் – தானே உலகாம்" என்ற சிவஞான போதம் 2ம் சூத்திரத்து 1வது அதிகரணத்திலுள்ள உதாரண வெண்பாப் பொருளை இச்செய்யுளுடன் ஒப்பிட்டு நோக்குக.

(கருத்து): ஞானசொரூபனுயுள்ள முதல்வனும் சிவ பெருமான் காட்டாக்கினி போல் உலகில் மறைந்து அத்துவிதமாய் நிற்பதுமன்றி, சடையுடைப்பெம் மான் உருவில் நின்று பிரபஞ்சத்தைத் தோற்று வித்து காக்கின்ருன் (என்றவாறு).

4. (பாவனாதீதன்)

ஆக்கிலங் கேயுண்டாய் அல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற் பரமதன் றுந்தீபற
பாவனைக் கெய்தாதென் றுந்தீபற. (9)

(கொண்டுகூட்டு): ஆக்கில் அங்கே (பார்க்கில்) உண்டாய். (ஆக்கில்) அல்லது அங்கு பார்க்கில் இல்லையாய்(த்திரும்). அது பரம் அன்று.(பரம்) பாவனைக்கு எய்தாது; என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): சீவனுல் செய்யப்பட்டு அமைந்த இடத்தில் பார்க்கும்பொழுது உள்ளபொருளாய் அவ்வாறு செய்து அமைக்கப்படாத இடத்தில்

பார்க்கும்போது அங்கு இல்லாததாய்த் தீரும் ஒரு மூர்த்தம் (தெய்வஉரு) தத்துவாதீதனுகிய முதல் வனுக மாட்டாது. முதல்வன் சீவனுடைய சங்கற் பத்துக்கு எட்டாதவன் என்றறிந்து (அனுபவித்தற் பொருட்டு)உன் உந்திக்கனலே உயர எழுப்பெழுப்பு. (விளக்கம்): ஆக்கல் உண்டாக்கல் அல்லது படைத் தல். அது முதல்வனுல் உண்டாவது, சீவனுல் உண்டாவது என இருவகைப்படும். இங்கு ஆக்கில் என்றது சீவனுல் உண்டாக்கப் படுவதைக் குறித்து நின்றது. ஒரு மகனுடைய கரணத்தால் செய்யப் படுவது மாயா காரியப் பொருளன்றி வேறல்ல. ஆகலான் அது ஏகதேசமாய் சுட்டறியப்படுவதாய் அழியக்கூடிய அசத்தாகும். அவன் தனது சிற்றறி வையும் கரணங்களையும் கொண்டு முதல்வனுக்கு ஓர் உரு அமைத்தான் எனில் அமைத்த விடத்தில் மட்டும் அது காணப்பட்டு மற்றெரிடத்தில் அது காணப்படாமலிருக்கும். இவ்வாறு மகனுல் உண்டா கும் தெய்வவுரு ஏகதேசத்தில் சுட்டியறியப்படும் மாயா காரியவுருவாகுமாதலால் அசத்தாகும். இவ்வகை தெய்வவுரு தத்துவாதீதனுகிய பரம் பொருளாகாது என்பார் அது பரமன்று என்ருர்.

அங்கே உண்டாய் என்ற விடத்து, அங்கே பார்க்கில் உண்டாய் என்று பார்க்கில் என்றதை இரட்டுற மொழிந்து கூட்டியுரைக்க வேண்டும். அதுபோல் 'ஆக்கில் அல்லது' என்று கூட்டியுரைக்க வேண்டும். இல்லையாய் என்ற எச்சத்தோடு தீரும் என்ற வினைமுற்றுச் சொல்லை எச்சமாகக் கொள்ள வேண்டும். இவ்வாறன்றி ஆக்கில் அல்லது அங்கு

இல்லையாய்ப் பார்க்கில் அது பரம் அன்று என்று கொண்டு கூட்டிப் பொருள் காண்பதும் ஒரு வகை. இங்கு பார்க்கில் என்றதன் வினைக்குப் பார்க்கப் பட்டால் என்று பிறவினைப் பொருள் கொண்டுரைக் வேண்டும்.

மகன் அமைக்குந் தெய்வவுரு முதலில் அவனது மனதில் தோன்றியபிறகு செயல்பட்டு வெளிமுகத் தில் உருவாகத் தோன்றுகிறது. இவ்வாறு மகனு டைய எண்ணத்தில் உருவாக்கப்படுவது பரமல்ல என்பார் பரம் பாவனைக்கு எய்தாது என்றார். இதிலி ருந்து சோபாதிக உருவ வழிபாட்டைக் கண்டனஞ் செய்ததாகக் கொள்ளக்கூடாது. சாதகருக்கு இவ் வுபாசனை தேவைப்படும் என்பது வேதாகம வாக்கா கும். "அருளே திருமேனி ஆன்மா திருமேனி குருவே திருமேனி கொள்" என்று சிவஞான வள்ள லார் கூறியபடி முதல்வன் ஐந்து தொழில்களை இயற்றி நிற்கும் பதிநிலையில் மூவித திருமேனி கொள்கிறான். அவற்றுள் உயிரும் உயிருக்கு மெய்யை உணர்த்தவரும் ஞானகுருவும் இரண்டு திருமேனிகளாகும்; மற்றொரு அகண்ட திருமேனி அருளாகும். அருவ சச்சிதானந்த நிலையில் அறிவே வடிவானது போல் உருவ (சகள) நிலையில் அருளே வடிவாகும். அவனை விட்டு அறிவைப் பிரித்தறியக் கூடாதவாறுபோல் அருளையும் பிரித்து அறிய வாராது - ஆனால் சுட்டறிவு படைத்த சீவர்களின் பொருட்டாக வேதாகம கருத்தர்கள் அருளை முதல் வனுடைய இணைபிரியாத மனையாளாக(தேவி) உரு வஞ்செய்து போற்றி அவனது அறிவை (சிவசக்தி

அல்லது) சிற்சக்தி என்றாற்போல் அருளை அருட் சக்தி என்றார்கள். அருட்சக்தி சிற்சக்தியின் கூறே யாகும். அருட்சக்திக்கு முன் நிற்பது மற்றொரு கூறாகிய திரோதான சக்தி. இதைக் கொண்டே ஐந்து தொழில்களை பதியானவன் நடத்துகிறான். ஆயினும் அவற்றால் தொடக்குறாமல் கடந்து நிற் கிறான். ஆகலாற்றான் சிவாகம விதிகளின்படி சரியை, கிரியைப் படிகளில் நிற்போர்க்கு உதவி யாக அமைந்துள்ள சிவாலயங்களில் சிவபிரானுக்கு சிவலிங்க அருவுருவத் திருமேனியைத் தவிர்த்து வேறெந்த உருவத் திருமேனியும் அமைப்பதில்லை. சக்திக்கே தாயுருவம் அமைத்து வழிபடும் மந்திர சக்தி மூர்த்தமாக ஆக்கப்பட்டிருப்பதைக்காணலாம். சரியை கிரியையாளர்கட்கு இவ்வாலய வழிபாட் டால் ஆத்திகப்பண்பும், இறைபத்தியும், அடிமைத் திறனும், சிவ அன்பும் வளர்கின்றன. இதனை அடுத்த செய்யுளில் ஆசிரியர் தெளிவுபடுத்தியுள் ளார் – பரம் என்றது தத்துவங் கடந்த முத்தி முதல் வனை; முத்தியை யன்று.

(கருத்து) நிருபாதிக அறிவு சொரூபனாகிய முதல் வன் பாவனையால் அமையும் சோபாதிக உருவத்தில் அடங்கான் (என்றவாறு)

5. (சிவ அறிவாதீதன்)

கருதுவ தன்முன் கருத்தழியப் பாயும்
ஒருமகள் கேள்வனென் றுந்தீபற
உன்னை அறியனென் றுந்தீபற. (19)

(கொண்டுகூட்டு): ஒரு மகள் கேள்வன் கருதுவதன் முன் கருத்தழியப் பாயும். (ஆதலால்) உன்ன அறியன் என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): ஒப்பற்ற மகளிராகிய சிற்சக்தியின் நாயகனும் முதல்வன் (அவனது இலக்கணம் என்னவென்று நுண்ணறிவாற்) கருதிக்குறிக்கொள்வதற்கு முன்னதாகவே அக்கருத்திற் பட்டகுறி பாழாகும்படி அக்குறியைக் கடந்து நிற்கின்றான். ஆதலால், எளிதில் கருதக்கூடியவன் அல்லன்; என்றறிந்து அநுபவித்தற் பொருட்டு உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): முதல்வனது சிற்சக்தி எக்காலத்தும் அவனைவிட்டுப் பிரியாது அவனது சங்கற்பத்தின்படி நடத்தலால் அவளை அவனுடைய நாயகியாகக் கூறுதல் மரபு. வேதாகமங்களில் நாயகியாகக் கூறுவதோடு தாயாகவும் மகளாகவும் தோழியாகவும் கூறியதுண்டு. ஆயினும் முதல்வன் நித்திய துறவியாயும், தாய் நித்திய கன்னியாயும் இருக்கிறார்கள் என்பது சித்தாந்தத் துணிபு. ஆதலால் மக்களிடையிற் காணும் நாயகன் நாயகி போன்றதொரு சம்பந்த மின்று என்பது போதரும். இது பற்றியே மனோன்மணியாம் பெண்பிள்ளை "ஆயும் அறிவுங்கடந்த அரனுக்கு—தாயும் மகளுநல் தாரமுமே" என்றார் திருமந்திரத்தில். இச்செய்யுளோடு அத்திருமந்திரச் செய்யுட் பொருளை ஒப்பு நோக்குக.

புலனறிவுக்கு எட்டாத ஒரு பொருளை அதன் இலக்கணத்தை உரையளவையாற் கண்டு கருதி ஏகதேசமாய் அறிவது போல் முதல்வனது இலக்கணத்தை உரையளவை கொண்டு நுண்ணறிவாற் கருதுமிடத்துக் காணும் ஏகதேசக் குறியும் அழிவுறும் எண்ணம் அவன் அக்குறிக்கு இலக்காகாமல் தாண்டி நிற்கின்றான் என்பார் "கருதுவதன்முன் கருத்தழியப் பாயும்" என்றார். பாய்தல் என்றால் கடந்து நிற்றல் என்ற பொருளைக் கைவிட்டு பாயும் என்றதற்கு (கருதும் மகனை நோக்கி) விரைந்து வருவான் என்று கூறுதல் அறியாமையுமன்றி உன்ன அரியன் என்றதற்கு முரண்பட்டதுமாகும். கருதல், உன்னல் ஒரு பொருட்பன் மொழி. இவ்வாறு நுன்னறிவால் ஆயுமிடத்துங் குறிக்கொள்ளப்படான் ஆகையால் உன்ன அரியன் என்றார். உன்னக் கூடான் என்றாது உன்ன அரியன் என்றது பசுபாசச் சுட்டறிவு கொண்டு உன்னக் கூடாதவனாயினும் மிக்க தவசாதனை முயற்சியினால் அடைய வேண்டிய பதி அறிவு (மெய்ஞ்ஞானம்) கொண்டு கருதக்கூடியவன் என்று உண்மையை உணர்த்துதற் பொருட்டென்க. இதனை "சித்தமுஞ் செல்லாச் சேட்டியன் காண்க". "நாலுணர் வுணரா நுண்ணியோன் காண்க". "உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படான்" என்ற மற்ற தேசிகர்களின் வாக்காலும் உணர்க.

(கருத்து): மகனுடை ஆராய்ச்சி அறிவு கொண்டும் முதல்வனை உணரமுடியாது (என்றவாறு).

6. (அதிசூக்கும சருவ வியாபி)

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்(கு)
அல்லனாய் ஆனானென் றுந்தீபற
அம்பிகை பாகனென் றுந்தீபற (21)

(கொண்டுகூட்டு): அம்பிகைபாகன் சொல்லும் பொருள்களும் சொல்லாதனவும் அல்லனாய் ஆனான் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (சிற்சத்தியாம் உலக அன்னையாராகிய) பார்வதி தேவியைத் தன் இடப்பாகத்தில் அமர்த்தியுள்ள சிவபிரான் (மக்கள் அறிந்து) சொல்லால் குறிக்கப்படும் பொருள்களும் (அவ்வாறு அவர்கள் அறியாது) சொல்லக் கூடாதவாறு நிற்கும் பொருள்களும் ஆகானாய் அவ்வெல்லாப் பொருள்களிடத்தும் கூடி நிற்கின்றான்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): அம்பிகை என்றது சிற்சத்தியாகிய பார்வதி தேவியை. சிவபிரானது சோபாதிக உபாசனாவடிவின் இடபாதி பாகத்தில் பார்வதிதேவி இடங்கொண்டு நிற்கிறாள் என்று உபநிடதங்களும், சிவாகமங்களும் மெய்யுணர்ந்தோருங் கூறியிருத்தலால் அம்பிகைபாகன் என்றார். இக்கருத்துப் பற்றியே பார்வதிதேவியாருக்குப் பாகம்பிரியாள் என்ற திருநாமமுஞ் சூட்டியுள்ளார்கள் மேலோர்.

மக்களின் அறிவிற்கு எட்டின பொருள்கள் அனைத்தினுக்கும் பெயரிட்டுக் கூறி உணர்த்துவார்

கள். அவர்களின் அறிவிற்கு எட்டாது பிரபஞ்சத்தில் தரிக்கும் பொருள்கள் எண்ணிறந்தனவாகும். அவைகட்கு மக்களால் இடப்பட்ட பெயர்கள் இருக்க முடியாது; இல்லவு மில்லை. ஏனெனில் ஒரு பொருளின் இலக்கணத்தை அறியுமுன் எந்த மகனும் சொல்லைக் கொண்டு அப்பொருளைச் சொல்வானில்லை. இவ்வாருன இருவகைப் பொருள்களையும் சொல்லும் பொருள் சொல்லாத பொருள் எனக் குறிப்பிட்டார், ஆசிரியர். மகன் காணும் பொருள்களும் காணுப் பொருள்களுங் கொண்ட இப்பிரபஞ்சத்தில் யாதொன்றும் பிரபஞ்சகாரணனாகிய முதல்வனாக மாட்டாது என்பார் அஃதியாதொன்றும் அல்லனாய் என்று முதல்வன்மேல் வைத்துக் கூறினார். அவையாகாது அவற்றைக் கடந்து நிற்பினும் விலகி நிற்பான் அல்லன் என்பார் அங்கு ஆனான் என்று உடன் கூறினார். "நிர்விடய சுத்தமான நிர்விகாரத்தை, தடத்தமாய் நின்றொளிர் நிரஞ்சன நிராமயத்தை" என்று தாயுமானார் கூறியுள்ள துதியையும் நோக்குக.

ஆனான் என்றது ஆ என்ற சொல்லின் அடியாகப் பிறந்து ஆதலை அதாவது உண்டாதலைச் செய்தவன் என்ற பொருள் கொண்டு நின்றது. அங்கு அல்லனாய் என்று கூட்டிப் பொருள் காணல் உண்மைக்கு மாற்றமாகு மாதலால் அங்கு ஆனான் எனக் கொண்டுகூட்டி உரைக்கப்பட்டது. அங்கு என்ற சொல் மேலே குறிப்பிட்ட "சொல்லும்–பொருள்", "சொல்லாத பொருள்" என்ற

அனைத்து பொருளிடத்தும் என்ற பொருளை அவா விற்று. அவற்றோடு உடனாந் தன்மையை ஆனான் என்ற சொல்லால் உணர்த்தினார் ஆசிரியர்.

"படர்ந்து நின்றான் பரிபாரக முற்றும்— கடந்து நின்றான்", "உள்ளதும் யாவையுந் தானாகி" என்ற திருமந்திரச் செய்யுட்களோடு இச்செய்யுளை ஒப்புநோக்குக.

(கருத்து): பிரபஞ்சத்தைக் கடந்தும் அதனோடு கூடியுமுள்ளான் முதல்வன் (என்றவாறு).

7. (சீவசிருட்டி நாதா)

கிடந்த கிழவியைக் கிள்ளி எழுப்பி
உடந்தை யுடனேநின் றுந்தீபற
உன்னையே கண்டதென் றுந்தீபற (14)

(கொண்டுகூட்டு): (உடந்தையுடனே) கிடந்த கிழவியை கிள்ளி எழுப்பி உன்னையே கண்டு உடந் தையுடனே நின்றது; என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): தன்பால் ஒருமைப் பாட்டுடன் அடங்கியிருந்த (அருட்சத்தியின் தடத்தமாகிய) திரோதான சத்தியைப் (பதியாகிய) முதல்வன் (சங்கற்ப மாத்திரையான்) தூண்டி உன்னை இவ் வுலகிற் படைத்து உன்னுடன் கூடிக் கலந்து நிற்கிறான்; என்றறிந்து அனுபவித்தற் பொருட்டு உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): உடந்தையுடனே என்ற தொடரைக் கிடந்த என்ற சொல்லுக்கும் அடைமொழியாகக் கொண்டுரைக்க வேண்டும். ஏனெனில் சத்தியாகிய தாயுடனும் சிவனாகிய மகனுடனும் கூடித் தாதான்மியமாய் முதல்வன் நிற்றலால் என்க. தாதான்மியம் என்றால் பிரியாத ஒற்றுமை. இவ்வொற்றுமைச் சம்பந்தம் குணகுணி சம்பந்தமென்றும் பொருட்சம்பந்தம் என்றும் இருவகைப்படும். இவற்றுள் முதல்வனுக்கும் பராசத்திக்கும் உள்ள சம்பந்தம் அக்கினியிற் சூடுபோன்ற குணகுணி சம்பந்தம். முதல்வனுக்கும் உயிருக்குமுள்ள சம்பந்தம் அத்துவித பொருட் சம்பந்தம். முதல்வன் இவ்விருவரிடத்தும் தாதான்மியமாய்க் கூடி நிற்றலால் உடந்தையுடனே என்ற தொடரை இரண்டிடத்துங் கூட்டியுரைக்கலாயிற்று. உடந்தை என்ற சொல் உடன் + உந்தல் எனப் பிரிந்து ஒற்றுமையோடு எழுதல் அல்லது செலுத்தல் எனப் பொருள்படும். உடந்தை என்றாலே போதுமாயினும் பிரிக்கமுடியாத ஒற்றுமை என்பார் உடந்தையுடன் என்று கூட்டியுரைத்தார்.

கிழவி என்ற சொல் கிழமை என்ற பண்பினடிப் பெயர். கிழமை என்றது தலைமை, உரிமை, மாட்சிமை, முதுமை எனப் பல பொருள் கொள்ளினும் இங்கு முதுமை நீங்கலாக மற்றப்பொருள்கள் பொருந்தும். கிழவி சத்தியைக் குறித்து நிற்றலாலும் சத்தி காலங்கடந்தவளாகையாலும் முதியவள் என்ற பொருள் பொருந்தாது. தலைவி, உரியவள், மாண்புடையாள் என்ற பொருள்களே

பொருத்தமுடையன. கிழவியை எழுப்பி என்ற தனால் எழுப்புதற் கருத்தா வேண்டப்பட்டு இது மேலைச் செய்யுளிற் கூறிய அம்பிகை பாகனாகிய முதல்வன் என வருவித்து உரைக்கப்பட்டது. குணகுணி சம்பந்தமுற்றவர்கள் ஆகையால் மேலே கூறிய மூன்று இலக்கணங்களும் கிழவிக்கும் கிழவனுக்கும் பொருந்தும். ஆகவே இருவரும் தலைவன் தலைவியாகவும் உரியவன் உரியவளாகவும், மாண்புடையான் மாண்புடையாளாகவும் இருக்கின்றனர். எவ்வாறெனில், பிரபஞ்சத்தையாளும் அரசனாகையால் தலைவனாகவும், பிரபஞ்சமுழுவதும் அவனுக்கு உடைமைப் பொருளாகையால் அவற்றிற்கு உரியவனாகவும், அசரசர அகில பிரபஞ்சத்தையும் தனித்து உரிமை கொள்ளும் மாண்பு வேறெவர்க்கும் இன்றாகலான் மிக்க மாண்புடையவனாகும் முதல்வனைக் கிழவனென்று மறைமுகத்திலும் அவனது தாதான்மிய திரோதான சத்தியைக் கிழவியென்று நேர்முகத்திலுங் குறிப்பிட்டார். ஏனெனில் செய்யுளிற் குறிப்பிட்ட செயல்களாகிய காண்டல் (படைத்தல்) உடனாய் நிற்றல் என்பனவற்றைக் கிழவன் தானே நேரிற் செய்யாமல் மறைந்து நின்று கிழவியைக் கொண்டு செய்வித்தலால் என்க. இதனை ''சத்திசிவன்றன் விளையாட்டுத்தாரணி — சத்தி சிவமுமாம் சிவன் சத்தியுமாம் — சத்தி சிவனன்றித் தாபரம் வேறில்லை — சத்திதானென்றும் சமைந்துருவாகுமே'' என்ற திருமந்திரவாக்கால் உணர்க.

கிழவி என்றது அருட்சத்தியின் தடத்தமாகிய திரோதான சத்தியை. அருட்சத்தி என்பது பரா சத்தி, திரோதான சத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி என ஐவகைப்படும். இவற்றுல் பரா சத்தியே இறைவனுடைய சொரூபம். மற்றைய நான்கும் பராசத்தியின் தொழிற்பேதம் எனப்படும் தடத்தம். உயிரின் சகச மலம் பக்குவமடைதற் பொருட்டு திரோதான சத்தி பஞ்ச கிருத்தியஞ் செய்து உயிருக்கு அதன் வினைக்கேற்பத் தூல வுடலையும் போகங்களையும் உண்டாக்கித் தர வேண்டுமென்று எண்ணி போகங்களிலுள்ள குண தோடங்களை உயிர் அறியாதபடி மறைத்து நிற் கும். உயிரின் பிறவி அனைத்தினுக்கும் காரண மாயிருப்பது இச்சத்தி எனப்பட்டது. பராசத்தி அல்லது அருட்சத்தியெனல் பொருந்தாது. திரோ தான சத்தியை “ இருட்டறை மூலையிருந்த கிழவி” என்ருர் திருமூலரும்.

கிடந்த அதாவது அடங்கியிருந்த என்ருரா கையால் அதைத் தொழிற்படுத்தி என்பார் எழுப்பி என்ருர். எழுப்பி என்ருலே போதுமாயிருக்கக் கிள்ளியெழுப்பி என்றது என்னையோவெனின், கூறுதும். அரசனது ஆணையை அமைச்சன் உடனே ஏற்கினும் அதனைத் தன் கீழதிகாரிகளைக் கொண்டு சட்டப்படி நடத்தும்போது தூண்டுதலும் காலச் செலவும் வேண்டப்படுமாறு போல முதல் வனது சங்கற்பத்தை ஏற்ற திரோதான சத்தி செய லாற்றுவது உயிரின் பாவ புண்ணியமென்னும் இருவினைப் பயன்களையும் அவற்றின் பக்குவ

காலத்தையும் உயிருக்கு வேண்டிய உடலையும் போகங்களையும் ஆக்கித் தருவதற்கு மாயையின் உதவியும் வேண்டியிருத்தலால் கருமம், காலம், மாயை இம்மூன்றையும் தொழிற்படுத்த தூண்டுதலும் காலச்செலவும் வேண்டப்படும் என்பதை உணர்த்துவதற்குக் கிள்ளியெழுப்பி என்றார் எனக் கொள்ளக்கிடக்கின்றது. ஒரு உயிரானது இறந்த வுடனேயே மறுபிறப்படையாமல் மறுபிறப்பிற்குரிய பக்குவ வினைப்பயனும் பக்குவ காலமும் ஏற்படும் வரையில் அவ்வுயிரைப் பற்றி திரோதான சத்தி தொழிற்படாமல் அடங்கிக் கிடக்குமென்ற உண்மையைக் 'கிடந்த கிழவி' என்று கூறி உணர்த்தினார்.

கண்டது என்ற வினைமுற்றைக் கண்டு என எச்சமாக்கி நின்று என்ற வினையெச்சத்தை நின்றது என முற்றாக்கி உரைக்க வேண்டும். ஏனெனில் கிழவியை எழுப்பினது உடன் நிற்பதற்காக அல்லாமல் சீவனை பிறப்பித்தற்காக ஆகலான் எழுப்பிக்கண்டு உடன் நின்றது என்று கொண்டு கூட்டிப் பொருள் காணவேண்டும்.

இவ்வாறன்றி கிழவி என்றது அருட்சத்தி யென்றும் அவனை எழுப்பினது ஆசிரியனுடைய கடாட்சம் என்றும் உடந்தையுடன் நிற்பது சீவன் என்றும் சீவனைக் கண்டது சிவன் என்றும் நூற் பொருளுக்கும் இலக்கணத்துக்கும் முரணாக உரையாற்றல் பொருந்தாது எனக் காண்க.

உன்னையே என்றதிலுள்ள ஏகாரம் பிரிநிலை, சிருட்டியாதி தொழில்கள் உயிரின் பொருட்டே நிகழ்வன ஆகலான் உடனே என்றதிலுள்ள ஏகாரம் அசை. உன்னையே என்று ஒருமையில் ஒரு மகனைச் சுட்டிக் கூறினதால் இங்கு ஆதிசிருட்டி எனப் பொருந்தாது. புனர் சிருட்டியையே குறிக்கும் எனக் காண்க.

காண்டல், படைத்தல், ஆக்கல் என்ற பொருளில் நின்றது. கடைக் கணித்தல் என்ற பொருள் பொருந்தாது. இதனை சிவஞான போதம் 1-வது சூத்திரத்துள்ள "நோக்காது நோக்கி" என்ற வெண்பாவிலிருந்து அறிந்து கொள்க. இச்செய்யுளை "அவையே தானேயாய்" என்ற தொடக்கமுடைய சிவஞானபோதம் 2-வது சூத்திரத்துடன் ஒப்பிட்டு நோக்குக.

(கருத்து): முதல்வன் திரோதான சித்தியைக் கொண்டு உயிருக்கு இவ்வுலகில் மறுபிறப்பைக் கொடுத்து அதனுடன் கூடி நின்று உபகரிக்கின்றான் (என்றவாறு).

8. (இதுவுமது)

மூலையிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலைவரென் றுந்தீபற (12)

(கொண்டுகூட்டு): மூலையிருந்தாரை முற்றத்தே விட்டவர் சாலப்பெரியர். தவத்தில் தலைவர் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): ஒதுக்கிடத்திற் கிடந்த உயிரை (அதன் அறிவிச்சை செயல்கள் விரிந்து இயங்கும் இடமாகிய) இப்பூவுலகில் பிறவி எடுத்து வரச் செய்தவர் (சர்வ கல்யாண குணங்களும், சர்வ வல்லமையும் படைத்த) பெருமையிற் சிறந்தோராவர். அதுவுமன்றி (சரியை கிரியை யோக) தவங்களை இயற்றுஞ் சீவர்கட்கு உரிய பலனை அளிக்கவல்ல வள்ளலும் ஆவார்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): மூலை, ஒதுக்கிடம். உயிருக்குப் பிறப்பு உண்டாவதற்குக் காரணம் அதன் அஞ்ஞதி மலப் பற்று. ஆணவமலத்தில், அழுந்தி அறிவிச்சை செயல்கள் விரியாத நிலையில் ஒதுக்கிடத்தில் கிடந்ததாகையால் மூலையிருந்தார் என்று பிறவி எடுக்காதிருக்கும் உயிரைக் குறிப்பிட்டார். மூலை என்றதில் இல் உருபு தொக்கிநின்றது. சடமாகிய தூலவுடல் உண்டாவது சடமாகிய மாயையிலிருந்துதான். ஆதலால் இதனையுண்டாக்க நிமித்தகாரணமும் துணைக்காரணமும் வேண்டற்படும்; துணைக் காரணம் உயிரின் மலமும், வினையும். பக்குவமாயுள்ள வினைகட்கேற்ப மாயையினின்றுந் தேவையான தூலவுடலையாக்கி குக்குமவுடலோடு நின்ற உயிருடன் பிணைப்பதற்கு சிற்சக்தி உதவி செய்கிறது. இதனைச் செய்ய சங்கற்பிப்பவன் நிமித்தக்காரணனாகிய முதல்வன். இவ்வாறு முதல்வன் சிற்சத்தியின் கூறாகிய திரோதான சத்தி வடிவில் கூடிநின்று பிறப்பிற்குரிய தூலவுடலை

உயிருக்கு ஆக்கித்தந்து இவ்வுலகில் பிறக்கச் செய்கிறன் என்பார், "மூலையிருந்தாரை முற்றத்தே விட்டவர்" என்று முதல்வனைக் குறிப்பிட்டார். "உற்று வனைவான் அவனே உலகினைப் பெற்று வனைவான் அவனே பிறவியை" என்ற திருமந்திரப் பொருளை உற்று நோக்குக.

இங்கு கூறிய பிறப்பு சிருட்டியாதியில் ஏற் பட்ட ஒன்றைக் குறிப்பிட்டதல்ல வென்றும் சக லருக்கு உண்டாகும் மறுபிறப்பென்று கொள்ளல் வேண்டும். ஏனெனில், தவத்தில் தலைவர் என்று கூறியதனல் சரியை முதலிய ஞானபாத தவம் பல பிறவிகளிற் கொண்ட புண்ணிய வசத்தாலும் முதல்வனுடைய அருட்பிரவாகத்தாலும் மெய் யுணர்ந்தோரின் உதவி கொண்டும் கையேற்கப் படுவதாதலால் என்க. "அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும் - மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும் - புறங்கேட்டும் பொன்னுரை மேனி எம் ஈசன் - திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே" என்ற திருமூலநாதரின் அனுபவ வாக்கை உணர்க.

தவம் என்றது சரியை கிரியை யோக தவங்களை. இவற்றையே சிவதவங்கள் என்றும் ஞான தவங்கள் என்றும் வேதாகமங்கள் கூறு கின்றன. யாதானுமொரு தவம் எவருடைய பிரசாதத்தை வேண்டி இயற்றப்படுமோ அவரே அத்தவத்திற்குத் தலைவர் எனப்படுவார்.

உயிர்க்குற்றமாகிய சகச மலத்தைத் துடைக்க வென்று உயிரின் பொருட்டாகவே சிருட்டி முதலிய ஐந்து தொழில்களை சிற்சக்தியுடன் கூடி நின்று முதல்வனே செய்விக்கிருன். ஆதலால் அம் முதல்வன் அருளே வடிவாகக் கொண்டு சருவ வல்லமையும் சருவ கலியாண குணங்களும் பொருந்திய சிறந்தவன் என்பார் சாலப்பெரியர் என்ருர். அவரே ஞானதவசிகட்கு முத்திப் பேற்றை அளிக்குந் தாதாவாயு மிருக்கிருர் என்பார் தவத்தில் தலைவர் என்ருர்.

இவ்வாறன்றி, தனுகரணபுவன போகங் களோடு கூடி அறிவிச்சை செயல்கள் விரிவாகத் தொழிற்பட்டு நிற்கும் சகல நிலையை மூலை என்றும் அத்துவிதப் பரமுத்தி நிலையை முற்றம் என்றும் பொருள்படக் கூறுதல் பொருத்தமன்று. ஏனெனில் பரமுத்தி கூட்டுவிப்பவரைச் சாலப் பெரியர் என்று கூறிப்பிறகு அந்நிலைக்குக் கீழ்ப்படியாயுள்ள தவங்களை இயற்றுபவருக்கு அவர் தலைவராய் இருக்கிருர் என்று கூறுதல் பொருந்தாது. மேலும், முற்றம் என்ருல் முன்றில் அல்லது வீட்டின் முன்னிடம். அதாவது வீட்டிற்குள் செல்லும் வாயிலாவுள்ள இடம். ஆகையால் முற்றத்தை வீடெனல் பொருந்தாது. ஆகுபெயராய்க் கொண்டு பார்க்கும்போது சகலநிலை முத்தி நிலைக்கு முற்ற மாய் அமைந்திருப்பதன்றி முத்திநிலை முற்ற மாகாது. முத்திநிலை சீவனுக்கு இடமென்ருல் சீவிக்கும் உயிரைப் பக்குவகாலத்தில் முடிவில் தன் பக்கம் இழுத்துக் கொள்கிருன் முதல்வன் எனில்

முத்திக்கு மறுபெயர் முற்றமென்றால் முற்றத்தில் கொண்டவர் அல்லது ஏற்றவர் என்று கூறுதலே பொருந்துமன்றி முற்றத்தேவிட்டவர் என்றல் பொருந்தாது எனக் காண்க.

(கருத்து): பெத்த நிலையில் உயிரின் பொருட்டாகவே ஐந்து தொழில்களைச் செய்தருளும் முதல்வன்க ஞானசாதகருக்கு முத்திப்பிரசாதமும் அருளிச் செய்கிறான் (என்றவாறு)

9. (திதி சம்மார கருத்தா)

அண்ட முதலாம் அனைத்தையும் உட்கொண்டு
கொண்டதைக் கொள்ளாதே உந்தீபற
குறைவற்ற செல்வமென் றுந்தீபற (42)

(கொண்டுகூட்டு): அண்டமுதலாம் அனைத்தையும் கொள்ளாதே கொண்டு உட்(கொள்ளாதே) கொண்ட அது, குறைவற்ற செல்வம் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): சகல புவனங்களையும் அவற்றிலுள்ள உயிர்களையும் திதி நிலையில் (தன் கரணத்தால்) தரிக்காமல் (வியாபக மாத்திரத்தால்) தரித்து (சருவசம்மார நிலையில் அவையனைத்தையும் கரணத்தாலன்றி வியாபகத்தினால்) தம்முள் சூக்கும மாய் அடங்கும்படி செய்யும் (பஞ்சகிருத்திய பதிவாகிய) முதல்வன் (நிறைந்த) பரிபூரண ஆனந்தபரன்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயரஎழுப்பெழுப்பு.

(விளக்கம்): கொண்டத்தை என்பது கொண்ட + அத்தை எனப் பிரியும். அத்தை என்பதிலுள்ள 'த்' சாரியை 'ஐ' அசையாகக் கொள்ள 'கொண்ட அது' என நிற்கும். 'ஐ' உருபாகக் கொண்டு கொண்ட அதை எனினும் பொருந்தும். கொள்ளல் என்றது வாருதல், தரித்தல் என்ற பொருள்கொள்ளுமாதலால் கொண்டு என்றதற்குத் தரித்து எனப்பட்டது. "ஆக்காதே கண்டு நோக்காதே நோக்கி நொடிக்காமல் நொடித்து" என்றாற்போல கொள்ளாதே கொண்டு என்றார். ஆதலால் கரணத்தாலன்றி வியாபக மாத்திரத்தால் எனப்பொருள் கொள்ள நின்றது. கொள்ளாதே கொண்ட என்றதனை கொள்ளாதே கொண்டு என்றும் உட்கொண்டு என்றதை உட்கொண்ட என்றும் பெயரெச்ச வினையெச்சங்களை வினையெச்ச பெயரெச்சமாய் மாற்றிப் பொருள் காணவேண்டும். ஏனெனில் கொள்ளாதே கொண்டு என்ற திதியையும் உட்(கொள்ளாதே) கொண்டு என்றது சம்மாரத்தையும் குறித்து நிற்றலால் காத்தலை முன்னர் வைத்து அழித்தலைப்பின் வைத்துக் கொண்டு கூட்டிப் பொருள் காணவேண்டியது அறிவுடையோர் கடமையாதலால் என்க. உட்கொண்ட என்றது தன்னுள் சூக்குமமாய் அடங்கச் செய்தல். கொள்ளாதே என்ற சொல்லை இரட்டித்து கூட்டிப்பொருள் காணவேண்டும். ஏனெனில் இருசெயலும் கரணத்தாலன்றி வியாபகத்தால் இயற்றப்படுவதால் என்க. கொண்டு உட்கொண்டு என்ற இரண்டுஇடத்தும் கொண்டு என்ற சொல்,

'தரித்து' என்ற ஒரே பொருளில் நின்றதையுணர்ந்தால் உட்கொண்டு என்பது உள்ளேதரித்தலாகிய ஒடுக்கத்தையும், அடைமொழியற்ற 'கொண்டு' என்பது அதற்கு எதிரிடைப் பொருளில் (வெளியில்) தரித்தலாகிய காத்தலையும் உணர்த்தி நிற்பதைக் காணலாம்.

"விச்சதன்றியே விளைவு செய்குவாய்—விண்ணு மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" என்ற திருவாசகச் செய்யுட் பொருளை நோக்குக.

சம்மாரம் பலவகை. ஒருசில புவனங்கள் ஓர் கால் அழிவுறும். ஒருக்கால் ஒரே புவனத்தில் ஒரு சில பகுதிகள் மட்டும் அழிவுறும். அனைத்துப் புவனங்களும், ஒருசேர அழிவுற்று அடங்குவது சருவ சம்மாரகாலத்தில்தான். இங்கு அனைத்தையும் என்று கூறியிருந்தலால் சருவசம்மார நிலை எனக் கூறப்பட்டது. இச்சருவ சம்மாரத்தைச் செய்பவன் சிவபிரான். மற்றைய ஏகதேச சம்மாரங்கள் சிவபிரானுல் அதிட்டிக்கப்பட்டு நிற்கும் சதாசிவன் முதலாய புவனப்பதிகளால் ஆற்றப்படும். சிவபிரானுடைய வரம்பிலின்ப நிலையையுணர்த்த வேண்டி சருவசங்கார முதல்வனுயினும் அச்சங்காரமும் அருள் கொண்டே நடைபெறுவதால் அவன் வரம்பிலின்பன் என்றறிவாய் என போதித்தார்.

செல்வம் என்ருல் துறக்கம் அல்லது இன்ப உலகு. இவ்வுலகுங் காலத்தால் முடிவுறுமாதலால் குறைவற்ற செல்வம் என்று வரம்பிலின்ப சிவா

னந்த நிலையை உணர்த்தினர். செல்வம் என்றறி என வினைமுடிவை வருவித்துப் பொருள்காண வேண்டும்; அல்லது செல்வம் என்று உந்தீபற என முடிக்க வேண்டும்; அல்லது செல்வம் என்றறிந்து உந்தீபற என மேலே பொதுவிளக்கத்திற் கூறியபடி முடிக்க வேண்டும்.

பிரபஞ்ச முழுவதையும் தரித்து அளித்து அடக்கியருளும் முதல்வன் என்றதனால் அடங்கிய பொருள் அடங்கியவிடத்திலிருந்தே மீளத் தோன்றுமாதலால் மீளப் பிரபஞ்சத்தைத் தோற்றுவிப்பவனும் அவனே என்ருயிற்று. இம் முச்செயல்களும் அவனது அருளால் ஆவனவாதலால் அவனுடைய அருட்பிரகாசமும், சீவர்கள் தங்கள் வினைப்பயன்களைத் துய்த்து ஒழித்தற் பொருட்டு அவர்களுடைய அறிவை மறைத்தருளுதலால் அவனுடைய திரோதான சத்திப் பிரவாகமும் உய்த்துணரக் கிடக்கின்றன. மேலும், பஞ்ச கிருத்தியங்களிற் சிகரமாயும் உயிருக்கு ஒப்பற்ற உபகாரமாயுமுள்ள அநுக்கிரகத்தை அதன் பயனுகிய பேரானந்தத்தைக் கூறி உணர்த்தினர். இப்பேற்றையடைவதற்குச் சாருமிடமாயுள்ளவன் முதல்வனே என்பார் குறைவற்ற செல்வன் என்ருர். இங்கு சிவஞான போதம் 9வது சூத்திரத்தில் 2ம் அதிகரணத்திற் கூறியுள்ள ''நிற்குணனுய் நின்மலனுய் நித்தியா னந்தனுய்த் – தற்பரமாய் நின்ற தனி முதல்வன்'' என்ற உதாரண வெண்பாவின் பொருளை நோக்குக.

இவ்வாறு கொண்டுகூட்டி உண்மைப் பொருளைக் காணமாட்டாமல் அண்டமுதலாய அனைத்தையும் உட்கொண்டு கொண்டது மானுடவுடல் என்றும் அதனை நீ முடிவாகக் கொள்ளாதே என்றும் பொருளுரைத்தல் அறியாமையாகும்.

(கருத்து): பஞ்சகிருத்தியப் பதியாகிய சிவபெருமான் வரம்பிலின்பத்துக்கு உறைவிடமான அமுத சாகரமாயுள்ளான் (என்றவாறு).

10. (ஆளுடைநாதன்)

ஏகனுமாகி அநேகனு மானவன்
நாதனு மானானென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற (5)

(கொண்டுகூட்டு): ஏகனுமாகி அநேகனுமானவன் நாதனுமானான். நம்மையே ஆண்டான்; என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (சிருட்டிக்குமுன்) ஏகபராபரப் பொருளாயிருந்து (பிரபஞ்சத்தைப் படைத்து அவற்றுள் ஒவ்வொன்றோடுங் கூடி நிற்குந் தன்மையால்) பலவாகி வியாபித்து நின்ற முதல்வன் (பிரபஞ்சத்தை ஆளும்) அரசனுமாய் நின்றதுமன்றி (சீவர்களில்) மக்களாயுள்ள நம்மை மட்டும் அடிமைகொண்டு நடாத்தும் ஆண்டானுமாயினன்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): சிருட்டிக்கு முன் ஒரே மெய்ப் பொருளாய்த் தனித்து நின்றது அகள நிலை. இறைவன் ஒருவனே, இரண்டில்லை என்று வேதாகமங்கள் கூறுவது இச்சொரூப நிலையிலுள்ள முதல்வனைத்தான். சொரூப நிலையே சச்சிதானந்தநிலை. சிருட்டிக்குப்பின் சித்து சடமாயுள்ள ஒவ்வொரு பொருளோடும் அத்துவிதமாய்க் கலந்து கூடி நிற்கும் நிலையில் பலவாகி நின்றான். இது சகளநிலை. ஒரு பொருளாய் யாவையுங் கடந்து நிற்கும் நிலைக்கு இச்சகள நிலை இழுக்கைத்தராது என்பதையுணர்த்த பிரபஞ்சத்தில் முதல்வன் ஏககாலத்தில் ஏகனையும் அநேகனையும் நாதனையும் ஆண்டானையுமுள்ளான் என்று எண்ணும்மை கொடுத்துச் சொன்னார். ஆயினும் ஆண்டான் அடிமை சம்பந்தத்தில் நிற்பது சீவர்களில் மக்களாய்ப் பிறந்த நம்மிடத்தில் மட்டும் என்பார். நம்மையே என்று பிரிநிலை ஏகாரத்தால் அறிவுறுத்தினார்.

அநேகனுமானவன் என்றது முதற் செய்யுளில் சகளமாய் வந்தான் என்றதை விளக்குவதாகும். உயிர்கள் அநாதியாக ஆணவமலத்துள் அழுந்தி அறிவு இச்சை செயல்கள் ஏழாவண்ணம் மறைக்கப்பட்டுக் கிடந்த நிலையைக் கண்டு முதல்வன் இரக்கங் கொண்டு தன் பரிக்கிரம சத்தியாகிய மாயையினின்றும் தனுகரணபுவன போகங்களைத் தன் தாதான்மிய சத்தியாகிய திரோதான சத்தியைக் கொண்டு படைத்தருளச் செய்து உயிர்கட்குச் சிறிது அறிவு, இச்சை, செயல்கள் வெளிப்படும்படி செய்கிறான். அவ்வாறான உடலைப் பெற்றும்

தாமாகவே எதையுங் கண்டறியுஞ் சத்தியற்ற உயிர்களுடன் முதல்வன் திரோதான சத்தி வடிவில் அத்துவித சம்பந்தத்தில் கூடியிருந்து உயிர்கள் உலகபோகங்களைக் கண்டனுபவிக்கும்படி அவை கட்கு கண்டுகாட்டி இடைவிடாது உபகரித்து நிற்ற லால் முதல்வனுடைய இரக்கம் என்னும் அருளாட்சியின் தரம் நுண்ணறிவுடையோரால் சற்று அறிதற்பாலதாகும். இவ்வாறு அருட்சத்தி வடிவாய் உயிர்கள் தோறும் கூடி நிற்பதால் ஏகனு யுள்ள முதல்வன் அநேகனுமானான் என்றவாறு. இவண் சிவஞானபோதம் 5ம் சூத்திரத்தின் 2வது அதிகரணத்தில் "அருளுண்டாம் ஈசற்கது சத்தி யன்றே" என்று தொடங்கும் உதாரணச் செய்யுளின் பொருளை நோக்குக.

மேலும், முதல்வன் பஞ்சதொழில்களையும் பஞ்சமூர்த்திகளைக் கொண்டும் சத்தியைக் கொண் டும் நடத்துகிறானதலால் உலகரசாட்சி நடத்தும் அரசனைப் போல பிரபஞ்சத்தை நடத்தித் தான் விலகி நிற்றலால் பிரபஞ்சத்திற்கு நாத (அரச) னுமானான் என்றார். "திருமாலிந்திரன் பிரமனுப மனியன் தபனனந்தி செவ்வேளாதி–தருமமுது குரவருக்குந்தன்னருளாசிரியத் தன்மை நல்கி– வருமெவர்க்கும்" என்ற தத்துவ விளக்கப் பாயிரச் செய்யுட் பொருளையும் நோக்குக.

சராசரப் பொருள்கள் அனைத்தும் முதல்வனு டைய ஆணைக்குட்பட்டு அவனுடைய சங்கற்பத் தால் இயங்குகின்றன. ஆதலால் சகலமும் அவனு

டைய உடைமையாயும், அவன் அவற்றிற்கு உடையானாயுமிருக்கிறான். அவ்வுடைமைப் பொருள்களில் பகுத்தறிவோடு கூடிய சகலராகிய மக்களை மட்டும் தன் அடியார்களாயுங் கொண்டு தான் அவர்களை ஆண்டு வருவதால் நம்மையே ஆண்டான் என்றார். சிவஞானபோதம் 2ம் சூத்திரம் 4வது அதிகரணத்துள்ள "அவையுடைமை ஆளா நாமங்கு" என்று முடியும் உதாரணச் செய்யுளாலும் அறிக.

இவ்வாறன்றி, நாதன் ஆண்டான் என்ற சொற்களை ஒரு பொருட் பன்மொழியாகக் கொண்டு உரைகோடல் பொருத்தமற்றது. அவன் பலவாயிருக்கிறான் என்று கூறி முடித்தல் பரிணாமவாதத்தை யொட்டிய மயக்கவுரையாகும்.

(கருத்து): முதல்வன் பிரபஞ்சத்தில் அத்துவித சம்பந்தத்தில் ஏகனும் அநேகனும், நாதனும், ஆண்டானும் படர்ந்து நின்றளிக்கின்றான் (என்றவாறு).

11. (அருளாவன்)

மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவாதே உந்தீபற
அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற. (18)

(கொண்டுகூட்டு): அவன்கண் மருளுந் தெருளும் மறக்கும்; (ஆனால் அது) அருளை மறவாது. அதுவே இங்கு உள்ளது; என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): முதல்வனுடைய முற்றறிவின் பிரகாசம் சீவர்களின் மயக்கவுணர்வையும் தெளிவுணர்வையும் (அவை மாயாகாரியமாதலால்) தோய்ந்தறியாது. ஆயினும் அது ஒரு போதும் அருளைவிட்டு சங்கற்பத்தாலும் பிரிந்திராது. முதல்வனுடைய அருட்பிரகாசம் ஒன்றே இவ்வுலகில் வியாபகமாய் நிலைத்திருப்பதாகும்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): மருள் தெருள் என்பனவும், மறக்கும் மறக்காது என்பனவும் ஒன்றிற்கொன்று எதிர்மறைச் சொற்கள். மறவாதே என்றதிலுள்ள ஏகாரம் தேற்றம். அசையாகவுங் கொள்ளலாம். மறக்கும் மறவா என்ற இருவினைகட்கும் எழுவாய் அவன் கண்தான். இவ்வாறன்றி உன் கண்ணாகிய அவன் அருளை நீ மறவாதே என்று முன்னிலைச் சுட்டை வருவித்துப் பொருள் காணலால் செய்யுட் பொருள் முழுவதுஞ் சிதையும். தெருள், அறிவின் தெளிவு; மருள், அறிவின் தெளிவின்மை. தெருள் என்றால் விகற்பம் அல்லது அச்சம் என்றல் பொருந்தாது. கண் அறிவு அல்லது அறிவின் ஒளி. மறத்தல் எண்ணலுக்கு எதிர்மறையாதலாலும், எண்ணல் அறிதலுக்குமுன் நிகழ்தலாலும் மறக்கும் என்றதற்கு அறியாது என்றுரைக்கப்பட்டது. கண்ணின் இயல்பு ஒரு பொருளிடத்து சென்று படர்ந்து தோய்ந்து அறிதல். ஆதலால் அவன் கண் மறக்கும் என்றதற்கு அவனது முற்றறிவின் பிரகாசம் தோய்ந்தறியாது எனப்பட்டது. அருள் முதல்வனின்

தாதான்மிய (பிரிக்கமுடியாத) சொரூப சத்தியாதலால் முதல்வன் அருளைவிட்டுப் பிரிந்திரான் என்பார் அவன் கண் அருளை மறவாது என்றார்.

ஆணவமலத்தால் மறைப்புண்ட சீவர்களின் அறிவு மாயாகாரியமாகிய உடல் உலகங்களின் உதவி கொண்டு சிறிது சிறிதாக விளக்கமுறுகிறது. அவரவர் பெற்ற உடல் அவரவர் வினைக்கேற்ப வெவ்வேறாகலான் அவரவரின் அறிவின் விளக்கமும் வெவ்வேறு தரப்படும் எனப்போதரும். இதனாற்றான் ஒருவனுடைய அறிவு விளக்கமுற்ற தெளிவறிவாயும் மற்றொருவனுடைய அறிவு விளக்கமுறாத மருளறிவாயும் இருத்தல் கண்கூடு. இவ்வாறாக சீவர்களின் மருளுந் தெருளும் மாயையின் காரியங்களால் ஆம். "யாவையுஞ்சூனியஞ் சத்தெதிராகலின்" சீவர்களின் மருளுந் தெருளும் முதல்வன் முன் நில்லா என்பார் அவன்கண் அவற்றைக் கருதாது மறக்கும் என்றார். "மாயைமருவிடான் சிவனவன் கண்–உரைதரா அசேதனத்தால் என்று" சித்தியாரிற் கூறியதும் இதுபற்றியே.

இப்பிரபஞ்சத்தைத் தன்னருட்கொண்டே நோக்கி யளிக்கின்றான் முதல்வன். ஆகையால் இங்கு நிலைத்திருப்பது அவன் அருளே என்று உறுதிபடக் கூறினார். "சிவனறிந்தருளுவன் சீவராசியை, சிவனை அறிந்திடா சீவராசிகள்" என்றும் "அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட் டருளில் அழிந்திளைப் பாறி மறைந்திட்–டருளான் ஆனந்தத் தாரமு தூட்டி–அருளால் என் நந்தி அகம்புகுந்

தானே'' என்றும் சிவஞான தேசிகர்கள் கூறியுள்ளதை இங்கு ஒப்பிட்டுக் காண்க.

(கருத்து): அறிவுறும் பிரபஞ்சத்தில் அழியாதிருந்து அனைத்தையும் தாங்கி நிற்கும் முதல்வனுடைய திருவருள் (சீவர்களின் அறிவு பேதத்தைக் கருதாது) எல்லோர் மாட்டும் என்றும் ஒன்று போல் அருள்பாலிக்கிறது. (ஆயினும் அவரவர் அறிவு கொண்ட அளவில் அதனை ஏற்கின்றனர்) (என்றவாறு).

12. (இதுவுமது)

அவனிவ னுவது அவனருளா லல்லது
இவனவ னகானென் றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற. (40)

(கொண்டுகூட்டு): அவன் இவனானது அவனருளால் அல்லது இவன் அவனாகான், என்றும் இவனே என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (மெய்யுணர்வில்லாத சீவனுடைய பெத்தநிலையில்) முதல்வன் சீவனாக ஒன்றுபட்டு நின்றது முதல்வனுடைய கருணையினால் (எனக்காண்க). அவ்வாறு (அவனது கருணை பாலிக்க) இல்லையெனில் உயிரானது (முத்தி நிலை எய்தி முதல்வனோடு ஒன்றுபட்டு) அவனேயாய் (சிவப்பேறெய்தி) நிற்க இயலாது. (அஃதன்றியும்) எப்போதும் சீவன் சீவனாகவே இருப்பன் (அதாவது சனன மரண சமுசாரத்துக் கடலிலேயே உழன்று

தவிப்பன் என்றவாறு) என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப் பெழுப்பு.

(விளக்கம்): உயிரானது மெய்யுணராமல் தான்கூடி வாழும் உடலோடு உடலாய் நின்று சீவிக்கும் நிலையில் முதல்வன் அவ்வுயிரகத்துள் காட்டாக்கினிபோல் திரோதான சத்திவடிவில் மறைந்து நின்று உயிரானது விடயங்களை அறிந்து அநுபவிக்கும் பொருட்டு உயிரேயாய் ஒன்றுபட்டு கண்டு காட்டும் உபகாரத்தைச் செய்து வருகிறான். இந்நிலையில் உயிருடல் போன்று முதல்வன் சீவனு கவே நிற்கிறான் என்பார் அவன் இவன் ஆனது என்றார். அவ்வாறு நின்று உபகரிப்பது தன் பொருட்டன்றி சீவனின் பொருட்டே யாகலான் அவன் அவன் ஆனது அவனருளால் என்றுங் கூறினார். இது முதல்வனுக்குத் தடத்த நிலையாகும். சீவனுக்குப் பெத்த நிலையாகும்.

முதல்வனுடைய அருட்செயல் இத்துடன் நின்றுவிடுவதில்லை. சிற்றறிவோடு கூடி, சிற்றிச்சை பூண்டு, சிறுதொழிலாற்றி, துக்கத்தோடு கலந்த சிற்றின்பம் நுகர்ந்து, இடையறாது தொடர்ந்து வரும் வினைவழியே என்றும் இறந்து பிறந்து உழ லும் சீவன், பல சனன நல்லுணர்வினால் பஞ்சேந் திரிய உலக வாழ்வு துக்கமெனக்கண்டு, உய்யும் வழியை நாடி, புறச் சமயத்துட்புக்கு உழன்று, இறுதியில் நல்லோர் உறவால் முதல்வனால் வகுத் துரைக்கப்பட்ட அத்துவித சித்தாந்த சன்மார்க்கத்

தில் தலையிட்டு, நால்வகை ஞானபாதங்களை ஒவ்வொன்றாகக் கைக்கொண்டு, பழகித் தேர்ந்து சிவ ஞானகுரு தீக்கை பெற்று, மெய்யுணர்ந்து அசத்தாகிய பாசக் கூட்டத்தை ஒருவி, முதல்வனுடைய திருவருள் தன்னுள் நின்று உபகரித்து வருவதையுணர்ந்து, திருவடியைப் பற்றி தற்போதமிழந்து, இறைபணியாற்றி, சோகம் பாவிந்து, நிட்டை கூடி, நிற்கும் நிலையில் முழு அருள் வீழ்ச்சியுற்று, சீவத்துவம் நீங்கித் தன்னையிழந்து, முதல்வனுடன் அருவநிலையில் ஒன்றாய்க் கலந்து, அவனேயாய் நின்று முத்தியெய்தி பேரானந்தத்தை அனுபவித்து நிலக்கின்றான் என்றது சீவன் முத்த சிவஞானிகளின் சுவானுபவமாகும். இவ்வாறு சீவனைச் சீவத்துவம் நீங்கச் செய்து தெள்ளிய சித்தாக்கித் தன்னுடன் ஏகமாய் நின்று ஆனந்திக்கச் செய்வதும் முதல்வனுடைய அருளொளி ஆதலாலும் முத்திநிலையில் உயிரானது சிவத்துள் மறைந்து கண்ணும் ஆன்ம போதமும் போல் சிவமேயாய் நின்று சிவானுபூதி எய்தி நிலைத்தலாலும் இவன் அவனாதற்கும் அருளே காரணம் என்பார், அவன் அருளல்லது இவன் அவனாகான் என்று எதிர்மறைப் பொருளில் கூறிவலியுறுத்தினார் எனக் காண்க. இது முதல்வனுடைய சொருபநிலை; சீவனுடைய முத்திநிலை. "சிவமாதல் வேதாந்த சித்தாத்தமாகும்" என்ற திருமந்திரச் செய்யுட் பொருளையும் நோக்குக.

இஃதன்றியும், அப்பேரருள் இல்வழி உண்டாம் மாப்பெருங்கேட்டையும் எடுத்துரைத்து முதல்வனது அருட்பதிவைப் பெறுதலின் இன்றியமை

யாத் தன்மையை போதிக்கின்ருர் ஆசிரியர். சத்தினிபாதம் என்னும் அருட்பதிவு கை கூடவில்லை யெனில் பிறவிக் கடலினின்றுந் தப்பிக் கரையேறத் தனக்கும் ஆற்றலின்றி அதற்குரிய துணையுமின்றி ஊழிதோறூழி நால்வகை யோனிகளிலும் பிறந் திறந்து உழலுஞ் சீவனுகவே இருப்பான் என்பார், என்றும் இவனேயாம் என்ருர்.

சமுசாரதுக்கக் கடலில் நின்று தவிப்பன் என்றது குறிப்பெச்சம். மேலிரண்டு இடத்தும் ஆனது ஆகான் என்ற வினைமுடிவைப் பிரயோகித் திருப்பதால் என்றும் இவனே என்ற தொடருக்கும் ஆகும் என்ற தொடருக்கும் ஆகும் என்ற வினை முடிவைக் கூட்டி உரைக்கப்பட்டது. இவன் அடியிற் குறித்த திருமந்திரச் செய்யுட் பொருளை யுந்தேர்க. "வள்ளல் தலைவனை வானநன்னுடனை- வெள்ளப்புனற்சடை வேத முதல்வனைக் - கள்ளப் பெருமக்கள் காண்பர் கொலோ என்று - உள்ளத் தினுள்ளே ஒளித்திருந்தாளுமே"; "ஆளும் மலர்ப் பதந்தந்த கடவுளை - நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர் - கோளும் வினையும் அறுக்குங்குரிசில்"; "ஏனோர் பெருமையனுகிலும் எம்மிறை - ஊனே சிறுமையுள் உட்கலந்தங்குளன் - வானோரறியும் அளவல்லன் மாதேவன் - தானே அறியும் தவத் தின் அளவே". மேலும், "உலகமு முயிரும் ஒருங் குறப் படைத்து அவ்வுயிரிடை நடனம் ஒவாதுளுற் றியும் ஆருயிரறியா அற்புதம் என்கொல், உலக மார்த்தாண்டன் ஒளிகொடறிந்தும் உலகமார்த்

தாண்டன் உருவறியாவே'' என்ற ஞானவள்ள லாரின் திருமொழியையும் கூர்ந்தறிக.

இவ்வாறன்றி அல்லது என்றது தேற்றப் பொருளில் அவனருளாலேயே எனப் பொருள் கொண்டு நின்றதாக உரைசெய்து 'இறைவன் ஆகான், என்றும் இவனே' என்றதற்கு நான் ஒரு காலத்தும் அவன் ஆகாமல் என்றும் நானாகவே இருப்பேன் என்று பொருள் கோடல் செய்யுளிற் கண்ட சித்தாந்த மெய்ப் பொருளைக் காணமாட்டா மல் மனம்போனபடி கூறியதெனக் காண்க.

(கருத்து): பெத்தம் முத்தி என்ற இரு நிலை களிலும் சீவன் நிலைப்பது முதல்வனுடைய அருட் பிரகாசத்தினால் என்பதையுணர்ந்து சீவன் என்றும் அத்திருவருளையே நாடி சேவடியைப் பற்றி நின்று அவனாதல் சீவனின் கடனாகும் (என்றவாறு).

(பகுதி 1 - சிவபரன் - முடிவுற்றது)

## பகுதி 2 — சீடனுக்கு அறிவுரை.

**13.** (அசத்தை ஒருவுதல்)

பழக்கம் தவிரப் பழகுவது அன்றி
உழப்புவது என் பெணே உந்தீபற
ஒருபொரு ளாலே என்று உந்தீபற. (2)

(கொண்டுகூட்டு): பெணே: ஒருபொருளாலே (உன்) பழக்கந் தவிர பழகுவதன்றி உழப்புவது என்? என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): மாணவப் பெண்ணே: முதல்வனுடைய உபகாரத்தினாலே உனது (அறியாமையினால் உடலையே நீயாகக் கருதி பஞ்சேந்திரிய இகவாழ்வில் வாழ்ந்துவரும்) நீண்டகாலப் பழக்கத்தை நசிப்பிக்க (சரியை, கிரியை, யோகமென்னுந் தவங்களைக் கைக்கொண்டு பழகுவதை விட்டு காலங்கடத்துவது யாது பயனைக் கருதி (பயன் ஒன்றுமின்றாகலால் காலந்தாழ்த்தாது அத்தவங்களைக் கைக்கொண்டு சாதிக்க வேண்டும்) என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): பழக்கம், நடை குணம் அல்லது பண்பினால் அமைவது. பண்பைப் பழக்கமென்றது காரணத்தைக் காரியத்தாற் குறிப்பிட்டதாகும். மகனின் பழக்கம் (பண்பு) யாதெனில்: "ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்தல்" சார்ந்ததன் வண்ணமாதல் உயிருக்குத்தொன்று தொட்டு வரும் இயல்பு. இவ்வியற்கைக் குணத்தைக் கண்டு தாயுமான சுவாமிகள் "அநியாயமாயிந்த வுடலை நானென்றுவரும் அந்தகர்க்காளாக்கவோ" என்று வருந்தி முதல்வனிடம் முறையிட்டதைக் கற்றோர் அறிவர். இப்பழக்கந் தவிர்ப்பது எவ்வாற்றால் எனின், சரியை, கிரியை, யோக தவங்களை இயற்றித் தேருதலின் பயனாகத் தம் முதல்வன் குருவாய் வந்து உண்மையை உணர்த்துமுகத்தாலே தான் என்று "சிவஞானபோதம்" போதிக்கின்றது. தவப் பழக்கத்தைக் கொண்டால் முதல்வனுடைய அருளுதவி கொண்டு தொன்மையாயுள்ள உன் தீய

பழக்கங்கள் தீரும் என்றார். ஏற்றுள்ள பழக்கத்தைக் கைவிட்டு புதியதொரு பழக்கத்தை ஏற்கச் சொன்னால் அதனால் ஏற்பவனுக்கு இதுவரையில் கிட்டியிராத பெரும்பயன் கிட்டுமென்று சொன்னா லொழிய புதுப் பழக்கத்தை ஒருவன் ஏற்க மாட்டான். ஆகையால் புதுப் பழக்கமாகிய தவசாதனையின் முடிவில் முதல்வனே குருவாய் வந்தருளி மகனுடைய உண்மை இயல்பையும் தனது அத்துவித சம்பந்தத்தையும் உணர்த்தி சேவடியைப் பற்றி நின்று முத்திப் பேற்றை அடையச் செய்வான். ஆதலால் முதல்வனுடைய அருளுதவிகொண்டே அசத்தாய் நிற்கும் பழக் கத்தை விட்டு சத்தாகிக் கடைத்தேறுவாய் என்று சொல்லாமற் சொன்னார். ஆதலாற்றான் ஒரு பொருளாலே என்றதற்கு முதல்வனின் உபகாரத் தாலே என்றுரைக்கப்பட்டது. சரியை முதலிய முத்தவத்தின் பயன் திருவடி ஞானம். திருவடி ஞானத்தின் பயன் திருவடிப்பேறு என்றவை சித்தாந்த சிவஞானிகளின் அநுபவக் கூற்று.

பழக்கம் என்றதற்கு அநாதியாயுள்ள ஆணவ மாதி மலக்கட்டு என்று பொருள் கோடல் அறியாமை. அநாதிசகச மலக்கட்டு உயிருக்குக் குற்றமாகுமன்றி பழக்கம் அல்லது பண்பாக மாட் டாது. மேலும், ஒரு பொருளாதலே பழக்கந் தவிரப் பழகு என்று கொண்டு கூட்டாமல் ஒரு பொரு ளாலே எல்லாம் அசைகின்றன எனச் சொல்லெச்ச மாகக் கொண்டு பொருள் காணல் வேற்றுமை யாகும். ஏனெனில், ஒரு பொருளாலே எல்லாம்

அசைதலுமன்றிப் பிறத்தலும், அறிதலும், நிலைத்தலும், அழித்தலும் செய்கின்றன. இவற்றுள் ஒன்றை மட்டுங் கொள்ளுதல் பொருத்தமற்றது. மேலும் "அப்பொருளுடனே வாதனை பண்ணி நில்" என்றலும் கற்பனையுரையாகும்.

'உழப்புவது என்' என்ற வினாவை எழுப்பிக் காலந் தாழ்த்தாது தவத்தைக் கைக்கொள்ள வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார்.

பெண்ணே என்றது பெணே என இசைநோக்கி இடைக்குறையாயிற்று. பெண்ணே என்றது ஒரு ஞானசாதகியைக் குறித்து நின்றதாகும். ஆசிரியர் பெண்ணே என்றது தம் நெஞ்சை நோக்கி என்று கொண்டோமானால் இந்நூலிற் காணும் உபதேச அறிஉரைகளெல்லாம் தம் நெஞ்சை முன்னிட்டுக் கொண்டு உரைத்தாரெனக் கொள்ளவேண்டும். ஆனால் இச்செய்யுளிலும் (28) 15வது செய்யுளிலும் பெண்ணே என்று விளித்திருப்பதைத் தவிர்த்து மற்ற செய்யுட் போதனைகளெல்லாம் ஞானசாதக மாணாக்கரை முன்னிட்டுச் சொன்னதாய் விளங்குகிறது. அன்றியும் தம் மனதை முன்னிட்டுச் சொன்னதாய்க் கொள்ளுதல் பலவிடங்களில் பொருத்தமுறாமல் கழியும். மேலும் மனமிறந்த அதீதநிலையை யடைந்து சீவன்முத்தராய்த் திகழ்ந்த இந்த சிவஞான தேசிகர் தம் பூரண ஞானானுபவப் பொருள்களை இந்நூலில் நிரப்பி வைத்திருப்பதால் அவை அவருடைய மாணாக்கர்களை

முன்னிட்டே சொன்னாரென்று கொள்ளல் கற்றோர் கடனாகும்.

மேலும், மனம் பெண் எனில் அவளுக்கு நாயகன் சீவன்தான் அன்றி சிவபரம் நாயகனாக மாட்டான். முதல்வன் சீவனுக்கு நாயகன். நெஞ்சு சீவனாக மாட்டாது. ஆசிரியர் தன்னையே முதல்வனுக்கு நாயகியாய்க் கருதிச் சொன்னார் எனின் தன்னைத்தான் பெண்ணே என்று விளித்தார் எனக் கொள்ளவேண்டும். இவண் அது பொருந்தாது. இது நெஞ்சு விடுதூது போன்றதொரு நூலுமல்ல எனக் காணவேண்டும்.

(கருத்து): இகத்தைக் கைவிட்டுப் பரத்தைப் பற்றுக (என்றவாறு).

14. (மெய்யன்பு படிதல்)

உள்ளம் உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியர் என்று உந்தீபற
சிற்பரச் செல்வர் என்று உந்தீபற. (7)

(கொண்டுகூட்டு): சிற்பரச் செல்வர் உள்ளம் உருகில் உடனாவர்; (உருகில்) அல்லது தெள்ள அரியர்; என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (தத்துவங்களைக் கடந்து நிற்கும் அறிவு சொரூபனாகிய) முதல்வன் ஒருவனுடைய உயிரானது (சகல சீவர்களிடத்தும் முதல்வன் பாலும் உண்டாகும்) அன்பின் மிகுதியால் குழையுமானால் (நெக்குடையும்) அவ்

வுயிருடன் கூடி (காட்சிக்கு எளியனாய்) நிற்பன். அவ்வாறு குழைதல் இல்லாத நிலையில் உயிருக்கு அவன் அநுபவக் காட்சிக்கு உரியனாவது இல்லை; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): இவ்வாறு கொண்டுகூட்டிப் பொருள் காண்பதே பொருத்தமாகும். ஏனெனில், உடனாவன் என்றதற்கும் அரியர் (ஆவர்) என்றதற்கும் எழுவாய் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். அல்லது என்ற எதிர்மறைச் சொல்லால் இது போதரும். உடனாவது சீவன் என்றும் அரியர் ஆவது சிவனென்றும் கூறுவது இலக்கணத்துக்கும் பொருளுக்கும் முரணாகும். ஒன்றாயும், உடனாயும், வேறாயும் நிற்பது முதல்வனன்றி சீவனல்ல. பெத்தத்தும் முத்தியிலும் சிவ சீவர்கள் ஒன்றுகூடி இருப்பினும் சீவன் சிவனோடு உடனாய் நிற்கிறான் என்றல் சித்தாந்தக் கூற்றுக்கு முரணாகும். ஆதலால் உடனாவதும் அரியர் ஆவதும் முதல்வன்தான். முத்தி எய்திய உயிரும் முதல்வனைப் போல் சிற்பரச் செல்வராதலில்லை. ஆதலால் முத்தரைச் சிற்பரச் செல்வர் என்றது பொருந்தாது.

மேலும், "சிற்பரந்தானே செகமுண்ணும் போதம்" என்ற திருமந்திரவாக்கை யுணர்ந்து செகமுண்ணும் என்றதனால் செகத்தை உமிழ்ந்து நோக்கலும் மறைத்து அருளலும் உடன்பாடாகிப் பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் முற்றறிவுடைய முதல்வனைத்தான் சிற்பரச் செல்வர் என்றார் என

அறியக்கிடக்கின்றது. உள்ளம் என்றது உயிரை; அந்தக்கரணங்களில் ஒன்ருகப் பொருள் கொள்ள லாகாது. "காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்ற "சிவஞான போத" சூத்திரப் பொருளை நோக்குக.

சுயநலத்தை முன்னிட்டு உலகவருக்குப் பல்கால் மனங்கரைதல் பிரசித்தம். இதனை இவண் குறிப்பிடவில்லை. பேய்போல் ஆடலும், பித்தனைப் போல் பாடலும், உடம்பெல்லாம் நனையக் கண்ணீர் சொரிந்து அழுதலும் அரற்றலும் தலையில் தீப்பற்றினவன் நீரைத் தேடி ஓடுவதுபோல் தேடி ஓடலும் தேடியது காணுவிடத்து ஏங்கலும், மூர்ச்சை யுற்றுத் தரையில் கிடந்து வாடலும் முதலிய மெய்ப்பாடுகள் உயிர் குழைதலுக்குரிய அறிகுறி களாம். "ஆடியும்பாடியும் அழுதும் அரற்றியும்தேடி யும் கண்டேன் சிவன் பெருந்தன்மையை" என்றும், "விம்மும் வெருவும் விழும் எழும் மெய் சோரும் தம்மையுந் தாமறியார்கள் சதுர்கெடும், - செம்மை சிறந்த திரு அம்பலக்கூத்துள் - அம்மலர்ப் பொற் பாதத்து அன்பு வைப்பார்கட்கே" என்றும், "அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்-என்புமுருக இராப்பகல் ஏத்துவன் என் பொன்மணியை இறை வனை ஈசனைத் - தின்பன் கடிப்பன் திருத்துவன் தானே" என்றுங் கூறியுள்ள திருமூலநாதரின் அநுபவமொழிகளை அறிந்து பற்ற வேண்டும். மேலும்,

"ஆடுவதும் பாடுவதும் ஆனந்தமாக நின்னைத்
தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே"

"பாலரோடு பேயர் பித்தர் பான்மையென
நிற்பதுவே சீலமிகு ஞானியர்தம் செய்கை
பராபரமே"

"என்பெலாம் நெக்குடைய ரோமஞ்சிலிர்ப்ப
வுடல் இளக மனம் அழலின் மெழுகா இடை
யருதுருகவரு மழை போ லிரங்கியே இரு
விழிகள் நீரிறைப்ப அன்பினால் மூர்ச்சித்த
அன்பருக் கங்ஙனே அமிர்தசஞ் சீவிபோல்
வந்து ஆனந்த மழை பொழிவை"

என்று துதி செய்த தாயுமானாரின் அமுதமொழி
களையும் அறிந்து பற்ற வேண்டும்.

உள்ளம் உருகுதல் யார்மாட்டு எனின் தடத்த
நிலையில் சகல சீவர்களிடத்தும் உடனாய் நிற்கும்
முதல்வனாகையால் அவன்மாட்டுமின்றி எல்லா
உயிர்களின்மாட்டும் உள்ளம் உருகும்படியான
அன்பு செலுத்துதல் கடனாயிற்று. அன்பினால்தான்
உள்ளம் உருகும் நிலையை எய்த வேண்டும்.
அஃதன்றிக் கடுங்காமத்தினாலும் வெகுளியினாலும்
அந்நிலை யுண்டாகலாம். அதுகாலை எய்துவது
பெருங்கேட்டைத் தவிர்த்து வேறொரு பயன் இன்று
கலான் நற்பயனை அடைய வேண்டினால் அன்பி
னால் உள்ளம் உருகுதல் வேண்டும்.

"என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப் பொன்
போற் கனலிற் பொரிய வருப்பினும்—அன்போ
டுருகி அகங்குழைவார்க் கன்றி என்போல்
மணியினை யெய்தவொண்ணுதே" என்றும்,

"ஆர்வமுடையார் காண்பர் அரன்றன்னை - ஈர
முடையவர் காண்பர் இணையடி" என்றுங்கூறி
யுள்ள திருமந்திரச் செய்யுட்பொருளை உணர்க.

மேலும் இவ்வன்பு சுயநலமற்றதாக வேண்டும். சுயநலத்தில் தோன்றியதெனின் அந்நலம் எய்திய வழியும், எய்தா வழியும் அன்பும் கழியுமாதலால் அது நிரந்தரப் பலனைத் தரத்தக்கதாகாது. முதல்வன்பால் அன்பு செலுத்துவதும், அவனிடமிருந்து வரத்தைப் பெற வேண்டி தவஞ்செய்து அன்பு செலுத்தியவர்கள் கோரிய வரத்தைப் பெற்றும், சுயநலத்தின் பயனுக இறுதியில் பிறவிக் கடலுள் நீச்சு நிலை காணுத ஆழத்துட்புக்கு ஒழிந்தார்களென்று முன்னேரின் புராண இதிகாசங்களிலிருந்து நாம் விரிவாகக் கற்றுணர்ந்திருக்கிறேம். சிவபிரான் அன்புவடிவன். ஆதலால் முதல்வனிடத்துத் தன்னலமற்ற அன்பு படிதல் வேண்டும்.

அன்பு சிவம் இரண்டென்பர் அறிவிலார்.
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார் — என்ருர் திருமூலநாதரும். நுண்ணறிவு கொண்டு உடல், உலகங்களையும், தன்னையும் உள்ளபடி உணர்ந்த யோக ஞான சாதகர்கட்கு முதல்வனிடம் முறையிட்டுக் கேட்டுப்பெற வேண்டிய இகப்பொருள்

ஒன்றுமிராது. ஏனெனில் "பாசத்திலிட்டதருள் அந்தப் பாசத்தின் நேசத்தை விட்டதருள் அந்த நேசத்தில்—கூசற்ற முத்தி அருள் அந்தக் கூட்டத் தின்—நேசத்துத் தோன்றுநிலை அருளாமே" என்று திருமூலநாதர் அநுபவத்தில் அறிந்தபடி சிவனடியாரின் வாழ்க்கை முழுவதும் அவனருளால் நடைபெறும். "பிச்சையென்ன விசார மென்னத் தலை மேலே சுமந்துவரப் பெருமானுண்டே" என்று "சிவானந்தபோதம்" கூறுவது போல் எவருடைய வேண்டுகோளுமின்றி "வானிரு மாமுகில் போற் பொழிவா னுளன்" என்ற நிச்சயமுற்ற அடியார்க்குப் படிப்படியாகத் தன்னருளின் விலாசத்தை விளக்கிக் காட்டி "பெத்தத்தும் தன் பணியில்லை பிறத்தலான்—முத்தத்துந் தன்பணியில்லை முறைமை யால்—அத்தற் கிரண்டும் அருளால்—பத்திப் பட் டோர்க்குப் பணியொன்று மில்லையே" என்ற திரு வாக்கின் பிரகாரம் குருவடிவில் எழுந்தருளி வந்து பத்தரின் பணியறுத்து அருட்பணியில் நிறுத்துகின் றான். ஆதலாலும் சிவனடியார் தன்னலத்தைக் கோரி முதல்வனை வேண்டி அடைவது ஒன்றுமில்லை என்க. சிவஞான யோகிகள் எல்லா உயிர்கள் மாட்டும் முதல்வனிடத்தும் செலுத்தும் அன்பு முழுவதும் முதல்வனுடைய இடையரு உபகாரத்தை உன்னி உன்னி எழும் செய்ந்நன்றி உணர்விலிருந் தும் சகல சீவர்களிடத்தும் அவன் கலந்து நிற்கின் றான் என்ற உணர்விலிருந்தும் தோன்றியதேயாகும் என்று உணரற்பாலது.

உடனுவது கூடிநிற்பது. உள்ளமுருகில் உடனுவர் என்றது உள்ள உருகாத பெத்த நிலையிலும் முதல்வன் உடனுய் நிற்கிருன் என்னும் ஆகம முடிவிற்கு முரணுகாதோ எனின் ஆகாது. ஏனெனில் உள்ளம் உருகினவர்க்கன்றி மற்றையோர்க்கு முதலவன் உடனுய் நிற்றல் அபரஞானமென்னும் கேள்வியறிவாய் அமையுமன்றி பரஞானம் என்னும் (பிரத்தியட்ச) அநுபவ ஞானமாய்த் திகழ்வதில்லை ஆகையால் என்க. "உள்ளமுந் தானும் உடனே இருக்கினும் - உள்ளம் அவனை உருவறியாதே" என்று திருமூலநாதரும், "உலகமு முயிரும் ஒருங்குறப் படைத்தவ் வுயிரிடை நடனம் ஓவாதுஞற்றியும், ஆருயிரறியா அற்புதம் என்கொல், உலகமார்த்தாண்டன் ஒளி கொடறிந்தும் உலகமார்த்தாண்டன் உருவறியாவே" என்று ஞானவள்ளலாரும் கூறியுள்ள அநுபவமொழிகளை உணர்க.

தெள்ள அறிதலாவது, தெளிவுக் காட்சியுறுதல். மூவகைக் காட்சிகளில் தத்துவங்கடந்தவன் முதல்வன் என்றும் தான் கருவிகரணங்களிலும் வேருயுள்ளவன் என்றும் அறிந்தும் தனக்கும் முதல்வனுக்குமுள்ள சம்பந்தத்தை அறியாமை நிருவிகற்பக் காட்சி. முதல்வன் அருள்வடிவில் அத்துவித சம்பந்தத்தில் தன்னுடன் பிறிப்பின்றிக் கூடி நின்றளிக்கும் உபகாரத்தை அறிந்தும் அவனருளில் அடங்காது அருளிலும் கருவி கரணங்களிலும் ஊசலாடுவது ஐயக்காட்சி. கருவி கரணங்களை ஒருவி அதுகாலைத் தனக்குப் புகலிடமாகிய சேவடியைக் கண்டுபற்றி அவன் உடனுய் நிற்கும் இயல்பை

அநுபவத்தில் தேர்ந்து அடிமையாய் நிற்றல் தெளிவுக் காட்சி. இவ்விதமான தெளிவுக் காட்சியை உள்ளம் உருகார் எய்தார் என்பார் தெள்ள அரியர் என்ருர்.

இவ்வாறன்றி உடனுவர் என்றதற்கு சிவ சொரூபமேயாய் சிவன் என சீவர் நிற்பர் எனப் பொருள் கோடல் பொருந்தாது. உடனுவர் என்ற தற்கு எழுவாய் சிவனைத்தான் கொள்ளவேண்டு மன்றிச் சீவனைக் கொள்ளல் பொருந்ாதென்று மேலே கூறியுள்ளேன். மேலும் சிவன் என நிற்பர் என்பது மயக்கவுரை. ஞானபாதர் முத்தியடைவது படிக்கிரமமாய் அமைவதுதான். சித்தாந்தத்தின்படி சிவகுரு கடாட்சத்தினுல் மெய்ப்பொருளைக் கேட்டு, கேட்ட பொருளைச் சிந்தித்து, சிந்தித்த பொருளைச் சந்தேக விபரீதமின்றித் தெளிந்து, அப்பால் முடிவில் தெளிந்த பொருளைக் கொண்டு நிட்டை சாதித்து, அருளில் அழுந்தி "சிவோகம்" பாவித்து தெளிந்த பொருளோடு பொருளாய் ஒன்றுபட்டு, அதனுள் மறைந்து நின்று சிவப்பேறெய்தல் முடிந்த முடிபாகும். இங்கு மெய்யன்பினுல் உடனுவர் என்றும் அவ்வன்பு இல்லையெனில் தெள்ள அரியரென்றும் ஆசிரியர் கூறியுள்ளதால் உடனுவர் என்ற சொல்லைக் கூட்டி தெள்ள எளியராவர் என்ற பொருளில் தெளிவுக் காட்சிக்கு இலக்காவர் என்றே பொருள்கொள்ள வேண்டும். மெய்யன்பினுலும் இக்காட்சிதான் ஞானசாதகன் மூன்றும் படியாகிய ஞானத்தில்—யோகம் என்ற நிலையில் திரிபுடி அள வில் அநுபவிக்கும் பரோட்ச முன்னிலைக் காட்சி.

இதனை "உராய்த்துனைத் தேர்த்தென பாசம் ஒருவ தண்ணிழலாம்பதி" என்ற சிவஞானபோத சூத்திரக் கூற்றையும், "அம்முதலை ஞானக் கண்ணாலே காண்க" என்ற முதல் அதிகரணத் தலைப்பையும் அறிந்து தேர்க. இந்நிலைக்கு அப்பால் தாண்டி ஏறி சிவநிட்டை சாதித்து ஞானத்தில் ஞானம் என்ற படியில் நின்று அடைவதுதான் "ஆணவத் தோடத்துவிதமானபடி மெய்ஞ்ஞானத் – தாணு வினோடத் துவிதமாகும்" திரிபுடியற்ற அபரோட்சானுபவ முடிவு. இங்கு ஆசிரியர் இந்நிலையைக் குறிப்பிடக் கருதி யிருந்தால் தெள்ள அரியர் என்றதற்குப் பதிலாகக் கூட அரியர் என்று பொருள் படக் கூறியிருப்பார் என்று நுண்ணறிவுடையோர் காண்பர்.

(கருத்து): அறிவு சொரூபனாகிய முதல்வனை மெய்யன்பினால் அன்றித் தெளிய முடியாது (என்றவாறு).

15. (மாயாவாதத்தைப் பழித்தல்)

வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர்
பித்தேறினார்களென்று உந்தீபற
பெறுவதங் கென் பெண்ணே உந்தீபற. (28)

(கொண்டுகூட்டு): பெண்ணே: வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர் பித்தேறினார்கள். அங்கு பெறுவதுஎன் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): மாணவப் பெண்ணே, (பிரபஞ்சத்திற்கு மூலகாரண) வித்தாயுள்ள முதல்

வனை (எவ்வகைத்தானவன் என) ஆராய்ந்து அறிய வேண்டி (அவ்வித்தினின்றுந் தோன்றி விரிந்துள்ள) முளையாகிய பஞ்ச பூத பௌதிகத்தை ஆராயாது கைவிட்டவர் பைத்தியக்காரர் ஆவர். ஏனெனில் அவர்கள் அவ்வாறு வேறிடத்தில் தேடித் திரிவதனால் அடையக் கிடக்கும் பயன் என்ன என்பதைக் கூர்ந்து அறிவாயாக (பயனின்று என்றவாறு), என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): ஈற்றடியில் அங்கு அப்பித்தர் பெறுவது என் என்று கேள்வி முகத்தால் கூறியதனால் பெறும்பயன் யாதொன்றும் இன்று என்ற எதிர்மறைப் பொருளை உணர்த்தி நின்றதாலும் முதலடியிற் குறிப்பிட்டுள்ள செயலையாற்றுபவர் மிக்க பைத்தியக்காரர் எனக் கூறியுள்ளபடியாலும் அச்செயல் நுண்ணறிவுடையோர் செய்யத்தகாத பயனற்ற செயலாகுமெனக் காணக்கிடக்கின்றது.

வித்து என்றால் உலகுக்கு முதற்காரணமாயுள்ள மாயை. முளை என்றது அவ்வித்தினின்றும் உண்டாய அங்குரமாகிய உலகம். ஆனால் இங்கு வித்து என்றது மாயையை இயக்கும் சத்தி அல்லது முதல்வன் என்று கொள்ளவேண்டும். ஏனெனில் உபமானத்திற் கண்ட வித்து மண்ணிற் கிடந்து மண் குளிர்ந்த போதுதான் மாயையினின்றும் உலகம் தோன்றுமாதலால் என்க. இதனை சிவஞான போதம் முதற் சூத்திரம் 2வது அதிகரணத்துள்ள "வித்துண்டாம் மூலம் முளைத்தவா" என்று

தொடங்கும் வெண்பாவாலும், சிவஞானசித்தி யாரில் "உயிரவை யொடுங்கி பின்னும் உதிப்ப தெனதன்பால்" என்று கூறியதனுலும், "ஒன்று நீயல்லே அன்றி யொன்றில்லை யாருனை அறிவிற் பாரே" என்ற திருவாசக மொழியாலும், "வித்தின்றி யாதும் விளைவதுண்டோ நின் அருளாஞ் - சித்தின்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே" என்ற தாயுமானுரின் அருள்வாக்காலும் அறிந்து கொள்ளலாம்.

வித்து என்றது காணும் பிரபஞ்சத்திற்கு மூலகாரணமுயுள்ள காணுத முதல்வனை. முளை என்றது முதல்வனது சந்நிதியினின்றும் விரிந் துள்ள பஞ்சபூத பௌதிகப் பிரபஞ்சத்தை கண்டு கேட்டு உண்டுயிர்த்து உற்றறிதற்கு இடமாயும் முதல்வனுடைய தடத்தவடிவாயுமுள்ள இவ்வுலகை ஆராய்ந்தறியாது அதனைப் பழுதையிற் கண்ட இல்லாத பாம்பு போல் இல்லாத பொய் என்றும் அநிர்வசனம் என்றும் கூறி கைவிட்டு மனவாக்கு களுக்கு எட்டாத சச்சிதானந்த சொருபமாயுள்ள பராபரப் பொருளை ஆராய்ந்துகொண்டு காலங் கழிக்கும்பேர்களை மிக்க பைத்தியம் பிடித்தவர்கள் என்று கூறினர். இக்கொள்கையுடையவர் ஏகான் மவாதி மாயாவாதி எனப்படுவார். அவருடைய வீண் செயலைப் பழித்துரைத்தார் ஆசிரியர். ஓர் பைத்தியக்காரனுடைய அறிவிச்சை செயல்கள் அவனறியாது நிகழ்வனவாம். பிறரும் அவற்றை நிச்சயிக்க இயலாது. அவனுடைய செயல் அவனுக் கும் பிறருக்குந் தீங்கு விளைவிப்பதன்றி யாதொரு

நன்மையும் ஈவதன்று. அதுபோல ஏகான்ம வாதிகள் மாயாவாதிகள் தன் கொள்கையைக் கடைப்பிடித்து ஒழுகுவதால் அடையக் கூடிய பலன் பிறருடைய அறிவை மயங்கச் செய்வதன்றி பிறவித் துன்பநீக்க மென்னும் நீடிய பலனை அடைவதில்லை. ஆகலான் அன்னாரை, பெரும் பைத்தியம் பிடித்தவருக்கு ஒப்பு கூறினார்.

நாம் காணும் காரியப் பிரபஞ்சத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்து அது சடமாய், பலவாய், சுட்டியறியப்படுவதாய் நிலைத்திருப்பது போலத் தோன்றி விரைவில் அழிந்து போவதாய் அறியக் கிடத்தலால் இதற்கு சருவ காரண முதற்பொருளாகிய மாயையும் சடமாய் தானே யியங்குவதற்கின்றி பிறிதொரு அறிவுடைப் பொருளால் காரியப்பட நிற்கின்றது என்று உணர்வதற்கு ஏதுவுண்டாகிறது. ஏனெனில் காரியம் காரணத்தை விட்டு வேறாக அமையாது ஆகலால் என்க. காணும் உலகின் இயல்பை அறிந்தவழி காணாது, மறைந்து நிற்கும் பிரபஞ்ச நிமித்த காரணனாகிய பதியை ஊகித்தறியக் கிடத்தலால் இவ்வாராய்ச்சி பெரும்பலனைத் தரவல்லது என்றும், உலகை இல்லாத பொய் எனக் கழித்துவிட்டால் அநுமானத்தாலும் முதல்வனை அறிய முடியாத பயனற்ற செயலாகும் என்றும் கண்டு; அங்கு "அப்பித்தர் பெறுவது என்" என்று கூறி முடித்தார் ஆசிரியர்.

ஒரு செடியின் இயல்பை ஆராயப் புகுங்கால் அதன் தண்டு, கிளை, இலை, பூ, காய் கனிகளைக்

கண்டு ஆராய்ந்து முடிவு கட்டுவது பிரயாசை எனக் கொண்டு அவ்வாறு செய்யாமல் செடியைக் களைந்து எறிந்துவிட்டு தரைக்குள் புதைந்திருந்த விதையைத் தோண்டிப் பார்த்து வித்தின் உருவங் காணுமல் மலைவுற்றுக் கெடுவாருக்கு ஒப்பிட்டார் ஏகான்ம மாயாவாதிகளை. இவ்வகை வித்தாராய்ச்சியினுல் செடியழிந்துபட்டதைத் தவிர்த்து பயன் ஒன்றும் இன்ருமாறு போல அவர்கட்குச் சன்மார்க்க உலகவாழ்வும் பாழாய் முடியுமென உய்த்துணரக் கிடக்கின்றது. பித்தராவார் யார் எனத் திருமூலநாதர் கூறியுள்ளதை இங்கு நோக்கல் பொருந்தும். "கத்தும் கழுதைகள் போலுங் கலதிகள் - சுத்தசிவன் எங்குந் தோய்வுற்று நிற்கின்ருன் - குற்றங் குறியார் குணங்கொண்டு கோதாட்டார் - பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே"; "மாயன் மயக்கிய மானுடராம்வர் - காயம் விளக்குங் கருத்தறியார்களே".

இவ்வாறு உண்மைப் பொருளைக் காணமாட்டாமல் முத்திக்கு வித்தாகிய அருளைத் தேடி உலக மாயையைக்கைவிட்டு முதல்வனுடைய பரமானந்த சொருபத்திலே புகுந்த சிவமுத்தரை ஆசிரியர் இங்கு புகழ்ந்துள்ளார் எனப் பொருள் கொள்ளல் செய்யுட் பொருளை அறியாமல் திரித்துக் கூறியதாகும். ஞானப் பித்தேறிஞர்கள் அல்லது சித்தேறிஞர்கள் என்று ஆசிரியருக்குக் கூறத் தெரியாமல் பித்தேறிஞர்கள் என்று மட்டும் கூறிஞர் எனக் கொள்ளல் தகாது. இவ்வாறு பொருள்கொள்ளல்

அப்பித்தர் அங்கு பெறுவது என் என்ற ஆசிரியரின் முடிவுக்கும் முரணுகும் எனக் காண்க.

(கருத்து): காணும் உலகைக் கண்டு ஆராயாது கைவிட்டவர் தத்துவாத்தீதனுகிய முதல்வனைக் கண்டறியார் (என்றவாறு).

16. (புறச் சமயத்தை ஒருவுதல்)

சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்(று)
ஆவி அருதே என்று உந்தீபற
அவ்வுரை கேளாதே உந்தீபற. (31)

(கொண்டுகூட்டு): சாவி போம் மற்றைச் சமயங்கள் புக்குநின்று ஆவியருதே. அவ்வுரை கேளாதே என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (சாரமற்றப்) பதருக்கொப்பான (அத்துவித சித்தாந்தம் நீங்கலாகவுள்ள) புறச்சமயங்களில் தலையிட்டுச் சாதித்து உன் ஆயுளைக் குறைக்காதே. அப்புறச்சமயப் பேச்சுகளைச் செவியிலும் ஏற்காதே; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): சாவி, சாரமற்ற பதர் போலும் என்ற சொல் இடைக்குறையாய்ப்போம் என்ருகி போன்ற, நிகர்த்த என்ற பொருளைக் கொண்டது. அத்துவித சித்தாந்தத்தை நீக்கி மற்றச் சமயங்களைப் பதருக்கு ஒப்பிட்டார். ஏனெனில் அவற்றைக் கைக்கொண்டு நேரே பரமுத்தி நிலையை

எய்துதல் கூடாமையால் என்க. பதி, பசு, பாசங் களின் பொதுச் சிறப்பு இலக்கணங்களை வகுத்துக் கூறி உயிரானது (பசு) தன்னை படிந்துள்ள மலத்தை (பாசம்) விட்டுவிலகி சுட்டறிவு இறந்து முதல்வனை (பதி)க் கண்டறிந்து அவனது சேவடியிற் படிந்து இரண்டறக் கலந்து முத்திப்பேற்றை யடைவதற் குரிய உபாயமாகிய அட்டாங்க சிவராசயோக ஞானத்தை வகுத்துரைத்தலால் சித்தாந்த சமயம் உலக மெய்ச்சமயமாய் நின்றது. மெய்ப்பொருளைப் பற்றிய அநுபவ ஞானம், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்னும் மூவித உபாயங்களினுல் அமையு மென்று ஏகான்மவாதிகள் முதலாயினோர் கூறி முடிக்கின்றனர். ஆயினும் இது ஞானசாதகர் எல் லோருக்கும் சாத்தியமான வழியன்று என்றும் முன் செனனங்களில் ஞான அடிப்படிகளில் முற்றுப் பெற்ற ஒருசில உத்தமோத்தம அதிகாரிகளுக்கே சாத்தியமாகும் என்றும் அவர்களே கூறுகின்றனர். ஆனுல் சித்தாந்த அநுபூதிமான்கள் சகலபடித் தான ஞானசாதகர்கட்கும் உபாயமாய் அமைந் துள்ள அட்டாங்க சிவராசயோகத்தை வகுத்துக் கூறி அதன் சிரசாகிய சிவஞான நிட்டை சாதித்தலே முடிந்த சாதனையென்க் கூறி யுள்ளார்கள். ஆகவே முடிந்த ஞானுனுபூதி நிலையானது ஒரு மெய்ஞ்ஞான குருபரனிடமாகக் கேட்ட பொருளை சிந்தித்துத் தெளிதலோடு அமையாது சிவநிட்டையுஞ் சாதித்து எய்தல் வேண்டும் என்று சைவ சித்தாந்தம் போதிக்கிறது.

அன்றியும், அடயோகத்திஞல் உடலையும் பிராணனையும் சுத்தஞ்செய்து தன் வசப்படுத்தி அவைகளை ஞான வழிக்குத் தகுதியாக்கும் இலட்சியத்தை, ஆபத்தான அடயோக சாதனையைக் கைவிட்டு சிவராசயோகத்தைக் கைக்கொண்டு தீங்கற்ற ஆசனத்தையும் மனதையுங் கொண்டு பிராணயாமத்தைச் சாதிக்கும் வழியின் பயனுக உடல் நலியாமல் அடையகூடும் என்று அநுபவ வாயிலாக அறிவுறுத்திஞர்கள். கருமயோகத்தின் முக்கிய கூருகிய நிட்காமசித்தியை சிவயோகி தன்பணியறுத்து சிவபணியில் நிற்றலால் அடைகிருன். மெய்யன்பை முதல்வன் மாட்டும் எல்லாவுயிர்கள் மாட்டும் செலுத்துவதஞல் சிவ யோகி, பத்தி மார்க்கத்தின் சிகரத்தில் நிற்பவனு கிருன். அசத்தைக் கண்டு ஒருவி, சத்தைக் கண்டு ணர்ந்து, அதனருளிற் படிந்து, ஆண்டான் அடிமைத் திறத்தில் நின்று, முத்தியையும், சிவ சாயுச்சியப் பேற்றையும், சிவயோக ஞானி அடை கிருதைலால் அவன் ஞானயோகத்தின் முடிவை யடைந்தவனுகிருன். இவ்வாருக இதுகாறும் முன்ஞேர்களால் அறிந்து அநுசரிக்கப் பெற்றுள்ள பலவித யோகங்களின் வழித்தாக அடையக் கிட்க் கும் பலன்கள் யாவையும் தன்னுள் அடக்கிச் சாத கனுக்கு ஊட்டவல்ல அட்டாங்க சிவயோக ஞானத் தைப் புகட்டும் தரமுடையது சிவசன்மார்க்கமென் னும் அத்துவித சித்தாந்த சமயமாதலால் இது சமயாதீதமாயும் உலகப் பொது சமயமாயும் கற்ரே

ரால் கையாளப்பட்டும் போற்றப்பட்டும் வருகிறது. மேலும்,

"மெய்திகழும் அட்டாங்க யோக பூமிக்குள் வளர் – வேந்தரே குணசாந்தரே"

"என்றைக்கும் அழியாச் சிவராசயோகம்"

"சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத் தக்கநெறி இந்நெறியேதான் சன்மார்க்கம்"

"முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே"

"தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே சித்தாந்த முத்தி முதலே"

என்று போற்றிய தாயுமான சுவாமிகளின் மெய்ம் மொழிகளையுங் காண்க.

சிவஞானபோதத்தில் அவையடக்கங் கூறிய சந்தனாச்சாரியார் புறச் சமயவாதிகள் தங்களை உள்ளவாறு உணராதவர்களாயும் தம் உடையானாகிய முதல்வனையும் உள்ளபடி உணராதவர்களாயும் இருத்தலால் அவர்கள் ஒருவரோடு ஒருவர் இணங்கி நில்லாது பிணங்கி நிற்பர் என்று கூறியுள்ளார். சித்தாந்தசைவம் மற்றப் புறச் சமயங்களைப் புறக்கணிக்காமல் மக்களின் பக்குவத்துக்கு ஏற்றவாறு முதல்வனருளால் அவ்வக்காலங்களில் அச்சமயங்கள் தோன்றின என்ற கொள்கையையுடையது. "ஆவியே நிறைய வந்த அமுதமே யென்னை னந்தோ – சாவிபோஞ் சமயத்தாழ்ந்து

சகத்திடை தவிக்கின்றேனே" என்றார் தாயுமானாரும்.

சமயங்கள் என்றதில் 'இல்' உருபு தொக்கி நின்றது. ஒருவனுடைய ஆயுள்கால அளவு ஒருவனுடைய மூச்சின் எண்ணிக்கையையும் வேகத்தையும் பொருத்திருக்கிறது என்பது சித்தர் ஆயுர்வேதக் கூற்று. உழைப்பு, மிக்க ஊண், உறக்கம் முதலிய உடற்போகங்களினாலும் மூச்சு அதிவேகமாய் ஓடிக்கழியுங் காரணத்தினால் வரைக்குட்பட்ட மூச்சின் அளவு சீக்கிரத்தில் கழிந்து ஆயுள் குறையுமென்பது மெய்யுணர்ந்தோரின் அநுபவம். பிறவித்துன்ப நீக்கம் நிரந்தரமாக வாய்க்கப் பெறாத புறச்சமயங்களைத் தழுவி நின்று சாதித்தும் அச்சமய வாதிகளுடன் வீண்வாதம் புரிந்தும் காலம் வீணே கழிந்து போகுமாதலால் அச்சமயங்களிற் புக்குநின்று ஆவியறாதே என எச்சரித்தார்.

எவ்வகைத்தாய அறிவு வளர்ச்சியும் விடயங்களைக் கேட்டதன் மூலம் அமையுமாதலால் புறச்சமய அறிவு வளராமைப் பொருட்டு அச்சமயவுரைகளைக் கேட்கவுங் கூடாது என்று முதற் படியிலேயே அதனைத் தடுத்து நிற்கப் போதித்தார். உரை என்றது சொல்வன்மையோடு உறுதிபடப் போதித்தலைக் குறித்து நின்றது. புறச்சமய இலக்கணத்தைத் திருமூலநாதரின் வாக்கினால் நன்குணரலாம். "ஆயத்துள் நின்ற அறுசமயங்களும்— காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலர் — மாயக் குழியில் விழுவர் மனைமக்கள் — பாசத்திலுற்றுப் பதைக்கின்றவாறே" என்றார்.

(கருத்து): சித்தாந்த சைவத்தைத் தவிர்த்த மற்றப் புறச்சமயங்களைத் தழுவிநின்று ஆயுளை வீணில் கழிக்காதே (என்றவாறு).

17. (அறமிலா இல்வாழ்வைப் பழித்தல்)

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டார் என்று உந்தீபற
காணாதார் காணார் என்று உந்தீபற. (35)

(கொண்டுகூட்டு): ஆண் மக்கள் பேய்போல பெண்டிர் பிடிபோல கண்டாரே கண்டார் காணாதார் காணார் என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (அறமற்ற இல்வாழ்வில் கூடிவாழும்) ஆண்மக்களைப் பேய் கட்கு ஒப்பாகவும், பெண்மக்களை (அப்பேய்கள்) பற்றி ஆவேசிக்கும் சீவர்கட்கு ஒப்பாகவும் உணர்பவர் (அத்தகைய இல்வாழ்வின் உண்மை இலக்கணத்தைக்) கண்டவராவார். இவ்வாறு உணராதார் (அதன் உண்மை இலக்கணத்தைக்) காணாதவராவார்; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு)உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): பேய் என்றது அகால மரணத்தினால் தூலவுடல் அழிந்தபின்னர் அதனுள் இருக்கும் அருவுடல் என்னும் யாதனாவுடலைத் தாங்கி சூக்குமமாக நிலவுலகில் திரியும் சீவனை. இப்பேய்க்குச் சுக்கும உடலிற் பதிந்து கிடக்கும் பாவ புண்ணியங்கட்குத் தக்கபடி சூக்கும அறிவு, இச்சை,

செயல்கள் தொழிற் படுவதற்கு வேண்டிய தூலவுடல் இல்லாமையினுல் அவ்வுடல் கொண்டு முன்னர் இவ்வுலகில் அநுபவித்த பசி, தாகம், ஆசை, கோபம், காமம், மோகம் முதலிய சித்த விருத்திகள் அப்பேய் நிலையிலும் யாதனு சரீரத்தில் எழுந்து பெரிதும் அச்சீவனை வருத்தும். அதுகாலை அத்துன்பங்களினின்றும் விடுபட வேறுவழி காணுமல் தனக்கிசைந்த ஓர் சீவனின் தூலவுடலைப்பற்றி அதனுள் சூக்குமமாய் ஆவேசித்து தனக்கேற்படும், பசி, தாகம் முதலிய தேவைகளைத் தான் புகுந்த தூலவுடலைக் கொண்டு பூர்த்தி செய்துக் கொள்ளும். இவ்வாறு ஒரு பேய்ப்பற்றி ஆவேசிக்கும் உலகில் வாழுஞ் சீவன் பேய் கொண்டதாகும். பேயால் பிடியுண்ட சீவன் உலகில் அநுபவிக்கும் உடற் போகங்களை அப்பேய் பெரிதும் உறிஞ்சி உட்கொண்டு பிடியுண்ட சீவனை அதன் சக்தி, ஒளி, ஊக்கம் முதலிய பண்புகளை இழந்து கெடும்படி செய்கிறது. அப்பால் காலக்கிரமத்தில் ஓர் மந்திரவாதியால் அச்சீவனின் கருமத்தை யொட்டிய பல இடுக்கண்களுக்கு உட்பட்டு அப்பிடியுண்ட சீவனின் உடலினின்றும் பலவந்தமாக அப்பேய் துறத்தப்பட்டு மறுபடியும் பழைய யாதனுவுடலோடு துக்கத்துடன் உலகில் சூக்குமமாய் அலைந்து திரியும்.

அறத்தைப் பற்ருமல் பகுத்தறிவில்லை. அறத்தைக் கைவிட்டு இல்லில் வாழும் ஒரு மகனை ஒரு பேய்க்கும், அவனுக்கு மனைவியாய் வாழும் ஒருத்தியைப் பேய் கொண்ட சீவனுக்கும் ஆசிரியர்

உவமை கூறினர். "பற்றை யறுப்பதோர் பற்று" என்றாற்போல பிடி என்றது பிடிக்கப்படும் அல்லது பற்றப்படும் பொருள் என்று பிறவினைப் பொருளில் நின்றது. பெண் ஒருத்தி அவளுடைய இல்லறம் வழுவிய கணவன் என்னும் பேய்க்கு ஒப்பான மகனால் பற்றி ஆவேசிக்கப்பட்டு வாழும் பேய் கொண்ட ஒருத்திக்கு ஒப்பாவாள் என்றார்.

இல்லிற்கூடி வாழும் ஒரு மகனையும், அவனுடைய மனைவியையும் செய்யுளிற் பொதுவாகக் கூறியிருக்க இல்லறத்தைத் தழுவாது உலகபோகங்களைக் கருதியே வாழ்வோரை மட்டும் பிரித்து விளக்க உரையில் கூறியது என்ன காரணம்பற்றி யெனின் முன்னர் 32(30)வது செய்யுளில் ஞானசாதகன் இல்லறத்தானாயினும், துறவறத்தானாயினும் முதல்வனுடைய அருளொளி தன்னகத்துட் படியும் படி நின்று முதல்வனுடன் ஒன்றுபட்டு முத்தி எய்தக் கடவன் என்று போதித்திருத்தலாலும் இல்லிற்குரிய அறத்தைக் கைக்கொண்ட மகனும் அவன் மனைவியும் தவச்சாதனையைக் கைக்கொண்டதன் மூலம் முத்திக்குரியவர்களாவார்கள் என்று தெளிவுபடக் கூறியிருத்தலாலும் இங்கு அன்னாரை நீக்கி அறத்தைக் கைவிட்டு வாழும் மகனையும் மகளையுமே பேய்க்கும் அதன் பிடிக்கும் ஆசிரியர் ஒப்புக் கூறினர் எனக் கொள்ளப்பட்டது.

உலகபோகத்தில் இச்சை கொண்ட ஒரு மகன் தனக்கென ஒரு மகளை மனைவியாகக் கொண்டு இல்லில் வாழ்கின்றான். அப்போது இல்வாழ்விற்குரிய

அறத்தை யறிந்து கைப்பற்றி அதன்படி வாழ்வா ணுகில் குருகுல வாசத்திலுள்ள மெய்ந்நூல் மாண வர்கட்கும் தன் மனையாளின் பணிவிடை கொண்டு சிவயோகம் இயற்றும் தவசிகளுக்கும் இறைவனு டைய திருவடியே தஞ்சமென்று மெய்யுணர்ந்து இல்வாழ்விலிருந்து விலகித் துறவு பூண்ட முனிவர் களுக்கும் தேவையான உதவி புரியும் நல்ல துணை வனாக இருப்பதுமன்றி இவ்வாறு வழிபடும் தவசி துறவிகளின் மூலமாய் தானும் மெய்யுணர்ந்து சிவ னடியைப் பற்றி முத்திப் பேற்றைப் படிக்கிரமமாய் அடைவான். இவ்வாறன்றி இல்லறத்தை யுணரா மல் உலகபோகமே முக்கியமெனக் கொண்டு இந்தி ரிய வாழ்வில் இறங்கி வாழும் ஒருவன் தன் மனை யாளின் உதவி கொண்டும் அவள் மூலமாயும் தன் ஞற் கூடியமட்டும் உலக போகத்தை உறிஞ்சுகின் ருன். அதன் பயனாக அவனிடம் மனைவியாகப் பிடியுண்டவள் முடிவில் ஆற்றலும், மனவுறுதியும் அறிவும் ஒளியுங் குன்றித் தேய்கின்ருள். ஆதலால் இவ்வித இல்வாழ்விலுள்ள மகனைப் பேய்க்கும் அவ னது மனைவியைப் பேய்கொண்ட ஒருத்திக்கும் ஒப் பிட்டார். இவ்வாறு மகன் மனைவியை ஆவேசித் தாற் போன்று விடாது பற்றிநின்று இறுதியில் எமன் என்னும் மந்திரவாதி வந்து ஒருவரை விட்டு ஒருவரைப் பலவந்தமாகப் பிரித்து அவர்களுடைய விபரீத கூட்டு வாழ்க்கையைமுடித்து விடுகின்ருன். ஆதலால் பேய்ப்பிடி யுண்ட சீவனுக்கு மந்திரவாதி யால் விடுதலை வாய்ப்பதுபோல இந்திரிய உலக

வாழ்க்கையில் ஈடுற்றமகளுக்கு இவ்வாறு விடுதலை ஏற்படுகிறது என்று கூருமற் கூறினார்.

இவ்வாருக உலகபோக இச்சை மேலிட்ட பொது இல்வாழ்வின் இலக்கணத்தைத் தன் மனதில் தைக்கும்படி அறிந்த அறிவுடைய மகன் அவ்வித வாழ்க்கையிலிருந்தும் விடுபட்டு மெய்யுணர்ந்து இறையடி சார்ந்து பிறவித்துயர நீக்கத்தைப் பெறுவானுதலாலும் அவ்வாறு உண்மையறியாத ஒருவன் பிறவித்துயரத்தின் நிலைகாணுதலாலும் கண்டாரே கண்டார் காணுதார் காணுர் என்ருர்.

இவ்வாறன்றி பிடி என்றதற்குப் பெண்பேய் என்றும் மகன் ஆண்பேய் என்றும் பொருள் கொள்ளல் அறியாமையாகும். மேலும் செய்யுளிற் கண்ட சொற்களுக்குப் பொருத்தமான உரை காணுமல் பேய்கொண்ட பெண்பிரை அசத்தோடு கூடி அசத்தால் நிற்கும் சகல நிலையிலுள்ள சீவனுக்கும் பேயான ஆண்மக்களை முத்திநிலையில் சீவனைத் தன்னுள் அடக்கித் தானே தேசிகராய் நிற்கும் நாயகரான தம்பிரானருக்கும் ஒப்புக்கூறிப் பிரசங்கித்தல் நூற்பொருளை விளங்க வைத்தலாகாது எனக் காண்க.

(கருத்து): அறமற்ற இல்வாழ்க்கை ஒரு பேய்ப்பிடி கொண்ட சீவ வாழ்விற்கு ஒப்பாகும் (என்றவாறு).

18. (மாயக்கள்ளை ஒருவுதல்)

**காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண**
**மாட்டாதே**
**மாயக்கள் உண்டார் என்று உந்தீபற**
**வறட்டுப் பசுக்கள் என்று உந்தீபற. (43)**

(கொண்டுகூட்டு) காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே மாயக்கள் உண்டார் வறட்டுப் பசுக்கள் என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): மெய்ஞ்ஞான அடைவினுல் உடலின்கண் அடையக்கூடிய அமுதத்தை அறிந்து அருந்தும் மெய்யுணர்வில்லாமல் அறிவை மயக்கி விபரீத உணர்வை நல்கும் குடிநீர்க்களை அருந்திேனுர் பாலீனுத வறட்டு ஆவினத்துக்கு ஒப்பாவார் என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): மேலே 9வது (42) செய்யுளில் முதல்வன் சிற்பரச்செல்வன் அதாவது பரிபூரண ஆனந்தவாரியாயுள்ளான் என்று கூறினுர். இங்கு அம்முதல்வன் நித்திய அமுதவாரியாயுள்ளான் என்று குறிப்பால் உணர்த்துகின்றுர். சிவஞானத் தாலன்றி மற்ற ஞானத்தால் அடையக்கூடாத ஞானஅமுதத்தைச் சிறப்பித்துக் கூறுகிறுர்.

காயத்துள் என்றதில் 'இல்' உருபு தொக்கது. கள் என்றுல் மது அல்லது மலர்த்தேன். ஞானக் கள் என்றவிடத்து (சகத்திரதள) மலர்த்தேன்

என்றும் மாயக்கள் என்றவிடத்து குடிநீர் மது என்றுங்கொண்டு நின்றது. மாயக்கள் என்றது மன எழுச்சியை உண்டுபண்ணி அறிவை மயக்கி உடல் மனநோவுகளைச் சிறிது நேரத்திற்கு மறக்கச் செய்து சுகமுண்டாக்குவது போலாகிப் பின்னர் உண்டவனுக்குத் தாமத குணத்தையதிகரித்து உறக்கத்தில் ஆழ்த்தும் நல்லாற்றின் நில்லா உலகவர் அருந்தும் மதுவகைக் குடிநீராகும். இக்கள்ளைக் குடிப்பதால் மகனுக்குச்சிறப்பாகிய அறிவு மழுங்குவதாலும் அது தனக்கும் பிறருக்குந் தீங்கை விளைவிப்பதாய் இருத்தலாலும் மாபெரும் பாதகங்களில் ஒன்ருகச்சான்ருேரால் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது உபமானம். உடலறிவைக்கொண்டு மகன் எய்தும் உலகவிடய போகம் மாயாகாரியமாகிய கருவி கரணங்களினுல் அடையப்படுவதாலும் நித்தியமல்லாத உலகை நித்தியமென்றும் தானல்லாத உடலைத் தானென்றும் எண்ணி உடல்கொள்ளும் போகத்தைத் தானுங்கொண்டு உண்மையறிவை மயக்கி விபரீதவுணர்வு மேம்படும்படி செய்தல் மாயையின் காரியமாதலாலும் உலக போக மயக்கத்தை மாயக் கள்ளுக்கு ஒப்பிட்டார். இது உபமேயப் பொருள்.

மெய்ஞ்ஞானக்கள் என்றது சித்தாந்த ஞான பாதங்களிற் படிப்படியாகத் தேர்ந்து சிவஞான துரிய துரியாதீத நிலைகளை அடைந்த ஞானயோகி தன்னுள் அநுபவிக்கும் சந்திர மண்டல சகத்திரதள கமலத் தேனமிர்தத்தை. ஞானத் துரியாதீத நிலையிற்படிந்து முதிர்ந்த ஞானயோகியின் தூய வுடலுள் இந்த மேலான அமுதம் ஊறும் என்பார்

காயத்துள் மெய்ஞ்ஞானக்கள் என்றார். இங்கு அடியிற் குறித்த திருமூல நாதரின் போதனையை யறிதல் நலந்தரும். "முழுநீர்க் கள்ளுண்போர் முறைமையகன்றோர் – செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே". "சித்தம் உருக்கிச் சிவமாம் சமாதியில் – ஒத்த சிவானந்தத் தோவாத தேறலைச் – சுத்த மதுவுண்ணச் சுவானந்தம் விட்டிடா". "காமமுங் கள்ளும் கலதிகட்கே யாகும்". "வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர் – காமத்தோர் காமக்கள்ளுண்டே கலங்குவர் – ஓமத்தோர் உள்ளொளிக்குள்ளே உணர்வர்". "மயங்குந் தியங்கும் கள் வாய்மை யழிக்கும் – இயங்கும் மடவார்தம் இன்பமே யெய்தி – முயங்கும் நயங்கொண்ட ஞானத்துமுந்தார்". "சத்தியை வேண்டி சமயத்தோர் கள்ளுண்பர் – சத்தியழிந்தது தம்மை மறத்தலால்". "யோகிகள் கால்கட்டி ஒண்மதியானந்தப்– போத அமுதைப் பொசித்தவர் எண்சித்தி மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற் – றுகும் மதத்தால் அறிவையழிந்தாரே". "இருந்தேன் மலரளைந்து இன்புறவண்டு – பெருந்தேன் இழைக்கின்ற பெற்றியை யோரார் – வருந்தேனுகராது வாய்புகு தேனை – அருந்தேனை யாரும் அறியகிலாரே". இவ்வாறாக முழுநீர்க்கள், காமக்கள், ஞானானந்தத் தேறல் இம் மூன்றின் குணங்குறிகளையும் பலன்களையும் தெளிவுறக் கூறியுள்ளதைக் காண்க. மேலும், "தேற்றேனே தேற்றத் தெளிவே – என் சிந்தனையுள் – ஊற்றான உண்ணாரமுதேயுடையானே". "அச்சந்தீர்த்தாண்டு கொண்டான் அமுதமூறி –

அகநெகவே புகுந்தாண்டான்". "உவர்க்கடல் நள்ளுநீர் உள்ளந்ததும்ப - வாக்கிறந்தமுதம் மயிர்க் கால்தோறும் - தேக்கிடச் செய்தனன்". "கொடியேன் ஊன் தழை குரம்பைதோறும் நாயுடலகத்தே-குரம்பை கொண்டின்தேன் பாய்ச்சி நிரம்பிய - வற்புதமான வமுததாரைகள் - எற்புத்துளைதொறும் ஏற்றினன்" என்ற திருவாசகச் செய்யுட்களையும் நோக்குக.

சிறிது நேரம் உற்சாகத்தையூட்டி நெடுங் காலம் துன்பத்துள் ஆழ்த்தும் குடிநீர் மதுவை நிகர்த்த உலகவிடய போகங்களைக் கைவிட்டு யோகஞான சாதனைகளில் தேறி மெய்ஞ்ஞானத் தேறல் என்னும் தேவாமிர்தத்தையுண்ணும்படி எதிர்மறை முகத்தால் ஆசிரியர் வலியுறுத்தினார்.

மேலும், உயர் பிறப்பாகிய மகனாய்ப் பிறந்தும் சன்மார்க்கத்தைக் கைக்கொள்ளாமல் சிற்றின்ப போகத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்கள் பகுத்தறிவற்று ஐயறிவோடுகூடிய ஆவினத்துக்கு ஒப்பாவார் என்றும் பசுவாய்ப் பிறக்கினும் அதன் பருவ காலத்தில் தன் கன்றுக்குமன்றி தெய்வத் திருமஞ்சனத்துக்கும் மெய்ஞ்ஞான தவசிகட்கும் சிவனடியாருக்கும் சிசுக்களுக்கும் உடல் நலிந்தோருக்கும் அமிர்தம் போன்ற தீம்பாலையீந்து உதவும். அவ்வாறன்றி இம்மானுடப் பசுக்கள் தம்முள் உண்டாகக் கூடிய அமுதப்பால் சுரக்காத நிலையில் இழிந்து நிற்பதால் பாலீனாத வறட்டுப் பசுக்களுக்கு ஒப்புக்கூற நின்றார்கள்.

(கருத்து): மகனைப் பிறந்தவன் ஞானயோக சாதனையினால் தன் அகத்துள் விளையக்கூடிய ஞானமிர்தத்தைச் சுரக்கச் செய்து வாய் மடுக்கக் கடவன் (என்றவாறு).

19. (மோகந்துறந்து காயந்தைக் காத்தல்)

முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்தது என்று உந்தீபற
அப்பழம் உண்ணாதே உந்தீபற. (41)

(கொண்டுகூட்டு): முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து அத்தி பழுத்தது-அப்பழம் உண்ணாதே என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): முத்தியடைவதற்கு முதன்மையாய் நிற்கும் மகனின் மனதிற் குடிகொண்ட மயக்கம் என்னும் படர்கொடி வளர்ந்து பரவி (அதன் பயனாக) அவனுடைய தூலவுடல் முதிர்ந்து சத்தியிழந்தது. அப்பலனை நீயனுபவியாதே (அது விளையுமுன் நீ அதைத் தடுப்பாய் என்றவாறு) என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு

(விளக்கம்): இவ்வுலகிற் காணக் கிடக்கும் எண்ணிறந்த சீவராசிகளில் ஆறறிவோடும் கூடிப் பிறந்துள்ள மகன்தான் பிறவியொழித்து முதல்வனது நிலையில் கூடிநின்று வரம்பிலின்பத்தை அநுபவிக்கத் தகுதியுடையவன். ஆதலால் முத்தியடைய சீவர்களில் முதன்மையாய் நிற்பது மகன்

என்றுரைக்கப்பட்டது. முதல் என்றது முதன்மை என்று பொருள்பட்டு ஆகுபெயராய் முதன்மை நிலையிலுள்ள மகனைக் குறிப்பிட்டு நின்றது. முத்தி முதலுக்கு என்ற தொடரை முத்திக்கு முதல் என மாற்றி முதல் என்றதில் தொக்கி நின்ற ஆறும் வேற்றுமை உருபை விரித்து முத்திக்கு முதலில் எனக்கொண்டு பொருள் உரைக்கப்பட்டது.

மோகம் என்றது சாத்திரங்களினாலும் குருவுபதேசத்தினாலும் தீயவென்று அறிந்தனவற்றில் நீங்காது நிற்கும் மனத்தின் மயக்கம். இம்மோகம் ஆணவமலத்தின் முதன்மையான காரியம். இதனின்றுந் தொடர்ச்சியாக மதம் இராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என்னும் மற்றத் தீய பண்புகள் மகனிடத்து உண்டாகி வளர்வனவாம். ஆதலால் மோகத்தைப் படர்கொடிக்கு ஒப்பிட்டார். இது உயிர்க்குற்றமாகிய அனாதி ஆணவமலத்தின் காரியமாதலால் இந்த நச்சுப்படர் கொடி உயிரைப் பற்றிச் சூழ்ந்து படர்வதாய் இருக்கிறது என்பார் முத்தி முதலுக்கு மோகக் கொடி படர்ந்து என்றார்.

இந்த நச்சுக் கொடி சீவனைப்பற்றி நின்று வளர்ந்து படர்ந்து தளிர்த்து பூ இலை காயாய் விரிந்து சீவனுடைய உடலை முதிரச் செய்து சத்தியிழந்து தளரச் செய்யும் பலனைத் தருகிறது என்பார் அத்தி பழுத்தது என்றார். வடமொழி அஸ்தி என்ற சொல் தமிழில் அத்தி என மருவி நிற்கும். வஸ்து வத்து என்றாற்போல. அஸ்தி என்றால் எலும்பு. அது விடாத ஆகு பெயராய் உடலுக்கு ஆதாரமா

யுள்ள எலும்புக்கூட்டைக்குறித்து உடலையுணர்த்தி நின்றது. மோகமும் அதனையொட்டியெழும் மற்ற தீய பண்புகளும் உயிரைப் பற்றினால் மகன் உலகவிடய போகத்தில் மூழ்கிச் சிக்கி உடலுக்கு உறுதி பயப்பதாயுள்ள பிராணனையும் விந்துவையும் சடுதியிற் போக்கி உடலில் நோயுந் தளர்ச்சியும் வந்து குடிகொள்ளும் நிலையையடைவான். அவனுடலில் எலும்புக்கூடு முதலில் சத்தியை இழக்கும். எலும்புக்கூடு பழுத்ததெனில் உடலில் மற்றப் பகுதிகளெல்லாம் முதிர்ந்து உறுதியற்றுத் தளர்ந்து தள்ளாட்டம் அடைவனவாகும். மகன் கோலூன்றி நடக்கும் நிலையையும் தரையிற் கிடக்கும் நிலையையும் அடைவான் - அப்பால் பழுத்த பழம் கொம்பில் நில்லாது வீழ்ந்து அழியுமாபோல் மகன் சடுதியில் உடலையிழக்க நேரிடும் என்பார் மோகக் கொடியின் பயனாக அத்தி பழுத்தது என்ற உண்மையைக் கூறி அவ்வித பலனை நீ உண்ணாதே என்று எச்சரித்தார். அப்பழத்தை உண்ணாதே என்றது மோகக் கொடி படர்ந்து முற்றிப் பலன் அளிப்பதற்கு முன் தடுத்துக் காத்து முளையிலேயே அந்நச்சுப் படர் கொடியை வேருடன் களைவாய் என்றவாறு. தீமையை வளரவொட்டாது அதனைத் தொடக்கத்திலேயே களையவேண்டுமென்ற நல் வாழ்க்கை நெறியை திருவள்ளுவ நாயனார் தம்முடைய திருமறையில் பகைத்திறந்தெரிதல் என்னும் பகுதில் “ இளைதாக முள்மரம் கொல்க களையுநர் - கை கொல்லுங் காழ்த்த விடத்து ” என்று உபதேசித்தார். தன் உடலுக்கும்,உயிருக்கும் சூழ்ந்து நின்றவர்க்கும்

ஊறு செய்யும் தீய பண்புகள் தோன்றுந்தோறும் அவற்றை அவ்வப்போது முளையிலேயே களைய வேண்டியது அவசியம் என்றதை உணர்த்தி நின்றது அப்பழம் உண்ணுதே என்ற போதனை.

அட்டாங்க சிவயோக ஞான மார்க்கங்களின் மூலமாய் அசத்தாகிய உடல் உலக போகங்களை ஒருவிப்பின்னிட்டு ஞானத்துரிய நிலையை சீவன் அடைந்து முடிவில் முத்தியெய்தி சிவனுபூதியில் திளைக்கும் வழிதுறைகளையும் தவசாதனைகளையும் போதிக்க வந்த ஞானுசாரியர் அசத்தாகிய உடலுக்கு ஊறு செய்யும் மோகம் முதலிய தீய பண்புகளைக் களைந்து அவ்வுடலைக் காப்பாயாக என்று போதிக்க வந்தது, யாது காரணம்பற்றி எனின் கூறுதும். மற்றெச் சமய சாத்திரங்களிலும் காணக் கிடைக்காத ஆற்றலாகிய மாபெரும் காய சித்தி நம் சித்தாந்த சிவயோக மார்க்கத்தின் மூலம் போதிக்கப்பட்டுச் சாதகர்களால் அடையப்பெற்று வருவது உலகப் பிரசித்தம். சுவரை வைத்துச் சித்திரம் எழுதுவார் போல் பல சென்ன நற்செயல்களினுலும் அநுபவத்தினுலும் இறையருளினுலும் உலகிற் காணும் யாக்கை அனைத்தினும் மேம்பட்டதாயுள்ள யாக்கை மகனுக்கு வாய்த்துள்ள இவ்வருமையான உடலைக் கொண்டு மற்ற கீழான சீவராசிகளைப்போல் உலகவிடயபோக ஐம்புல வாழ்க்கையைச் சற்று மேம்பாடாக நடாத்தி ஒழிந்து போவதற்காக மகன் இப்பிறவி எடுக்கவில்லை என்றும், இம்மானுடவுடலைக் கொண்டு தன் உண்மையியல்பையும்

தன்னுடன் கூடி தன்னகத்துறையும் முதல்வனுடைய இயல்பையும் அறிந்து அம்முதல்வனோடு ஒன்றுகூடி நீடிய ஆனந்த நிலையில் வாழ முயற்சித்துப் பலனடைய வேண்டியே பிறந்துள்ளான் என்றும் மெய்யுணர்ந்தோர்கள் கூறியுள்ளார்கள். "உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் உடம்பினுள் உத்தமனைக் காண்" என்றும், "தேடிக்கண்டு கொண்டேன் திருமாலொடு நான்முகனுந் – தேடித் தேடொணாத் தேவனை என்னுளே – தேடிக்கண்டு கொண்டேன்" என்றும், "இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏதுவருமோ அறிகிலேன்" என்றும்,

"கண்ணாக நிலத்து நா னுள்ளபொழு தேயருட்
ககனவட்டத்தினின்று
காலூன்றி நின்றுபொழி யானந்த முகிலொடு
கலந்துமதி யவச்முறவே
பண்ணுவது நன்மையிந் நிலைபதியு மட்டுமே
பதியாயிருந்ததேகப்
பவுரிகுலை யாமலே கௌரிகுண்டலிமாயி
பண்ணவித வருளினாலே
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவே னுமதடிமை நான்"

என்றும் ஞானதேசிகர்கள் அநுபவத்தில் அறிந்து பலனடைந்திருக்கின்றனர். இம்மானுட யாக்கையானது மகன் உயிர் மட்டும் வசிக்கும் இடமல்லாது முதல்வன் நின்று நடிக்கும் சிற்றம்பலத்தையுங் கொண்டதாய் இருத்தலால் அப்புனிதனின் திருக்

கோயிலைக் காக்க வேண்டியது அவனது அடிமையா யுள்ள மகனுக்குக் கடமையாயிற்று. இதனையறிந்த சித்தாந்த சிவயோகியானவன் முதலில் தன்னுடலை வளர்க்கும் உபாயத்தையறிந்து வளர்த்து அதனை உரமுறச் செய்வதுடன் முதல்வனை அகத்தே வழி படுவதிலும் சிந்தையைச் செலுத்துவான். "உடம் பார் அழியில் உயிரார் அழிவர் - திடம்பட மெய்ஞ் ஞானஞ் சேரவுமாட்டார் - உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே - உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே" என்றும், "உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன் - உடம்பினுக்குள்ளே உறு பொருள் கண்டேன்-உடம்பினுள்உத்தமன் கோவில் கொண்டானென்று - உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே" என்று கூறிய திருமூலர் என் னும் சித்தபரசித்தரின் போதனையும்,

"உடலைப் பழித்திங் குணவுங் கொடாமல்
விடவிடவே நாடுவரோ மெய்யைப்-படபட
டென
வேண்டுவே னிந்தவுடன் மெய்யுணராப்
பொய்யனு(ன்)
ஆண்டநீ தானே அறி"

"நில்லாது தேகமெனும் நினைவுண்டு தேகநிலை
நின்றிடவு மௌனியாகி
நேரேயுபாயமொன் றருளினையோ யிதனை
நின்றனுட்டிக்க வென்றால்
கல்லாத மனமோ யொடுங்கி யுபரதிபெறக்
காணவிலை"

என்ற தாயுமானுரின் அறிவுரையையும், கற்றவர் உணர்வர். சித்தாந்த சிவ சன்மார்க்கந்தான் காய சித்தியடையும் சிவயோக மார்க்கத்தைத் தெள்ளத் தெளிய போதிக்கின்றது. இதன் உண்மையை அறிய மாட்டாதார் காயசித்தியடையும் வழியை அநுபவ வாயிலாக வகுத்துக் கூறும் சன்மார்க்கத்தைத் துவித மார்க்கம் என்றும் சித்தர் வழி உலகப் பற்றை விடாதவழி என்றும் திரித்துக் கூறி தாம் மயங்குவதுமன்றி பிறரையும் மயங்கச் செய்வார், "சித்தர் சிவலோகம் இங்கே தரிசித்தோர்-சத்தமும் சத்த முடிவுந் தம்முட் கொண்டோர் — நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர-முத்தர்" என்றும் "சித்தர் சிவத்தைக் கண்டவர்-சீருடன் சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துந் தோயாதவர்-முத்தர் அம்-முத்திக்கு மூலத்தர் மூலத்துச்-சுத்தர் சதாசிவத் தன்மையர் தாமே" என்றுங் கூறியுள்ள திருமந்திர போதனையைக் கேட்டுக் கற்ரோர் உண்மையறியக் கடவர்.

ஆகையாற்ருன் தம் மாணுக்கருக்கு உடல் பழுத்து சடுதியில் நசிக்காதவாறு எச்சரிக்கையுடனிருந்து காத்துவரவேண்டுமென்ற போதனையை தம் அறவுரையின் முடிவில் ஆசிரியர் கூறலுற்ருர் எனக் காண்க.

இவ்வாறன்றி மோகம் என்றது அஞ்ஞானம் என்றும் அஞ்ஞானத்திலிருந்து இதம் அகிதம் விளைந்து இவற்றின் பயனுன சனனம் வருவது அஞ்ஞானத்தின் பழம் என்றும் ஞானத்தினுலே அஞ்ஞானத்தைச் சிதைத்து பிறவியைத் துடப்பாய்

எனப் பொருள்கோடல் சொற்பிறட்டும், பொருள் பிறட்டுமாகும். ஏனெனில் அத்திப்பழம் மோகக் கொடியின் பலன் என்றார் ஆசிரியர். இங்கு பழத்துக்குக் கொடி முதற் காரணம் கொடி அஞ்ஞானம், பழம் உடல் எனில் உடலுக்கு முதற் காரணம் அஞ்ஞானம் என்றாகும். அன்றியும் அஞ்ஞானக் கொடியில் இதம் அகிதம் விளைந்து இவற்றிலிருந்து பூத காரிய உடல் பவித்தது என்றாலும் அதே விபரீதப் பொருள்தான் கிட்டும்.

ஆணவமல பரிபாகத்தின் பொருட்டு உடல் பவிக்கிறது அதாவது ஆணவமலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகத் தேய்த்து ஒழிப்பதற்காக என்று அநுபவ சித்தாந்த சாத்திரங் கூறுகிறது. இதனால் ஆணவ அஞ்ஞான மோகமாதி (மலக்) கொடிக்கு உடல் வைரி என்னும் கோடாலி என்னலாம். இது மகன் வேண்டாமலே அவனுக்கு வேண்டத் தெரியாமலே முதல்வனருளால் அநாதியாக அவனுக்கு வாய்த்து அதன் உதவிகொண்டு முடிவில் ஞான வாளினால் அந்த நச்சுக்கொடி மடிகிறது. இவ்வித உடல் (அதிலும் முத்திக்கு முதலாகிய மகனுடைய உடல்) அஞ்ஞான நச்சுக்கொடியின் பழம் எனல் எவ்வகை விபரீதப் பொருள் என்பதை நுண்ணறிவுடையோர் அறியக்கூடும். ஞானத்தைக்கொண்டு அஞ்ஞானத்தைச் சிதைப்பாய் என்ற பொதுவான உண்மைப் பேச்சை இந்நூற் செய்யுட்களில் பல விடங்களிலும் கூட்டி உரைக்கலாம். ஆனால் அது எடுத்துக்கொண்ட செய்யுட்பொருளை விளக்காது.

(கருத்து): ஞானசாதகன் தொடக்கத்திலிருந்தே மோகம் முதலிய தீயபண்புகள் தன்னைப் பற்ருமல் உடலைக்காக்கக் கடவன் (என்றவாறு).

(பகுதி 2 — சீடனுக்கு அறிவுரை — முற்றிற்று)

## பகுதி 3 — சிவயோக ஞானம்

20 (பற்றற்ருனைப் பற்றல்)

பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பர் என்று உந்தீபற
பாவிக்க வாரார் என்று உந்தீபற. (15)

(கொண்டுகூட்டு): பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில் அப்பற்றை அறுப்பர். பாவிக்க வாரார் என்று அறிந்து உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (அசத்தாகிய மாயா காரியங்களின்பால் நீ கொண்டுள்ள) மோகத்தைக் களையவல்ல ஒப்பற்ற தஞ்சமாம் (அகத்துணையாகிய பதியின்) திருவடியைத் தொடர்ந்து நீ பற்றிக் கொண்டால் உனது மோகத்தைக் களைய அருள் செய்யா நிற்பர். ஆனல் (அவனது திருவடியைக் கண்டு பற்ருமல்) உனது மனங்கொண்ட வடிவில் அவனை வழிபட்டால் உனக்கு அவ்வுதவியை அருள மாட்டார்; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): இப்பால் முதல்வனுடைய மலரடியையறிந்து பற்றுவதற்குதவும் சிவயோக மார்க்

கத்தையும் அதனுல் அடையக் கிடக்கும் முத்தியின் பத்துக்கு நேர்சாதனமாகிய சிவானுபூதி ஞானத்தை அடையும் ஆற்றையும் கூறத் தொடங்குகிருர் ஆசிரியர். சிவயோக சித்தியே சிவஅனுபூதி ஞானமாய்ப் பழுக்கின்றதென்ற உண்மையை அநுபவத்தில் அறிந்துணர்ந்த ஞாஞசிரியர் யோகமென்றும் ஞானமென்றுந் தனித்தனிப் பிரித்துக் கூருமல் இணைத்துக் கூறி இரண்டும் ஒன்று கூடிய ஒன்று என்பதைச் சாதகர் உய்த்துணரச் செய்தார். "விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும் – அரும்பு மலர் காய் கனி போலன்றே பராபரமே" என்று சிவயோகாருட ஞானியாகிய தாயுமான சுவாமிகளின் திருவாக்கு இதற்குச் சான்ருகும். பற்று ஆணவ மலத்தின் காரியம். இது கொள்ளத் தகாத உடல் உலகங்களின் பால் எழும் மோகத்தைக் குறித்து நின்றது. மோகம் தகாத ஆசைப் பெருக்கம். மோகம் நீங்கியவழி மலத்தின் மற்ற விபரீத காரியங்களும் அழிந்தனவாகும். பற்றினை என்பதில் 'இன்' சாரியை 'ஐ' உருபு. எஞ்சி நின்ற பற்று பற்றப்படுவது என்ற பிறவினைப் பொருளில் தஞ்சம் அல்லது பற்றுக்கோட்டைக் குறிக்கும். இதே பொருளில் *திருக்குறளில்* "அப்பற்றைப் பற்றுக" எனக் கூறியுள்ளார். அங்கு துறவு நிலை கூறிஞராதலால் பற்றப்படுவது திருவடி என்ஞது திருவடியை அடைய உதவும் வீட்டுநெறி தியான சமாதிகள் என உரையாசிரியர் பொருள் கொண்டார். இப்பற்றுக்கோடு முதல்வனுடைய சேவடி தானென்று வேதாகமங்களும் மெய்ஞ்ஞானிகளும்

கூறியிருத்தலால் ' பற்றினைப்பற்றில் என்றதற்குத் தஞ்சமாம் திருவடியை நீ பற்றிக்கொண்டால் எனப் பொருள் உரைக்கப்பட்டது.

பாசப்பற்றை யறுப்பதற்கு அகத்துணையாகிய திருவடியைச் சார்தலே அந்தரங்க நேர்சாதனமாயினும் அத்திருவடியைக் காண கலங்கரை தீபம் போன்றுதவும் முதல்வன் உணர்த்தியுள்ள சன்மார்க்க முத்தி நெறியும் ஞான குருவுபதேசமும் இவற்றின் உபாயமாகிய தியான சமாதிகளும் புறத்துணையென்னும் அவாந்தர சாதனங்களாய்ப் பற்றவேண்டுவனவாகும். மணிவாசகப் பெருமான் "மெய்யே உன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்" என்று திருவடிக் காட்சியின் வழித்தாகவே தான் முத்தியெய்தியதை உணர்த்தியுள்ளார்.

முதல்வனுடைய செயல்களெல்லாம் அருட்செயல்களாகலானும் அவற்றைத் தானே செய்யாது சங்கற்பத்தால் சிற்சத்தியைக்கொண்டு செய்வித்தலானும் அப்பற்றையறுப்பர் என்றதற்கு மோகத்தைக் களைய அருள் செய்யா நிற்பர் எனப்பட்டது.

முதல்வனுடைய சேவடியைக் கண்டுபற்றி நில்லாமல் மால் முதலிய தெய்வங்களில் ஒன்றை முதல்வனாகக்கொண்டு வழிபாடு செய்பவருக்கும் அல்லது முதல்வனுக்கு சீவனால் அமைக்கப்பட்ட உருவத்தையே முதல்வனாகக் கொண்டு வழிபடுவோருக்கும் மற்றெப்பலன் கிட்டினும் பாசப்பற்று அறுபடுவதில்லை என்பார் பாவிக்க வாரார் என்றார்.

இவ்வாறன்றி பாவிக்க வாரார் என்றதற்கு சிவனைத் தியானித்துக் கூடவேண்டுமென்று விசாரிக்கில் ஒரு காலமுங் கூடப்படான் என்று பொருளுரைத்தல் சித்தாந்த தியானசமாதி நெறிக்கு எத்துணை முரண்பட்டதாகுமென்பது சித்தாந்த நூலுணர்வுடையோருக்குப் புலனாகும்.

மேலே 4வது (9) செய்யுளில் பாவனைக் கெய்தாது என்று கூறி இங்கு பாவிக்க வாரார் என்றது கூறியது கூறல் என்னுங் குற்றமாகாதோ எனின் ஆகாது. ஏனெனில், அங்கு சீவசிருட்டியால் அமைந்த பாவனைதெய்வ மூர்த்தம் பாவனாதீத முதல்வன் ஆகமாட்டாது என்று கூறினார். இங்கு அப்பாவனா மூர்த்தியால் உனது மோகம் என்னும் பாசப் பற்று அறாது என்று கூறினார் ஆதலின் என்க.

(கருத்து): சீவனுடைய பாசப்பற்றின் நீக்கம் பற்றற்ற முதல்வனுடைய திருவடியை மெய்யாகவே சார்தலினால் அடையப்படுவதன்றி வேறெவ்வித உபாயத்தாலும் அமையாது (என்றவாறு).

21. (ஆருதாரங் கண்டேறல்)

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல உந்தீபற
விமலற் கிடமது என்று உந்தீபற. (8)

(கொண்டுகூட்டு): ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானத்தே செல உந்தீபற அது விமலற்கு இடம் என்று உந்தீபற.

(இதன் பொருள்): (மூலாதாரந் தொடங்கி ஆக்ஞை முடிவாக ஒன்றன்மேல் ஒன்றாயுள்ள ஆறு) ஆதார (சிவசத்திச் சக்கர)ங்களின் வழியாக (ஆதாரங்கட்கெல்லாம் அப்பாலுள்ள) பற்றற்ற தானத்தின் மேற்சென்று (அதன்கண் உள்ள) சுத்த வெளிநிலையை அடைவதற்கு உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு. அவ்வெளிதான் முதல்வன் (சிற்சத்தியுடன்) உறையும் நிலையாகும்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): ஆதாரமுடையதை சாலம்பம் என்றும் ஆதாரமற்றதை நிராலம்பம் என்றும் வடமொழியார் கூறுவர். ஆதாரங்களாவன: மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற கமல வடிவாயுள்ள தனித்தனிச் சூக்குமச் சக்கர நிலைகள். இவை நம் உடலில் ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்காக உள்ளவை. இவற்றுள் மூலாதாரம் குதத்துக்குமேல் இரண்டங்குல தூரத்தில் ஓரங்குல பரப்பில் உள்ள சக்கரமாகும். இதை தேக மத்தியத்தானமென்றும் கூறுவர். இம் மூலாதாரத்தில் இறைவனுடைய சத்தியாகிய குண்டலினி பாம்பு வடிவில் வட்ட வளையமாய்ச் சுருண்டு உறங்கிக்கொண்டும் மேல்வாசல் வழியை யடைத்துக் கொண்டுமிருக்கிறது. உடலிலுள்ள மற்றுமிரண்டு சத்திகளாகிய பிராணனையும் காந்த (மின்சாரம்)த்தையும் இயக்கிவருவதோடு உடலுக்கு வேண்டிய சூட்டையுந் தந்துகொண்டிருக்கிறது. இக்குண்டலிசத்தி பிரபஞ்சத்தை இயக்கும் சத்தி

யின் ஒரு சிறு கூறுகும். இச்சத்தியையறிந்து தன் வசப்படுத்தி அதனுதவி கொண்ட அட்டாங்க சிவராச யோகி சிவ சாயுச்சிய முத்திப்பேற்றை யடைவான். இவ்வாறு அதனுதவியைக் கொள்ளாத மற்றையோர் இகபோகத்தில் அழுந்தி பிறந்திறந்து உழல்பவராவர் என்பது சிவராச யோக போதனை யாகும். இதற்கு மேல் ஒன்பது அங்குல உயரத்தில் நான்கு அங்குல பரப்பில் கந்தம் எனப்படும் சுவா திட்டான சக்கரம் குய்யத்துக்கும் உந்திக்கும் இடையில் உள்ளது. இவையிரண்டுங் கூடியது அக்கினி மண்டலம் எனப்படும். உந்திதான் மணி பூரகச் சக்கரத்தானம். இங்கு அக்கினியின் சிகை வடிவான சூரிய மண்டலம் தொடங்கும். இதன் மேல் தூல இருதயப் பகுதியில் அநாகதச் சக்கர முளது. இதுவரையில் சூரிய மண்டலம் பரவியுளது. இதற்கு மேலாக மிடற்றுப் பகுதியில் விசுத்திச் சக்கர முள்ளது. இதற்கு மேலுள்ள புருவ மையத் தானத் தில் ஆக்ஞைச் சக்கரமுண்டு. இதுதான் உச்ச ஆதார நிலை. இவ்விரு ஆதாரங்களையும் அவைக்கு மேலுள்ள உச்சி பாகத்தையும் வியாபித்துள்ளது சந்திர மண்டலம். இவ்வாறு ஆதாரங்களை அறி வாற் கடந்து அதிநுட்ப பிரமரந்திரத்தின் வழியாக அறிவு சென்றால் நிராதார சுத்த வெளி நிலையை எய்தலாகும். இவ்வாறான சீவ சத்தி நிலையங்கட்கு வீணாத் தண்டின் (முதுகெலும்புக் கூடு) வழியாகப் பிராண சத்தி ஓடியவண்ணமிருக்கிறது. யோக ஞான சீலர்கள் இவ் வீணாத் தண்டைத்தான் இமயம் என்றும் அதன் உச்சியை மேருவென்றுங் கூறுவர்.

மகனுடைய மறச் செயலால் காமாக்கினி என்னும் சூரிய வெப்பம் வளர்ந்தோங்கி சீவ சத்தியை மிதமிஞ்சி விழுங்குகின்றதாகையால் கண்ணுற்றுப் பிராண நீருற்று நாளடைவில் வற்றி உடல்நலிந்து நசிக்கிறது. இதனையறிந்த சிவயோகி பிராணதாரச் சத்திக் கழிவைக் குறைத்து நிறுத்தும் உபாயமறிந்து மனலதைத் தன்வசப்படுத்தி பிராணசத்தி மிதமிஞ்சி அழியாமற் காத்து இகத்தில் நோயற்ற வாழ்வின் மூலம் குறைவற்ற செல்வத்தையும் பரத்தில் தன்னையும் தனக்காதார முதல்வனையும் உள்ளவாறுணர்ந்து அவனுடன் தேனும் பாலும் போல் ஒன்றாகி சீவன்முத்தி எய்துவான்.

இங்கு ஆதாரத்தாலே என்றதற்கு ஆறு ஆதாரங்களில் ஒவ்வொன்றிலும் பொருந்திய தேவதைகளை தியானித்து சமாதியடைந்து என்று பொருள் காணல் சரியை, கிரியை, யோகம் என்ற ஞான பாதங்களை அறிந்துணராதவரின் மயக்கவுரையாகும். ஏனெனில் கிரியையாளர் சிவலிங்கத்தை அகத்தே பூசிப்பவர் என்று ஆகமநூல் சொல்ல ஒரு யோகி பலப்பல தெய்வங்களை வழிபட்டுத் தேற வேண்டுமென்றல் பொருந்தாது. மேலும், நிராதாரத்தே சென்று என்பதற்கு ஆன்ம சொருபத்தையறிந்து ஒரு பற்றுமின்றி சமாதிபரனாய் நிற்றல் என்று கூறலும் அதற்கு மேலாக மற்றொரு உபாய யோகத்தை சாத்திரங்களின் மூலம் ஆராய்ச்சி செய்யவேண்டும் என்று கூறலும் பொருளற்ற சொற்பிறட்டாகி சிவயோக அநுபவமுடையோர் புறக்கணிக்கக் கூடியதாகும். இதனை விரிக்கிற்

பெருகும். தெளிவு பெறவேண்டில் ஒரு யோகாரூட சிவஞானியிடமாகப் பணிந்து கேட்டு உணரலாம்.

இங்கு மீதானத்தே செல உந்தீபற என்று ஆசிரியர் கூறி உந்தி பறத்தல் என்னும் சிவயோக சாதனையின் ஒப்பற்ற பயன் மீதானமென்னும் முடிந்த சிவநிலையை யடைதலே என்று சந்தேகத்திற்கு இடமின்றி கூறியுள்ளதைக் கூர்ந்தறிதல் வேண்டும். செல்க உந்தீபற என்ற பாடத்தைக் கொள்ளினும் உந்தீபறந்து செல்க என்று கூட்டிப் பொருள் காணவேண்டும்.

இந்த மீதான சுத்த வெளிநிலையானது மூச்சைப்பற்றியடக்கும் அடயோகத்தினால் அடையப்படுவதொன்றல்ல. சிவராசயோகத்தினால் மனத்தை அடக்கி பதிஞானத்தினால் உடல் உலகப் பற்றனைத்தைச் சுத்தஞ்செய்து அத்தூய மெய்யறிவு கொண்டு அறிவு வடிவனையும் ஆண்டானையுமுள்ள முதல்வனுடைய சேவடியை அறிந்து பற்றி நின்று எய்தவேண்டிய நிலையாகும். "பிராணன் மனத்தோடு பேராதடங்கி" என்ற தொடக்கமுள்ள திருமந்திர வாக்கையுணர்க

விமலனுக்கு அது இடம் என்ற நிலையை நூலிற் படித்துப் பின்னர் மறந்தொழிவதிற் பயனின்று. பல செனன புண்ணிய வசத்தால் கிடைத்தற்கரிய இம்மானுட யாக்கை உள்ளபோதே அந்நிலையை யடையவேண்டுமென்ற தேட்டம் மிக்கூரி இவ்வாழ்வைக் கீழ்ப்படுத்தி ஞானகுருவின் உபதேசத்தின்

மூலமாய் உந்தீபற்றத்தல் என்னும் சிவதவ இலக்கணத்தையும் சாதிக்கும் வழிதுறைகளையுங் கேட்டுணர்ந்து நீண்டகாலம் தவமியற்றி அடையவேண்டிய நிலையாகும்.

"அண்ணல் இருப்பிடம் யாரும் அறிகிலர்" என்றும், "பந்தமறுத்துப் பரங்குரு பற்று" என்றும், "அண்ணலின் இருப்பிடம் ஆய்ந்து கொள்வார்க்கு அண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்" என்றும் பல நூற்றாண்டுகட்கு முன்னரே நமக்கு போதித்தருளிய திருமூல நாதரை இங்கு நினைந்து வந்திப்போமாக.

(கருத்து): அண்டத்துக்கு அப்பாலுள்ள முதல்வனை பிண்டத்துள்ள சீவாதார சக்கர நிலைகளின் வழியாக அறிவைச் செலுத்தி பிண்டமாகிய உன் உடலுக்குள்ளாகவே கண்டு அடைவாயாக (என்றவாறு).

22. (பிராணமனோலயம்)

காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவது ஆற்றல் என்று உந்தீபற
அல்லாதது அல்லல் என்று உந்தீபற. (22)

(கொண்டுகூட்டு): கருத்தைக் கருத்தினுள் மாற்றி காற்றினை (மாற்றி) ஆற்றுவது ஆற்றல் அல்லாதது அல்லல் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (விடயங்களை நாடி வெளியில் ஓடிக்கொண்டிருக்கும்) கருத்தை கருத்து

(உதித்து ஒடுங்கும்) ஒள்ளிடத்துக்குத் திருப்பி (அதன் மூலமாய் உடலுள்ளும் வெளியுமாய் ஓடிக்கொண்டிருக்கும் பிராணன் அபானன்வடிவ மாயுள்ள) மூச்சை அது ஒடுங்கும் இடத்திற்குத் திருப்பி (இவ்விரண்டினையும் நிலைக்கச்) செய்வது வலிமை உடைமையாகும். அவ்வாறு செய்து முடிக்காதது துன்பம் உடைமையாகும் (துன்பத்தைத் தரும் என்றவாறு); என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): விரிந்த பொருள்களைக் குறைந்த சொற்களால் கூறும் இந்த ஞானாசிரியர் தொடரையும் சொல்லையும் பலவிடங்களில் சிம்ம நோக்கில் அமைத்துக் கூறியுள்ளதைக் கூர்ந்தறிந்து பொருள் கொள்ளவேண்டும். மேலே பல செய்யுட்களில் கண்டதுபோல் இங்கும் மாற்றி என்ற சொல்லை சிம்ம நோக்கிலமைத்துக் கருத்தை மாற்றி என்றும், காற்றினை மாற்றி என்றும் பொருள்படக் கூறியுள்ளார்.

மாற்றுதல், ஒன்றையொன்றுக்கல்; வேறுபடுத்தல். காற்று என்பது உடலில் உள்ளும் புறம்புமாக இயங்கும் பிராணன், அபானன் என்ற இரு கூறுயுள்ள மூச்சென்னும் வாயுவை. காற்றினை மாற்றி என்றார். இதற்குப் பிராணனை அபானனாகவும் அல்லது அபானனைப் பிராணனாகவும் மாற்றியமைத்தல் எனப் பொருள் கொள்ளுதல் அறியாமையாகும். ஆதலால் காற்றினை என்றதற்கு

காற்றின் கதியை அல்லது வழியை என்பப் பொருள் கொள்வர் யோக நெறியுணர்ந்தோர். அவ்வாறே வெளிமுகமான கருத்தை உண்முகமாகத் திருப்பி எனப் பொருள்கொள்ள வேண்டும். கருத்தின் உள் வழி நிலையாவது கருத்து உதித்து ஒடுங்குமிடம். உதித்தவிடத்தில் ஒடுங்குவது உள்ள பொருளின் இயல்பு. உள்ளும் புறம்புமாக ஓடிக்கொண்டிருக்கும் பிராணன் அபானன்களை புறம்பும் உள்ளுமாக மாறியோடி ஒன்றையொன்று சந்திக்கச் செய்தலும் இடகலை பிங்கலையாகப் பிரிந்தோடிக்கொண்டிருக்கும் காற்றை ஒன்றுபடுத்தி சுழுனை வழியாகச் செல்லச் செய்தலும் காற்றின் வழியை மாற்றுதலாகும். இவையிரண்டும் இரு வேறு செயல்களல்லாது ஒன்றேயாமென்பதை ஞானகுருமுகத்திற் கேட்டுணர்தல் முறைமையாகும்.

செய்யுளின் எதுகை நோக்கிக் காற்றினை மாற்றி என்பதை முற்கூறி கருத்தை மாற்றுவதைப் பின்னர் கூறினாரேனும், கருத்தை மாற்றுவதை முன்னதாகக் கொண்டு பொழிப்புரைத்தலே ஆசிரியரின் கருத்தெனக் கொள்ளவேண்டும். ஏனெனில் அட்டாங்க சிவராச யோகத்தின்படி கருத்தை மாற்றுஞ் சாதனையைச் சாதித்துத் தேர்ந்து அதன் பயனாக காற்றை மாற்றும் சாத்தியத்தையும் அடைய வேண்டும். இவ்வாறன்றிக் காற்றை மாற்றுஞ் சாதனத்தினால் கருத்தை மாற்றும் சாத்தியத்தை யடையப் பிரயாசைப்படல் அடயோகம் முதலிய வீணான யோகங்களின் பாற்படும். ஆதலால் காற்றினை மாற்றி என்று தொடங்கிய

ஆசிரியர் அதன் உபாயத்தினையும் உடன் கூறினார் என்று கொள்ளல் கடனாகுமன்றி அதன் பயனை யடுத்துக் கூறினார் எனல் அறியாமையாகும்.

(விளக்கம்): எண்ணம் நினைவு. கருத்து உதிப்பது அந்தக்கரணத்தில். நனவிலும் கனவிலும் மனமானது புதிய விடயங்களையும் பழைய விடயங்களையும் வெளிமுகமாயும் உண்முகமாயும் நின்று இடையறாது கருதிக்கொண்டேயிருக்கும். எண்ணங்கள் கடல் திரைகள் போல் உதித்து ஒடுங்கிக் கொண்டேயிருப்பது மனதின் இயற்கை. "ஆடிய கறங்குபோல் ஒடியுழல் சிந்தை" என்றார் தாயுமானாரும். இவ்வியற்கையை மாற்றுவது எவ்வாறாறல் எனின் கருத்தை கருத்தினுள் திருப்புவதன் மூலந்தான் என்றார். கருத்தினுள் என்றதனால் கருத்தின் உட்புறம் அதாவது அது உதித்து ஒடுங்குமிடம், என்று பொருள் கூறப்பட்டது. இந்நூல் முழுவதும் யோகஞான சாதகரின் ஆக்கங் குறித்து போதிக்கப் பட்டதென்கக்காண்க் கிடத்தலால் மேலாலவத்தையி லுள்ள சாதகன் கருத்து ஒடுங்குமிடமாகிய துரிய நிலையில் தன் கருத்தை யூன்றி நிலைக்கச் செய்தால் பிராணனாகிய காற்றும் அங்கு ஒடுங்கிச் சலனமற் றிருக்கும். இவ்வாறு மனமும் பிராணனும் ஒடுங்கி நின்றால் அப்பால் அடைவது துரியாதீத முடிவா யுள்ள ஞானசமாதி நிட்டை நிலையாகும். ஆதலால் இந்நிலையைக் கைக்கொள்வது ஞானயோகாருடராகிய ஆற்றல் மிக்காருக்கன்றி மற்றையோர்க்கு இயலாது என்பார் ஆற்றுவது ஆற்றல் என்றார்

மகனொருவன் மனஞ்சென்றவாறு பொறிவழிப் புலன்களிற் சென்று எளிய செயலைச் செய்யின் அவன் சிறியவனென்றும், மற்றொருவன் இயம நியமாதி யோக நெறியிற் புக்கு மனதை அடக்கும் அரிய செயலைச் செய்வானாகில் அவன் பெரியவனென்றும் செயல் புரியும் ஒருவனுடைய வலிமை அவனுடைய மனவலிமையின் அளவுதானென்றும் மனவலிமை நீங்கலாக மற்ற வலிமை பயனற்றதாகும் என்றும் தமிழ்மறை போதிக்கின்றது. ஆகலான் யோகியானவன் தன் மனதை நிலையில் நிறுத்தித் தேர்வானென்றால் அவன் பெரியவனென்றும் ஆற்றல் மிக்கானென்றும் மெய்யுணர்ந்த சான்றோரால் போற்றப்படுவான். ஆதலால் கருத்தைக் கருத்தினுள் மாற்றி ஆற்றுவது ஆற்றல் என்றார்.

அட்டாங்க சிவராசயோக சாதனையைக் கொண்டு சிவானந்த நிட்டையிலழுந்தி சிவசாயுச்சிய பரமுத்தி எய்திய தாயுமான சுவாமிகளின் அடியிற் குறித்த அநுபவ மொழிகளை இங்கு கூர்ந்துணர்க. "வாசா கயிங்கரிய மன்றியொரு சாதனம் மனோவாயு நிற்கும் வண்ணம் வாலாய மாகவும் பழகியறியேன்"; "சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது"; "மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"; "பாழான என் மனம் குவியவொரு தந்திரம் பண்ணுவ துனக்கருமையோ"; "பாசாடவிக்குளே வீழாமல் மனதற்ற பரிசுத்த நிலையை யருள்வாய்"; "நானென்று நீயென் றிரண்டில்லை யென்னவே நடுவே முளைத்த மனதைக்

கட்டவிறி யாமலே வாடினேன்''; ''சிந்தையு மென் போல செயலற்றடங்கி விட்டால் – வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே''; ''எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினுமென் இதயமு மொடுங்கவில்லை''.

இவ்வாறு கருத்தையும் அதன் விழித்தாகக் காற்றையும் மாற்றி நிலைநிறுத்தாமல் வீண்யோகங் கைக்கொண்டு புரியும் சாதனைகளெல்லாம் துன்பத்தையே தருவனவாம் என்பார் அல்லாதது அல்லல் என்று உறுதிபடக் கூறினார். மனதிற்குச் சலித்தலே உருவாதலால் அதன் அசைவற்ற ஒடுக்க நிலை இறந்த நிலை எனப்படும். இங்கு அல்லல் என்றது துன்பங்கட்கெல்லாம் கொடிய துன்பமெனச் சான்றோரால் கருதப்படும் பிறவித் துன்பம். ஆதலால் பிறவி நோயைத் துடைப்பதற்கு உபாயம், மனதையும் பிராணனையும் ஒன்று சேர நிலைக்கச் செய்யும் ஞானத்துரிய நிலையையடைதலே என்று ஆசிரியர் போதித்தார் என்க.

(கருத்து): சிவஞான யோகிக்கு மனமிறந்த ஞானத்துரிய நிலையடைதல் ஆற்றல் மிக்க சாத்தியமாம் (என்றவாறு).

23. (நோக்காது நோக்கல்)

தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்
நோக்கிற் குழையுமென்று உந்தீபற
நோக்காமல் நோக்க என்று உந்தீபற. (11)

(கொண்டுகூட்டு): (தாக்காது) தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம் நோக்காமல் நோக்க நோக்கிற் குழையும் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (தன் கரணங்களைக் கொண்டு) இயக்காமல் (சங்கற்ப மாத்திரத்தால் ஆணையென்னும் தன் சத்தியைக் கொண்டு பிர பஞ்சத்தை) இயக்கி, (அவ்வாறு இயக்குவதனால் தான்) விகாரமடையாது நிற்கும் (ஞான நிட்டருக் குத்) தலைவனான முதல்வன் (பசுபாச ஞான மென்னும்) ஊனக்கண்ணால் பாராமல் (பதிஞானம் என்னும்) ஞானக்கண் கொண்டு (அவனது சேவடி யில்) கருத்தைப் பதித்தால் காட்சிக்கு எளியவனா வான், என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): தாக்காது என்றது சிம்ம நோக்கில் நின்றதனால் தாக்கி என்றதனோடும் நின்ற என்றதனோடும் கூட்டிப் பொருள் காணப் பட்டது. அரசனது ஆணையைக் கைக்கொண்டு அமைச்சன் அதனை நிறைவேற்றுவதுபோல் ஆணை யென்னுஞ் சத்தி முதல்வனது சங்கற்பத்தை ஏற்று சிருட்டி முதலிய ஐந்து தொழில்களைப் புரிந்து பிர பஞ்சத்தை இயக்கி) நிற்குங்கால் முதல்வன் விகார முறும் உலகு போலல்லாது தான் நிருவிகாரியாய்ச் சலனமற்றிருக்கிறான் என்பார் தாக்காது தாக்கி நின் றது என்றார். இங்கு தாக்காது என்றது தாக்குறாது என்ற பிறவினைப் பொருளைக் கொண்டது. தற்பரம் தனக்குப்பரமாய் (மேலாய்) உள்ளது. முதல்வனைத்

தற்பரம் என்று காட்சியிற் காண்பவர் சிவஞானியும் சிவயோகியும். அந்நிலையை யடைந்தவர் அடைய நிற்பவரை முன்னிட்டு இப்போதனே கூறப்படுவதால் முதல்வனைத் தற்பரம் என்றார். ஏனெனில் நோக்காது நோக்கல் அன்னவர்க்கே கூடும் ஆதலால் என்க.

நோக்கல், கண்ணாற் காணல். நோக்காது நோக்கல் என்றதனால் முகக்கண்ணாகிய பசுபாசங்களை யறியும் ஊனக்கண்ணை விட்டு அகக்கண்ணாகிய முதல்வனை யறியும் ஞானக்கண்ணால் நோக்கல், எனப் பொருள் உரைக்கப்பட்டது. சீவர்களின் அறிவில் அகத்திலோர் கண்ணுண்டு. அதனை அகக்கண் ஞானக்கண் மனக்கண் நெற்றிக்கண் எனப்பல பெயர் கொண்டு கூறுவர் மெய் யுணர்ந்தோர்.

> "முகத்திற்கண் கொண்டு பார்க்கின்ற
> மூடர்காள் — அகத்திற்கண்
> கொண்டு பார்ப்பதே ஆனந்தம்"

என்றார் திருமூலநாயனாரும். நோக்காது நோக்கல் ஞானயோக முத்திரை. இதனை ஞான குருமுகத்தில் அறியவேண்டும். "வாக்கான் மனத்தான் மதிப்பரியாய் நின்னருளை—நோக்காமல் நோக்கி நிற்கும் நுண்ணறிவு காண்பேனோ"; "பாராது பார்ப்பதே ஏதுசாதனமற்ற பரமானுபூதி வாய்க்கும் பண்பென் றுணர்த்தி" என்று தாயுமானாரும், "காணாத கண்ணுடன் கேளாத செவியும் — கோணாத போதமும்

கூடாத கூட்டமும் — நாணாத நாணமும் நாதாந்த போதமும் — காணுமென வந்து காட்டினன் நந்தியே'' என்று திருமூல நாதரும் சொன்னபடி இவையனைத்தும் ஞானகுருபரன் போதிக்க அறியக் கிடக்கின்றன.

குழைதல் நெகிழ்ந்த நிலையடைதல்; அதாவது தழுவக் கடினமாயுள்ளது சுலபமாய் மாறுதல் என்ற பொருளில் நின்றது. இங்கு காட்சிக்கு எளியனாந் தன்மையை யுணர்த்திற்று.

நோக்கிற் குழையும் என்றதற்கு இரண்டுபட்டு நின்று விசாரிக்கில் பரம்பொருள் உனக்குக் கூடாது என்றும் நோக்காமல் நோக்க என்றதற்கு உன்னைத் தோற்றாமல் அந்த சொரூபம் தானாகவே நிற்கில் என்றும் பொருளுரைத்தல் மெய்ஞ்ஞான யோக குருவுபதேசமும் அநுபவமுமற்ற போலியுரையாகும்.

(கருத்து): பசுபாச ஞானத்தை விட்டு பதி ஞானக் கண்கொண்டு காணும் சிவ யோகிக்கு முதல்வன் காட்சிக்கு எளியனாகின்றான் (என்றவாறு).

24. (மனமிறந்த யோகி)

உழுவாது உணர்கின்ற யோகிகள் ஒன்றோடுந்
தழுவாமல் நிற்பர் என்று உந்தீபற
தாழ்மணி நாவேபோல் உந்தீபற. (16)

(கொண்டுகூட்டு): உழுவாது உணர்கின்ற யோகிகள் தாழ்மணி நாவேபோல் ஒன்றோடுந் தழுவாமல் நிற்பர் என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): நடுக்கமுறுமல் (தஞ்சமாந் திருவடியை) தெளிந்தறிந்து பற்றி நிற்கின்ற (அட்டாங்க சிவராச) யோகிகள், (ஒலிக்காது) ஓசை யடங்கியுள்ள (ஊமை) மணியின் நாவைப்போல (பற்றி நிற்குந் திருவடியைத் தவிர்த்து மற்ற) எந்தப் பொருளையும் சித்தத்தால் தொடாமல் (சிந்திக்காமல் என்றவாறு – இலட்சியத்தில்) நிலைத்திருப்பார்கள்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): உழவல் உழலல் என்பன ஒரு பொருட் பன்மொழி. இவை சுழலல் ததும்பல் நடுங்கல் எனப் பல பொருள்கொள்ளும். இங்கு உணர்வுக்கு அடைமொழியாதலால் உழவாது என்றதற்கு நடுக்கமுறுமல் என்றுரை செய்யப்பட்டது. 20-வது (15) செய்யுளில் முதல்வனுடைய திருவடியே தஞ்சமெனச் சார்ந்து பாசப் பற்றை அறுப்பர் என்று பொதுப்படக் கூறி இங்கு அவ்வாறு சேவடியைப்பற்றி சாதனையில் உறைந்து நிற்பவர் யோகி என்றார். ஆதலால் உணர்கின்றது எதை என்றெழும் வினாவிற்கு விடையாகத் தஞ்சமாம் திருவடியை என்று வருவித்து உரைக்கப்பட்டது. உணர்தல் தெளிந்தறிதல். அறிதல் பற்றுதற்காகத் தான். அறிந்ததைக் கொள்ளாவிடில் பயனில்லை. ஆதலால் உணர்தல் என்றதற்குத் தெளிந்தறிந்து பற்றுதல் எனப்பட்டது. உணர்தல் என்றால் எல்லாம் அறிதல் என்று பொருள் கொள்ளல் தவறு. ஏனெனில் எல்லாம் அறிதல் முதல்வனது பண்பாகு மன்றி யோகிக்குப் பொருந்தாது.

யோகி என்றது அட்டாங்க சிவராசயோகி எனப் பொருள் கொண்டது. ஞானபாதங்களில் மூன்றுவதாகிய யோகம் அட்டாங்க சிவராசயோகமென சிவாகமங்கள் போதித்து சித்தாந்த சிவயோக ஞானிகள் கைக்கொண்டு பலனடைந்து வருவதால் என்க.

ஒன்ருேடுந் தழுவாமல் நிற்பர் என்றதற்கு முதல்வனுடைய திருவடியே தஞ்சமெனத் தழுவிநிற்கும் சிவயோகிக்கு சிவத்தோடொன்ருகி சிவப்பேறடைவதற்குச் சேவடியே பற்றுக்கோடாகுமாதலால் அதைத் தவிர்த்து மற்றைப் பொருளையும் சிந்திக்காமல் இலட்சியத்தில் நிலைத்து நிற்பாரென்று கூறப்பட்டது. இந்த நிலையை ஊமை மணியின் நாவுக்கு ஒப்பிட்டார் ஆசிரியர். ஏனெனில் ஒலிக்காத வேளையில் நாவானது மணியின் உச்சியைமட்டும் பற்றிநின்று மற்றெந்த பாகத்தையும் ஒட்டாமல் அசைவற்று நிற்கும். மணி உலகுக்கும் நா யோகியின் சித்தத்திற்கும் மணியுச்சி உலகின் முகட்டிலுள்ள முதல்வனது திருவடிக்கும் ஒப்புக் கூறப்பட்டது. உபமானப் பொருளை உற்று நோக்கிஞல் எவ்வித பற்றுக்கொடுமின்றி நிற்பர் என்று பொருள் கொள்ளுதல் தவறுடைத்தாகுமெனக் காணலாம். தாழ்தல், தங்கல், அசைவற்றிருத்தல். ஆதலால் தாழ்மணியென்றது அசைவற்ற மணி, அதாவது ஒலிக்காத ஊமைமணி எனப் பொருள் கொண்டது.

இவ்வாறன்றி தாழ்மணிநா என்றதை தாழ்நா மணி என்று கொண்டு கூட்டிப் பொருள் காணல் உபமான உபமேயப் பொருள்களிலுள்ள ஒற்றுமையைக் காணாத கூற்றாகும்.

(கருத்து): முதல்வனுடைய திருவடியைப் பற்றி நிலைத்துள்ள துரிய ஞானயோகியின் தெளிந்த சித்தம் அந்நிலையைவிட்டு நழுவுதல் இல்லை (என்றவாறு).

25. (சிவதுரியஞான நிலை)

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாம் என்று உந்தீபற
நாதற்கு இடம்அது என்று உந்தீபற (36)

(கொண்டுகூட்டு): நாலாய பூதமும் நாதமும் ஒன்றில் (அது) நாலாம் நிலையாம். அது நாதற்கு இடம் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): பூதங்களின் காரியமாய் நான்கு வகையாயுள்ள (பரிசுத்தமுற்ற) அந்தக் கரணங்களும் சூக்குமை நாதத்தாற் செலுத்தப்படும் (தூய) உயிரும் அஃகத்தே ஒன்றுபட்டு நின்றால் அந்நிலை (மேலாலவத்தையில்) நான்காவதான துரிய ஞானநிலை என்னும் யோகபூமியாகும். அந்நிலை முதல்வனுக்கு நிலையாகும்; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): பூதம் என்றது பூத காரியத்தை. நாலாய பூதம் என்றதனால் நான்கென ஒன்று சேரக் கூறப்படும் பூத காரியமாகிய அந்தக்கரணம் எனக் கொள்ளவேண்டும். நாதம் என்றது சூக்குமை நாதத்தாற் செலுத்தப்படும் உயிரை. ஞானத்துரிய நிலை என்னும் நான்காவது யோக பூமியில் அந்தக் கரணங்கள் உயிருடன் கூடி அடங்கி நிற்குமாத லால் பூதம், நாதம் என்ற சொற்களுக்கு இவ்வாறு பொருள் காணக்கிடக்கின்றது.

ஆணவமலத்தால் இயற்கை அறிவு மறைபட்டு நிற்கும் சீவனுக்கு முதல்வனருளால் உதவியாகக் கொடுக்கப்பட்ட மந்திரிசபை போன்றதுதான் அந்தக்கரணம். அச்சபையில் நான்கு ஆலோசகர் கள் உண்டு. யாதானுமொரு உலக விடயத்தைச் சித்தம் முதலில் பற்றும். பற்றியவிடத்தை இன்ன தெனத் தெளியாது அதுவோ இதுவோவென்று விகற்பமுற்றுச் சந்தேகிக்கும் மனம். அதனை இன்னதென்று நான் தெளிவேன் என்று முனைந் தெழும் அகங்காரம். முடிவில் புத்தி அவ்விடயம் இன்னதுதானெனத் தெளிந்தறியும். இவ்விதமாக நால்வர்களுங்கூடி அறிந்த விடயத்தைப் புத்திக்கும் சீவனுக்கும் இடைநிற்கும் வித்தை சீவனுக்கு சுக துக்க வடிவில் உணர்த்தும். அதுகாலை அவ்வாறு உணர்த்த முற்படுவதும் அகங்காரந்தான்; இது தான் இயற்கை. அந்தக்கரணங்கள் சீவனை நீங்காது உடன் ஒட்டியே நிற்கும். அவை சட பூதங்களின் காரியமாய்த் தாமும் சடமாயினும் சித்தாகிய சீவனையொட்டி நிற்குந்தன்மையால்

தாமாகவே விடயத்தைப் பற்றியறியும் ஆற்றல் கொண்டு மற்ற தூல உடற்கருவிகளைப் போலல்லாது அவற்றிற்கும் மேலாய் சூக்குமவடியாய் அவற்றைத்தொழிற்படுத்தும் ஆற்றலுடையனவாய் இருக்கின்றன என்பது சுவானுபவமும் சாத்திரக் கூற்றுமாகும்.

ஆனால் பூதகாரியமாகையால் அந்தக்கரணம் பூதஉலக விடயங்களை நாடியோடிப் பற்றியறிந்த வண்ணம் இருக்கும். அதனால் சீவனும் அவ்விடயங்களை மாறி மாறி அறிந்தும் மறந்தும் அவற்றினுக்கு ஏற்ப சுகதுக்கங்களை அநுபவித்தும் இருக்கிறான். இவ்வாறு அகத்தே சங்கற்பித்தும், புறத்தே விடயங்களைப் பற்றி ஓடிக்கொண்டிருக்கும் மனதை (அந்தக்கரணங்கட்குப் பொதுப் பெயர் மனம்) தன் வசப்படுத்தி அடக்கிய பிறகுதான் சிவநிலை கிட்டுமென்று ஆசிரியர் மேலே கூறியுள்ளார். ஆதலால், மனதையடக்க வேண்டியது ஞானசாதகனின் கடமையாயிற்று. சீவனை ஒட்டி நிற்கும் அந்தக்கரண அறிவு (புத்தி) மற்ற சித்தம் மனம் அகங்காரங்களின் உதவி கொண்டல்லது ஒரு விடயத்தைத் தெளியமாட்டாது. ஆகலான் மனவடக்கம் என்பது புத்திதத்துவம் நீங்கலாக மற்ற மூன்றினையும் புறத்தேயோடாமல் அகத்துள் அடக்குவதாகும். ஏனெனில் ஆணவமலத்தால் மறைப்புண்ட சீவ அறிவுக்கு (போதம் என்பர்) உதவியாயுள்ள அந்தக்கரண அறிவைப் புறக்கணித்தல் தொடக்கத்தில் யோகசாதகனுக்குக் கூடாது. மேலும் மனம்

முதலிய மூன்று கூறுகளும் செயலற்று மடங்கியவழி எஞ்சியுள்ள புத்திக்குப் புதிய விடயப்பற்றும் காலக்கிரமத்தில் பழையவிடய வாசனையும் அற்று மாசறும். இவ்வாறு மாசற்ற அந்தக்கரண அறிவும் ஞானகுருவுபதேசத்தால் பாசத்தையொருவி மலம் அடங்கித் தூயதான சீவ அறிவுங் கூடி அகத்தே ஒன்றுபட்டு நிற்கும் நிலையில் அதற்குப் புறப்பற்று இல்லாமல் நீங்கவே அகப்பற்ருகிய தஞ்சமாம் முதல்வனுடைய திருவடியை நாடி குருவுபதேச உதவிகொண்டு அகத்தே ஒரு குறியின்கண் நின்று நிலைக்கும். அந்நிலைதான் நான்காம் நிலை எனப் படும் சிவதுரிய நிலை என்ருர் என அறியக்கிடக் கின்றது.

சிவன் அகண்ட அறிவு சொரூபன். ஆகையால் சீவனில் அவனது திருவடி நிற்குஞ் சிவலோகத் தைப் பரிசுத்த அறிவு கொண்டல்லது, மலமற்ற அறிவுவடிவ உயிரல்லது மற்ற யாதொன்றும் அணுக முடியாது என்பார் மனமுஞ் சீவனும் ஒன்று பட்டு நிற்கும் நிலை ஞானத்துரிய மென்னும் சிவ நிலை என்ருர். சிவ யோக மேலாலவத்தையிலும் ஐந்து அவத்தை(நிலை)கள் உண்டு. அவற்றுள் முதல் மூன்றையும் நனவு, கனவு, சுழுத்தி என்று கூறுவர். நான்காவது நிலையை ஞானத்துரியம் என்றும் ஐந்தாவது நிலையை துரியாதீத நிட்டை நிலை என்றும் கூறுவர். மத்திய, கீழாலவத்தைகளி லுங்கூட சீவனுக்கு துரியதுரியாதீத அவத்தைகள் உண்டெனினும் அவை அஞ்ஞான பெத்த நிலைக்

சூரியனவாதலால் அஞ்ஞான துரியதுரியாதீத நிலைகளாகும்.

பூரண ஞான நிலைக்கு அடிப்படையாயுள்ளது ஞானத் துரியம். இதன் முடிந்த நிலை சுத்த வெளி என்னும் பேரின்ப நிலை. இவற்றினுக்கு இடையி லுள்ளது அதீதம். அதீத நிலையே சுத்த நிலை எனவும் படும். துரியம் அதீதம் சுத்தம் என்ற மூன்றும் சிவநிலையின் படிக்கிரம பேதங்களேயன்றி வேறல்ல. ஞானத் துரிய நிலையில் புருடனும் அந்தக்கரண அறிவின் விருத்தியும் (சித்தம் எனவும் படும்) உண்டு. மற்றத் தத்துவங்களெல்லாம் அடங்கிவிடும். "மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு — மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை" என்று திருமூல நாதர் கூறியுள்ளது போல் மனமிறந்த துரிய நிலையில் பிராணனுஞ் சலனமற்று ஒடுங்கிவிடுகிறது.

இவ்வாறு மனமிறந்த துரிய நிலையை எய்திய சிவயோகி சிவ குருநாதரிடமிருந்து பெற்ற ஞானோபதேசங் கொண்டு தன் உண்மையியல்பை யறிந்து உலகப் பாசங்களைக் கைவிட்டு முதல்வ னுடைய திருவடியை அறிந்து பற்றிக்கொள்கிறான். ஆகையால்தான் நான்காவதாகிய துரிய யோகபூமி சிவ நிலையின் அடிப்படையென்றும் சிவ துரிய ஞான நிலையென்றுங் கூறப்படுகிறது. சிவ ஞான போதம் 8-வது சூத்திரப் பொருளைக் காண்க. ஆனால் அஞ்ஞானத்தைச் செய்யும் ஆணவமலத் தைச் சிதைத்தொழிப்பதற்கு ஞானமே நேர் சாதன

மாகையால் ஞானமடைவதற்கு முதற் காரண மாகிய சிவ ஞானோபதேசத்தை மட்டுங் கூறிக் குருமுகமாய்ப் பெற்ற சாதனஞானத்தை அனுட்டிக்கும் முறைறையும் அதன் பயனாக சிவ தரிசனம் பண்ணுமாற்றையும் மெய்கண்டார் சிவ ஞானபோதத்தில் கூறி முடித்தார். ஞானத்திற்கு நேர்சாதனமாகிய சிவயோகதவ இலக்கணத்தை அந்நூலில் காண்பதற்கில்லை. ஏனெனில் அது அடிப்படையில் மொழி பெயர்ப்பு நூலாகையால் வடமொழி முதனூலில் யோக இலக்கணத்தை விரித்துக் கூருத விடத்து தமிழாக்க நூலில் அதற் கிடமில்லை. ஆனால் வழிநூலாகிய ''சிவஞான சித்தியாரிலும்'' ''சித்தாந்த சாராவளி'' முதலிய நூல்களிலும் யோக இலக்கணங்கள் கூறப்பட்டிருக் கின்றன.

இங்கு திருவுந்தியாரில் யோகசாதன இலக் கணத்தையும் கூட்டி உரைத்துள்ளாராகையால் சிவயோகியடையும் நான்காவது யோகபூமி, பாசத்தை விட்ட உயிரும், இந்திரியத்தை விட்ட சித்தமுங்கூடி யடையப்படுவதாகு மென்ருர். இந்தி ரியங்களைப்பற்றி புறத்தேயோடிக் கொண்டிருக்கும் அந்தக்கரணத்தை யடக்கி தன்வசப்படுத்தலே சிவயோகத்தின் முக்கிய சாத்தியமாகையாலும் அந்தக் கரணச் சுத்தியின்றி பாசத்தை நீக்கி ஆன்ம சுத்தி பண்ண முடியாதாகையாலும் அதீத சிவநிட்டை கூடும்வரையில் கரண அறிவென்னும் சித்தவிருத்தி உயிரைவிட்டு நீங்குவதில்லையாத லாலும் நான்காவதாகிய துரிய நிலையில் சித்த

விருத்தியும் உயிருடன் கூடியிருத்தலானும் மல மடங்கிச் சுத்தமுற்ற உயிரும் இந்திரியத்தை விட்டுச் சுத்தமுற்றச் சித்தமும் ஒன்றாய் நின்றடைய வேண்டுவது துரியமென்னுஞ் சிவநிலையென்றார் உய்யவந்ததேவ ஞானாசிரியர் எனக் காண்க. "மெய்ம்மைச் சிவயோகமே யோகம் அல்லாத யோகம் அவயோகமென்றே அறி" என்ற திருக் களிற்றுப்படியாரின் போதனையைக் காண்க.

பாசமொருவி சாதன ஞானத்தைக் கொண்டு பதியை நாடுமிடத்து சிவஞானசொரூபக் காட்சி அநுபவமாகுமென்றும், அக்காட்சி நிலைத்தற் பொருட்டு பஞ்சாக்கரத்தை விதிப்படி கணித்தல் வேண்டுமென்றும் சிவஞானபோதம் 9ம் சூத்தி ரத்தில் தொகுத்துக்கூறிய பொருளை அடுத்துவரும் நாதாநுசந்தானம், பஞ்சாக்கரத் தியானம் என்ற இரண்டு செய்யுட்களில் விரித்துக் கூறியுள்ளார் நாயனார்.

இவ்வாறன்றி பூதம் நாதம் என்ற சொற்களுக்கு ஆகுபெயராற் கிடைக்கும் உண்மைப் பொருளைக் காணமாட்டாமல் நிலம் முதலிய நான்கு தூல பூதங்களும் நாதஒலியுடன் கலந்தால் சிவதுரியநிலை கிட்டுமென்னல் தத்துவஞானமும் சிவயோகஞான முமற்ற வெற்றுரையாகும். மேலும், முதல்வனோடு ஒன்றுபடுவதற்கு ஆசிரியர் வெவ்வேறான உபாயங் களைக் கூறியுள்ளார் என்றும் அவற்றுள் ஒன்று காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள் ஆற்றல் என்றும் நான்காவது உபாயம் நாலாயபூதமும்

நாதமும் ஒன்றி நான்காம் நிலையாகிய சாயுச்சியம் கைகூடல் என்பதும் நான்காவது நிலையே சாயுச்சிய நிலை என்பதும் ஏகான்மவாதத்தையொட்டி துரியா தீதத்திற்கு மேற்பட்ட உபாயயோகம் என்னும் சாத்திர ஆராய்ச்சி ஒன்று உண்டு என்பதும் ஆசிரியர் ஒப்பாதனவற்றையெல்லாம் மனங் கொண்டவாறு புகுத்திப் பொருள் காண்பது சித்தாந்த சிவயோக சாதனையுணர்வு இல்லாத வருடைய மயக்கவுரையாகும்; விரிக்கிற் பெருகும்.

(கருத்து): மனம் மாசற்று இறந்த நிலை உயி ருக்கு ஞானத்துக்குரிய நிலை என்னும் சிவநிலை யாகும் (என்றவாறு).

## 26. (நாதானு சந்தானம்)

திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற. (17)

(கொண்டுகூட்டு): திருச்சிலம்போசை. ஒலி வழியே சென்று (நிருத்தன்) நேர்பட அங்கே நின்று நிருத்தனைக் கும்பிடு என்று உந்தீபற, உந்தீபற.

(இதன் பொருள்): (உன்னகத்துள் எழும் ஓசைகளிற்) சிறந்த சிலம்போசை வழித்தாக உனது கருத்தைச் செலுத்தி (அவ்வொலிக்குப் பிறப் பிடமாகிய) கூத்தப் பெருமானின் சமுகத்தை யடைந்து (அப்படியில்) நிலைத்து (அவ்வோசையில் ஒடுங்கி) நின்று (உன்னுள்) நடித்து நிற்கும் அப்

பெருமானின் (திருவடிஞானக்) காட்சியைக் கண்டு ஏத்தித் தொழுவாயாக; என்றறிந்து (அநுபவவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): சிலம்பு, ஒலியென்றும் ஒலிக்கும் ஓர் வகைக் காலணியென்றும் பொருள்படும். சிலம்பேோசை என்றதனுல் இங்கு காலணியைக் குறிக்கிறது. திரு (மேன்மையான) சிறப்புற்ற அல்லது மேன்மையைத் தரத்தக்க என்ற பொருளில் நின்றது.

அண்டங்கள் ஏழினுக்கும் அப்பாலமரும் சத்தி சிவத்தின் உச்சிக்கு மேலாக பரமசிவனின் நடன சபாபதி மூர்த்தமாய்க் கருணைத்திருவுருக் கொண்டு எழுந்தருளி அங்கு உமைகாணக் கூத்துகந்து நின்ருடல் புரிதலால் அவனது திருநடனம் பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்விக்கின்றனவென்றும் நடிகையரின் முக்கிய அலங்காரங்களிலொன்ருகிய காற்சிலம்பை அக்கூத்தப்பிரானும் அணிந்து நடித்தலால் அத்திருச்சிலம்பினின்றும் எழுந்து பிரமாண்டத்தூடே படர்ந்து நிற்கும் சூக்குமநாதவொலி பல வித ஒலி வடிவில் சிவஞானயோகியை உணரவைக்குமென்றும் மெய்யுணர்ந்தோர் உபசரித்துக் கூறுதல் மரபு.

ஒலி அகம், புறம் என இருவகைப்படும். வாக்கும் அதனின்று பிறக்கும் பேச்சும் அகத்தொலி. இடிமுழக்கம் போன்றது புறத்தொலி. வடமொழியில் அகத்தொலியை வாக்கென்றும் புறத்தொலியை

தொனியென்றும் இரண்டையும் பொதுப்பட நாதம் என்றுங் கூறுவர். ஆனால் நாதம் என்ற வடமொழிச் சொல்லுக்கு பல பொருளுண்டாகலான் நாதவொலி வேறு, சிவதத்துவாதிட்டான மூர்த்தியாகிய நாத(ப்பிரம)ம் வேறென இடம் நோக்கிப் பொருள் காணவேண்டும். அகத்தொலியாகிய வாக்கு, சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி எனத் தனித் தனி நான்கு வகையாய்க் குடிலை சத்தி (அல்லது மாமாயை, சுத்த மாயை)யினின்றும் பரசிவனருளால் தோன்றிய (சிவதத்துவாசிரய) நாதத்தினிடமாக விளைந்த(சத்திதத்துவாசிரய) விந்துவினின்றுந் தோன்றியவையாகும். இவற்றுள் கடையாய வைகரி வாக்கும், சூக்குமம் தூலமெனப் பிரிந்து வாக்கு ஐந்தெனவுங் கூறுவர் தத்துவமுணர்ந்தோர்.

புறத்தொலியாகிய தொனி அசுத்த (அல்லது அதோ) மாயையின் காரியமாகிய ஆகாயத்தின் குணமாயமைந்த ஓசையைக் குறிக்கும். இப்புறத் தொலியை ஆகாயத்தின் அம்சம் பொருந்திய புறக் கருவியாகிய செவியின் உதவிகொண்டு ஐயறிவுடைய சகல சீவர்களும் அறிகின்றன, மகனும் அறிகின்றான். ஆதலால் வாக்கு தொனி என்ற வடமொழிச் சொற்களுக்கு தமிழில் பொதுப்பட ஒலி, ஓசை யென்று பொருள் காணல் மயக்கவுணர்வுக்கு இடந்தருமாதலால் வாக்கை அகத்தொலியென்றும், தொனி (சப்தம்)யைப் புறத்தொலியென்றும் பகுத்துக் காணவேண்டியது அவசியமாகும்.

அகத்தொலியாகிய ஐந்து வாக்குகளும் மக னுடைய மூலம், உந்தி, இதயம், மிடறு, உள்நா என்ற விடங்களில் முறையே நின்று அநேக ஞான சத்திகளை (ஞான ஏதுக்களை)யடக்கிக் கொண்டு வர்ணங்களென்னும் அட்சர வொலிகட்கெல்லாம் காரணமாய் நிற்கின்றன. முதன் மூன்றிடங்களி லும் இவ்வகத்தொலி மகனுடைய கருவியுணர்வுக்கு எட்டாமல் மானதக் காட்சியாகவே முடியும். அப்பால் கண்டம், உண்ணுதானங்களில் வைகரி வாக்காகப் பரவும்போது உட்புற வாக்குடன் வெளிப்புற தொனிதத்துவமுங் கூடிக் கலந்து வசனிக்கும் மகனுடைய செவிப் புலனுக்கும் மற்றையோருடைய செவியுணர்வுக்கும் விளங்கும் படி பரிணமிக்கிறது. இவ்வாறு அகவொலியும், புறத் தொனியுங் கலக்கவில்லையெனில் வசனிப்பவ னுடைய பேச்சை அவனே கேட்க முடியாமற் கழியும். ஆகையாற்றான் பிறவியிலேயே செவிப்புல னற்ற ஓர் சிசு தன்னமுகுரலைத் தானே செவிமடுக்க வியலாமல் வாக்கும் பேச்சும் வளராமல் மூகை யாய்ப் போகிறது.

இவ்வாறு அகத்தொலி புறத்தொலிகளின் வேறுபாட்டை யுணர்வதுடன் அகத் தொலியும் பொது சிறப்பென இருவகைப்படு மென்பதையும் அறிய வேண்டும். மகாசகலமென்னும் மத்தியா லவத்தையில் சகல மக்கட்கும் அநுபவமாகும் வாக்கு தூலவைகரியாலேற்படும் பேச்சென்னும் பொது அகத்தொலி. மேலாலவத்தையை யடைந்த துரிய சிவஞான யோகிக்கு அநுபவமாகும் திருச்சிலம்

போசை (முதலிய தசவித நாதம்) சிறப்பு அகத் தொலியாகும். இவ்வுலகில் வாழும் எண்ணிறந்த சீவர்களில் மகனுக்கு மட்டும் வாய்த்துள்ள சிறந்த சாதனங்களில் பேச்சும் ஒன்றுகும். பேச்சைக் கொண்டுதான் மகனுக்குக் கல்வி, கேள்வி, கலைகளினுலமையும் விரிந்த அறிவு உண்டாகிறது. பேச்சென்னும் பொது அகத்தொலியைக் கொண்டு மகனடையக் கிடப்பது அபரஞானமென்னும் கேள்வி (ஆராய்ச்சி) அறிவு. சிறப்பு அகத்தொலி யாகிய திருச்சிலம்போசையை யுணர்ந்து அநுசந்தா னஞ் செய்து ஒடுங்கும் ஞானயோகி அடையக்கிடப் பது பரஞானமென்னும் சிவானுபூதிப்பேறு. இக் கருத்துப்பற்றியே திருச்சிலம்போசை வழியே செல்லும் சிவயோகி சிவசானித்தியம் பெறுவா னென்ருர் ஆசிரியர். அவர் இங்கு திருச்சிலம் போசையென்று குறிப்பிட்டுச் சொன்னது பொது அகத்தொலியாகிய அட்சரவொலியை நீக்கி சிறப் பான அதிசூக்கும அகத்தொலியைச் சுட்டிக் காண வென்றே. சிலம்பு விந்துவுக்கும் அதன் ஒலி உள் நாத ஒலிக்கும் அறிகுறி எனலாம். "இலங்கும் விந்துப் பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப் - பான்மையினுல் ஒரு நாதம் படருந்தானே" என்ற சிவப்பிரகாசத் திருமொழியை ஒப்புநோக்குக.

இத்திருச்சிலம்பொலி சிவயோகியின் உணர் வுக்குமட்டும் எட்டுமென்றும் யோகியின் பக்குவத் துக்கு ஏற்றவாறு அது பத்துவகைப்படுமென்றும் அநுபவிகள் போதித்துள்ளார்கள். அவையாவன: "மணிகடல் யானைவார்குழல் மேகம் - அணிவண்டு

தும்பிவளை பேரிகையாழ் – தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும் – பணிந்தவர்க்கன்றி பார்க்க வொண்ணாதே'' என்று திருமூலர் நாயனார் கூறி யிருப்பதைக் காண்க. மனவாக்கிறந்த நிலையில் நின்றாடும் சோபாதிகவடிவ சிவபிரான் ''மூலநாடிக் குள் தரித்தாடல் செய்கிறான்''; ''மூலச்சுழுனை யுள் ளாடி முடிவில்லா ஞானத்துள்ளாடி முடித்தான்''; என்றும் தாண்டவக் கூத்துகந்த சிவபிரானது பூமிகள் மேரு, இமயம், இலங்கை, பொதிகை, தில்லை, இடை, பிங்கலை, சுழுனை, மூலம் என்றும் திருமூலர் பிரான் விளக்கிக் கூறியுள்ளதையுங் காண்க.

உடலில் உயிர் தங்கியிருக்க வேண்டுமெனின் பிராணசத்திக் குறைவின்றி உடல் முழுவதும் பரவித் தோய்ந்து வரவேண்டும். கருணாமூர்த்தி யாகிய முதல்வன் இதயத்திலெழும் பிராணசத்தி கரசரணாதிகளுடன் கலக்கும்வண்ணம் இவ்வாறு உயிரகத்துள் கூத்துகந்து நிற்கின்றான், என்னே! உயிர்களின் பொருட்டு தாமாகவே ஏற்றுக்கொண்ட இடையறு அருட்செயல்!!

பலவகையொலி சிவயோகியின் உள்ளிலெழும் என்றவுண்மையை உணர்த்தவேண்டி ஓசை, ஒலி யென்று அடுக்கிக் கூறினார் ஆசிரியர். மேலே 25 (36)-வது செய்யுளில் சிவயோகியின் பாசப் பற்றற்ற நிலையையுணர்த்தினாராகையால் அவ்வித யோகியை முன்னிட்டுக்கொண்டு திருச்சிலம் போசை ஒலிவழியே சென்று முதல்வனின் சந்நிதி

யில் நிலைத்து ஒடுங்கி நின்று வழிபடு (கும்பிடு)வா யாக என்று போதித்தார்.

வேதாந்தத்தின் தெளிவாஞ் சைவசித்தாந்தத் தின்படி பக்தியிற் சிறந்தோராகிய சிவயோகியும் ஞானியும் முதல்வனைப் பதிஞானக்கண் கொண்டு கண்டு வழிபட்டேத்துதல் முத்திநிலையில் திரிபுடி யற்ற சாயுச்ச நிலைக்கு அந்தரங்கசாதனமாயுள்ள துரிய படியாகும். இவ்வுண்மையை, "எண்தோள் வீசிநின்றுடும் பிரான்றன்னைக் கண்காள் காண்மின் களோ"; "தேடிக்கண்டு கொண்டேன் திருமாலோடு நான்முகனுந் – தேடித் தேடொணுத் தேவனை என்னுளே – தேடிக் கண்டு கொண்டேன்"; "கண்ணால் யானுங் கண்டேன் காண்க"; "ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியும் – தேடியுங்கண்டேன் சிவன் பெருந்தன்மையை"; "அழிந்தங் கினிவரும் ஆக்கமும் வேண்டேன் – செழுஞ்சார்புடைய சிவனைக் கண்டேனே"; "அருட்கண்ணுளோர்க் கெதிர் தோன்றும் அரனே";"வெறுப்பிருள்" நீங்கில் விகிர்தனும் நிற்கும்"; "ஊனகண்ணுக் கொளியா தொளித்து – ஞானக்கண்ணின் வெளிப்படுநாதன்"; "சித்தர் சிவத்தைக் கண்டவர்"; அண்ணலைக் காணில் அவனிவனுமே"; என்று தங்களுடைய மெய்யனுபவத்தை மறைக்காமல் சாதகர்களின் பொருட்டு எடுத்தோதியுள்ள மெய்ஞ்ஞானிகளின் திருவாக்குகளிலிருந்து தெளிவு பெறலாம். "பாசம் ஒருவத் தண்நிழலாம்பதி" என்ற சிவஞானபோதம் 10வது சூத்திரப்பகுதியையும் காண்க.

கண்ணானது சூரியவொளியுடன் கலந்து அவ்வொளியைக் கண்டபோது தன்னொளியையும் அவ்வொளிமயமாய்க் காண்டல்போல் சிவஞானக் கண்கொண்டு தற்பரக் காட்சியுறும் உயிரும் தன்னையும் அக்காட்சி வடிவேயாய்க் காணும் என்பது போதரும். ஆகையாற்றான் திருவடிக் காட்சியுறும் ஞானத்துரியநிலையே உயிர் தன்னையும் உள்ளவாறுணரும் நிலையாகுமென மெய்யுணர்ந்தோர் கூறியுள்ளார். "தன்னை யறியாதுடலை முன் தானென்ருன் – தன்னை முன்கண்டான் துரியந் தனைக் கண்டான்" என்றும், "உன்னையறியாதுடலைமுன் நானென்ருய் – உன்னை யறிந்து துரியத்துற நின்ருய்" என்றும் கூறிய திருமூலர்பிரானின் ஆகம மொழியையோர்க.

மேலும் ஆதிசங்கரர் இயற்றியுள்ள "யோகசாராவளி"யில் "சித்தலய சாதனங்களெல்லாவற்றினும் நாதானுசந்தான சமாதியொன்றையே மேலானதாக யான் மதிக்கிறேன்" என்று பொருள்படக் கூறியிருப்பதை இவண் நோக்கற்பாலது.

நேர்பட நேர்மை பொருந்த என்று பொருள்படுவதோடு எதிர்ப்பட, சந்திக்க, சமூகங்காணவென்றும் பொருள்படும். படவே துரியநிலைத்தியான யோகியை முன்னிட்டுக்கொண்டு சூக்குமமாய் அவனது சந்நிதியில் நின்று திருவடியிலொடுங்கி அவனையேத்தித் தொழு என்ருரென்க. நிருத்தன் என்ற சொல்லை நேர்பட என்ற சொல்லுக்கு முன்னும் இரட்டுறமொழிந்து கூட்டிப்

பொருள் காண வேண்டும். சார்புணர்தல் தானே தியானமாம் – சார்புகெடவொழுகின் நல்ல சமாதி யுமாம்'' என்றும்; ''அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே – நின்றபடியே நிற்க முன் நிற்கும்'' என்றும் திருக்களிற்றுப்படியாரில் துரியஞானத் தியானத்தின் இலக்கணத்தையும், அதன் பயனாகிய சுவானுபவத் திருவடிக் காட்சியையுங்கூறியிருத்தல் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

இவ்வாறன்றி நேர்பட அங்கே நின்று என்ற தற்கு மயக்க விகற்பமென்ற கள்ளர் வழியில் தட்டுப் படாமல் செவ்வை வழியே சென்று என்று பொருள் காணல் பொருந்தாது. ஏனெனில் மேலைச் செய்யுளிற் குறிப்பிட்டபடி சிவனைத் தரிசிக்கும் சிவயோகியை முன்னிட்டு இவ்வுபதேசச் செய் யுளைக் கூறினாராதலால் அந்நிலையெய்திய சிவதுரிய ஞானயோகிக்கு மயக்க விகற்பங்கள் தோன்றுமென கொள்ளல் பொருந்தாது.

(கருத்து): துரிய ஞானயோகி நாதானு சந்தான (சமாதி) வழியாக முதல்வனது திருவடி ஞான நடனக் காட்சியைப் பெறுவன் (என்றவாறு).

27. (பஞ்சாக்கரத் தியானம்)

அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சாது உணர்ந்து இருந்து உந்தீபற
துய்ய பொருள் ஈதுஎன்று உந்தீபற. (10)

(கொண்டுகூட்டு): ஈது துய்யபொருள் என்று (உணர்ந்து) அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத் துஞ்சாது உணர்ந்திருந்து உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (மேலைச் செய்யுளிற் குறிப் பிட்ட நிருத்தனாகிய) முதல்வன் (இயல்பாகவே தூயவுடம்பினன் ஆதலால் துய்யரில் துய்யனாகிய) பரிசுத்த பதியெனத் தெளிந்து ஐந்து பொருள் களாகிய உனது அந்தக் கரணங்களும் உயிரும் பஞ்சாக்கரத் திருமேனிகொண்ட முதல்வனை முழு வதும் பற்றிநின்று, உனது (உயிரின் வடிவாகிய) அறிவு முதல்வனின் (சொரூபமாகிய) முற்றறிவுடன் இணைந்து ஒன்றுபட (இரசதம குணங்களை நீக்கி) உறக்கத்தை நீத்து (சத்துவ குணத்தோடு) முதல் வனை உள்ளவாறு உணர்ந்து (அவனது திருவடியில்) நிலைப்பாயாக; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): 'உணர்ந்திருந்து' என்ற எச்சத்தை 'உணர்ந்திரு' என்று முற்றாகக் கொண்டு ரைக்க வேண்டும். அல்லது உணர்ந்திருந்து உந்தீபற என்று கூட்டி, இருந்து என்பதற்கு இருப் பதற்காக என்று ஏதுப்பொருளைக் கண்டு உரை செய்தலும் ஒருவகை. எதை உணர்ந்திருக்க வேண்டும் என்ற வினாவிற்கு ஈது என்றார். ஈது என்றது மேலைச் செய்யுளிற் கூறிய கூத்தபிரானைக் குறித்தது. அம்முதல்வனுடைய மூன்று இலக் கணங்களை இங்குக் குறிப்பிட்டார். அவையாவன:

துய்யபொருள் என்று அவன் தூயவுடம்பினன் என்ருர். அஞ்சாக என்று அவன் முத்தி பஞ்சாக்கர சோபாதிக திருமேனியுடையான் என்ருர். 'அறிவாக' என்று அவன் நிருபாதிக அறிவு சொரூபன் என்ருர். சோபாதிக பஞ்சாக்கர வடிவ தியானத்தின் மூலமாய் நிருபாதிக முற்றறிவு வடிவில் அழுந்தி அவனை முழுவதுமாய் உணர்தல் வேண்டும் என்ற படிக்கிரமத்தையுங் கூருமற் கூறினுர்.

'அஞ்சே' என்றதிலுள்ள ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. 'ஐந்து' 'அஞ்சு' என மருவிற்று. 'ஐந்து' என்றது நான்கு அந்தக்கரணங்களையும், உயிரையும். மேலே நாலாய பூதமும் நாதமும் என்றதும் (ஆகுபெயரால்) இவற்றையே. இவ்வாறன்றி 'ஐந்து' என்றதற்கு 'பஞ்சேந்திரியங்கள்' எனல் அறியாமை. ஏனெனில் முத்திபஞ்சாக்கரத் திருமேனித் தியானம் இந்திரியங்களை ஒருவிய பின்னர்தான் அமையும் ஆதலால் என்க. அடுத்து நின்ற ஐந்து, முத்தி பஞ்சாக்கர உருவினனுய முதல்வனைக் குறித்தது. இங்கு ஐந்து என்றதற்கு தூலசூக்கும பஞ்சாக்கரங்களைக் கொள்ளல் பொருந்தாது. ஏனெனில் முதல்வனுக்கு தியானவுரு முத்தி பஞ்சாக்கர சோபாதிகவுருவமல்லாது வேருென்றல்ல ஆகலான் என்க.

மேலும் அகர, உகர, மகரங்களும் விந்து நாதங்களும் கூடிய பஞ்சகலைகளும் அந்தக்கரணங்களையும் உயிரையும் தொழிற்படுத்துகின்றன. இவ்வைந்து அக்கரங்களின் சாமியம், ஓங்காரப் பிரணவ

அட்சரம். இவ்வக்கரங்கள் சடமாதலால் அவற்றை அதிட்டித்து நின்று தொழிற்படுத்துவது உருத்திரன் முதலிய பஞ்ச மூர்த்திகளாவர். இவர்கட்கு நிமித்த காரணன் ஓங்காரப் பிரவண வடிவனாகிய முதல்வனே. "ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே" என்றும், "ஓங்கார சீவபர சிவரூபமே" என்றும், "உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம் - உய்யவல் லாரறிவுள்ளறிவாமே" என்றும், "உள்ளத்து ளோமென ஈசன் ஒருவனை - உள்ளத்துளே யங்கியாய வொருவனை" என்றும், போதித்த திருமந்திர வாக்கையுணர்க. இவற்றை சிவஞான போதம் 4ஆம் சூத்திரத்தில் 1வது அதிகரணத்துள்ள "அகார உகார மகாரம் புத்தி" என்ற வெண்பாவாலும் "எண்ணில ஓங்காரத்தீசர் சதாசிவம்" என்ற வெண்பாவாலும் அறிக. அன்றியும் முதல்வன் முத்தி பஞ்சாக்கர சோபாதிக மூர்த்தி என்றும், பாசம் நீங்கிய விடத்தும் பாசப்பற்று என்னும் வாசனை நீங்குவதற்காக பஞ்சாக்கர மூர்த்தியை அகத்தே உந்தி, இதயம், புருவநடு என்ற தானங்களில் முறையே பஞ்சாக்கரத்தாலே அர்ச்சித்து, ஓமித்து, தியானிக்கவேண்டும்என்று 9ஆம் சூத்திரம் 3 வது அதிகரணத்துள்ள "அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை" என்ற வெண்பாவாலும்

"மந்திர மதனிற் பஞ்ச மந்திர வடிவமாகத்
தந்திரஞ் சொன்னவாறிங் கென்னெனிற்
சாற்றக் கேணீ
முந்திய தோற்றத்தாலும் மந்திர மூலத்தாலும்
அந்தமில் சத்தியாதிக் கிசைத்தலு மாகுமன்றே"

என்ற சிவஞான சித்தியாரின் போதனையாலும் அறியக் கிடக்கின்றது. ஆதலால் பிரணவ பஞ்சாக்கரங்களின் மூலமாய்த் தொழிற்படும் உயிருக்கும் அந்தக் கரணங்கட்கும் முத்தி பஞ்சாக்கர மூர்த்தியாகிய முதல்வனுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதால் இதனை ஞானகுரு உபதேச வாயிலாய் அறிந்து பாசத்தைவிட்டு நீங்கி முதல்வனுடைய திருவடியைப் பற்றி அழுந்தி நிற்க வேண்டும் என்பார் அஞ்சே அஞ்சாக என்றார்.

சித்தாந்தன்மையில் உயிரும் முதல்வனும் ஓரினமாதலால் பாசப்பற்றற்ற உயிரின் போதம் (அறிவு) வியாபகமடைந்து முதல்வனின் முற்றறிவுடன் ஒன்றுபடப் பொருத்தமுண்டு. அதாவது பாசத்தை ஒருவியவிடத்துத் தோன்றும் பசுவறிவும் பதியையடைய எழும் பதியறிவும் ஒன்றுபட இயைபுண்டு. இதற்குத் தடையாயிருந்தது முதல்வனுக்குத் தான் அடிமையாந் தன்மையை அறியாதிருந்ததே. இவ்வறியாமையும் சிவகுரு உபதேசத்தினாலும் திரிபுடிக் காட்சியினாலும் அஞ்சே அஞ்சாகக் கூடி நின்றவிடத்து நீங்கிவிட்டது. ஆதலால் ஆண்டான் அடிமை சம்பந்தத்தில் அறிவே அறிவாகக் கூடிநிற்றல் சாத்தியம் என்பார் அறிவே அறிவாக என்று அடுத்துக் கூறி முடித்தார். பரிசுத்த ஆன்ம அறிவின் விருத்திகொண்டு இவ்வாறு முதல்வனோடு ஒன்றுபட்டு நிற்கும் உயிர் மற்றிரண்டு குணங்களும் நீங்கி சுத்தசத்துவ குணமே மிஞ்சி நிற்க வேண்டுமாதலால் துஞ்சாது உணர்ந்திருத்தல் வேண்டும் என்றார். இங்கு துஞ்சுதல்

தாமத குணத்தின் காரியமாகிய உறக்கத்தைக் குறித்து நின்றது. இது பூரண சத்துவ நிலையாயிற்று.

உணர்ந்து என்பதை 'ஈது துய்யபொருள் என்று' என்பதனோடு கூட்டிப் பொருள் காணவேண்டும். ஏனெனில் முதல்வன் உலகுக்குத் துய்ய பதியாவான் என்ற உணர்வு ஏற்பட்டாலொழிய அவனை யறிந்து ஒன்றுபட வேண்டுமென்ற தேட்டம் ஏற்படாது ஆதலால் என்க. உணர்தல் துரிய நிலையில் நின்று தெளிவுக் காட்சியுறுதல்.

(கருத்து): பாசப் பற்றறுத்து முத்தி பஞ்சாக்கர முதல்வனை நின்மலனாகவுணர்ந்து அவனது சேவடியைப்பற்றி முத்தி பஞ்சாக்கரத் தியானஞ் செய்து ஒன்று கூடி நிற்பாயாக (என்றவாறு).

28. (துரியாதீத சிவமுத்தி நிலை)

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டி
தேட்டற்ற இடஞ்சிவம் உந்தீபற
தேடும் இடம் அது அன்று உந்தீபற. (13)

(கொண்டுகூட்டு): உணர்வு பதிமுட்டி ஓட்டற்று நின்று தேட்டற்ற இடம் சிவம். தேடுமிடம் அது அன்று என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (உயிரின்) தெளிந்த அறிவு (பசுபாசங்கள் அணுகாத பிரபஞ்சத் தலைவனாகிய) பதியின் திருவடியில் அழுந்தி தற்பரக் காட்சியுற்று

(பசுமரத்தாணிபோல்) சலனமற்று (நாடியபொருளை அடைய எழுந்த) அறிவின் விருத்தி முற்றிலும் அடங்கிய நிலை (உயிருக்குச்) சிவமுத்தி நிலையாகும். (ஆதலால்) அதற்குமேல் மற்றொரு நிலையுண்டு கொலோ எனத் தேட்டம் எழும் நிலை அது அல்ல. (அதாவது அச்சிவ முத்தி நிலையில் பிறிதொரு நிலையைப் பற்றிய விருத்தி எழாது என்றவாறு), என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): உணர்வு, கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த அறிவின் விருத்தி. பஞ்ச கிருத்தியங்களைச் செய்விக்கும் சிவபிரானின் நிலையே பதிநிலை எனப்படும். அவனே உலகுக்குத் தலையாய் நாயகனாய் இருந்தாற்றுகின்றான். துரியங்கடந்து சிவசமாதி (நிட்டை)யுற்ற அந்தக்கரணப் பற்று முழுதும் அற்று உயிரானது தனித்து திருவடியில் அழுந்தி நிற்கும் நிலையில் முதல்வனுடன் இரண்டறக் கலந்து தன்னை இழந்து நிற்கின்றது. இந்நிலையைத்தான் உணர்வுபதி முட்டி ஒட்டற்று நின்று தேட்டற்ற இடம் என்றார் ஆசிரியர். இங்கு இடம் என்றது நிலையை. இப்பொருள் பற்றியே, "தலமொரு நான்குந் தந்தெனக்கருளி" என்றார் ஔவைப்பிராட்டியார். சிவம் என்றது சிவநிலையை; ஏனெனில் சிவமும் அவனது நிலையும் வெவ்வேறாகாமல் ஒன்றாய் நிற்பதால் என்க. முட்டுதல் என்றது கண்டுபற்றுதல் என்ற பொருளில் நின்றது.

மேலே 25-வது (36) செய்யுளில் சிவதுரிய ஞான நிலையைக் கூறி இங்கு அதற்கு மேலான

துரியாதீத நிலையைப் போதிக்கின்றார். அங்கு விடயத்தை விட்டு நீங்கிய அந்தக்கரண அறிவும் மலமடங்கிய சீவ அறிவு (போதமு)ங்கூடி ஒன்றுபட்டு சீவனின் உண்மையியல்பையும் முதல்வனுடைய அருளையும் சுவானுபவத்தில் அறிந்து முதல்வனை ஆண்டானாயும் தன்னை அடிமையாயும் அறியும் தற்பரக் காட்சியுறும் நிலையையுணர்த்தினார். இங்கு துரியங் கடந்த அதீத நிலையில் மனமிறந்து பற்றற்று நிற்கும் உயிர் தனித்து திருவடியில் அழுந்தியிருக்கும். கடைசி வரையில் சீவனை விடாது நிழல்போல் பற்றி நின்ற அந்தக்கரண அறிவும் இந்நிலையில் விடுபடுமாதலால் வீடு என்னும் முத்தி நிலை இதுவேயாகும். அப்பால் சுத்தவெளியில் சிவானந்த நிட்டையில் ஆழ்ந்து இரண்டறக் கலந்து உயிர் அடைவது சிவப்பேறு என்னும் சிவானந்தமாகும். ஆனால் அதீத நிலை, சுத்த நிலை எனப் பிரித்துக் கூறிடினும் இரண்டின் வரம்பு உணர்தற்கரியதாய் திருவருளால் அதீத நிலையே சுத்த நிலையாகப் பரிணமிக்கின்றது என்னலாம். ஆதலால் முத்திப் பேறும் சிவானந்தப் பேறும் மணியோசையும் யானையும் போல் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து சித்தியாவனவாகும்.

உடல் உலகங்களையும் தன்னையும் பற்றியெழும் சித்த விருத்திகள் ஒய்ந்து முதல்வனுடைய திருவடியைக் கண்டு பற்றி அதில் அழுந்தி மனமிறந்து தற்பரப்பதியின் ஞானக் காட்சியையும் பெற்ற உயிரின் போதத்தில் (அறிவில்) மேலொரு விருத்தி எழுதற்கும் மேலும் நாடுதற்குரிய நிலை உண்டுகொலோ

என்ற விருத்தி எழுதற்கும் இயைபில்லை. ஆகலான் இந்நிலையை தேட்டற்ற நிலையென்றும் தேடும் இடம் அதன்று என்றும் கூறி முடித்தார். "வாக்கும் மனமும் இல்லா மனோலயம்" என்று ஔவைப் பிராட்டியார் குறிப்பிட்ட நிலையும் இதுவேதான். "சிவ கதியே கதி மற்றுள்ளவெல்லாம் பவ கதி" என்றார் திருமூலநாதரும்.

இச்சிவ கதி அதீத நிலையில் சிவ நிட்டையி லாழ்ந்து அடைய வேண்டிய அநுபூதி ஞானத்தா லன்றி அடையக்கூடாது என்று தாயுமானர் கூறியுள்ளதை யோர்க:-

"மூலப் பிராண னோடங்கியைச்
சோமவட்டத் தடைத்தும்
சொல்லரிய வமுதுண்டு மற்பவுடல்
கற்பங்கடோறு நிலைநிற்கவிறு
சித்திசெய்தும் ஞானமலது கதிகூடுமோ
சித்தாந்த முத்திமுதலே".

இங்கு எடுத்துக்காட்டிய சித்திகள் துரிய ஞான நிலையிலுள்ள சிவயோகிகளினால் அடையக்கூடியன வாகும். ஆனால் துரியங்கடந்த அதீதத்தில்தான் திரிபுடியற்ற அத்துவித அநுபூதி ஞானம் சித்தி யாகும். இங்கு ஞானம் என்றது சாதன ஞானத்தைக் குறிக்காது. அநுபூதி ஞானத்தையே குறிக்கும். ஏனெனில் பரகதி அநுபூதி ஞானத்தினால்தான் சித்தியாகும்.

"உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந்தானே" என்று
கூறிய திருமந்திரப் பொருளையும் அறிக.

(கருத்து): முதல்வனுடைய திருவடியில் அழுந்தி நின்று விருத்திகள் ஒடுங்கி தேட்டற்று நிற்கும் அதீத நிலை உயிருக்கு சிவ முத்தி நிலையாகும் (என்றவாறு).

29. (இதுவுமது)

சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக்கு என்று உந்தீபற
என்றால் நாம் என்செய்கோம் உந்தீபற. (29)

(கொண்டுகூட்டு): சொல்லப் புகுமிடம் சொல்லுமிடம் அன்று எல்லை சிவனுக்கு என்றால் நாம் என்செய்கோம் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (சற்சீடனும் மகனொருவன் சொல்கவென்று பணிந்து கேட்க அதற்கிசைந்த ஞானகுருவான நிறைந்த அறிவுடை ஒருவர் (சொல்லாமற்) சொல்லியுணர்த்தக் கண்டு (அகமுகமாய்ச்) சென்று அடையும் அதீதமுத்தி நிலையானது சொல்லால் விளக்கி உணர்த்தக்கூடிய நிலையாகாது. ஏனெனில், அந்நிலை (மனவாக்கிறந்த) சிவபிரானின் நிலையாகுமென்று கண்டோமாகில் (நமது வாக்கின் குறைக்கு) நாம் என்ன செய்யக்கடவது (பரிகாரமின்று என்றவாறு) என்றறிந்து (அனுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப் பெழுப்பு.

(விளக்கம்): இங்கு சொற்கடந்த இடம் சிவனுக்கு எல்லை என்றார். இதுபோல் 21வது (8) செய்யுளில் மீதானம் விமலர்க்கு இடம் என்றும் 26வது (13) செய்யுளில் தேட்டற்ற இடம் சிவம் என்றுங் கூறியுள்ளார். இம்மூவிடத்துங் குறிப்பிட்ட நிலை ஒன்றேதான் ஆயினும் இது கூறியது கூறல் என்னுங் குற்றத்துள்படாது. ஏனெனில், முதலில், ஆதாரம், நிராதாரம், மீதானம் என்ற நிலைகளைச் சொல்லி அவற்றுள் மீதானம் சிவநிலை எனப் பெய ரளவிற் கூறினார். பின்னர் சித்த சலனம் அற்று சேவடியை ஒரு முகமாய்ப் பற்றி நின்றால் தேட் டற்ற சிவதுரியததீத முத்தி நிலையை அடையலாம் என்று உபாயங் கூறினார். இங்கு அந்நிலை ஞான குருவுணர்த்தத் தன்னில்தானே உணரவேண்டிய நிலை என்றும், வாக்கிறந்தது என்றும், அதன் இலக் கணங் கூறினார் ஆதலால் என்க.

சிவமுத்திநிலை மகனின் முயற்சி கொண்டடை யும் ஆராய்ச்சி ஞானத்தால் அடையக்கூடியதன்று. பிரத்தியட்ச சுவானுபவ சிவஞானங் கொண்டு அடையக் கூடியதாகும் என்று சிவாகமங்களும் சிவ ஞானிகளுங் கூறியுள்ளார்கள். ஆதலால் அவ்வனு பூதிஞானம் நிறையப் பெற்ற ஒரு சிவகுருநாதரின் கடாட்சத்தால் மெய்ந்நிலையைப் புகட்ட உணர்ந்து சிந்தித்து அவருணர்த்திய சிவயோக சாதன உண்முகநாட்டங்கொண்டு சாதித்து அடையவேண் டிய நிலையாகும். ஆதலால் சொல்லப் புகுமிடம் (சொல்ல + புகும் + இடம்) என்றதற்குத் தக்கோர் உணர்த்த உரியவர் கேட்டுணர்ந்து தன்னகத்தே

புக்குத் தேறியடையும் நிலை என்று பொருளுரைக் கப்பட்டது.

இவ்வாறன்றி, ஒருவர் விளக்கிக் கூறத் தொடங்கும் (அல்லது முயற்சிக்கும்) நிலை எனப் பொருள் கொள்ளல் இழுக்காகும். ஏனெனில், புறச் சமயத்தார் முடிந்த மெய்ந்நிலையைக் குறித்து தத்தம் மனங்கொண்டபடி விவரித்துள்ளார்கள் எனினும் சித்தாந்த சிவஞானிகள் "கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்" என்ற அநுபவத் தைக் கூறியிருப்பதால் கண்டவர் சொல்லுதல் என்பது அநுபவவிதிக்கு மாற்றமாகும். காணுதார் தம்முனைப்பால் சொல்ல முயற்சித்தால் அறிவுடை யோர் அவருடைய கூற்றைக் கேட்க உடன்படார்.

மேலும், புகுதல் எனின் ஒடுங்கிய வழியாய் நுழைதல் அல்லது உட்செல்லல் எனப் பொருள் படுமாதலால் சொல்லப்புகும் என்றதற்குச் சொல் வதற்கு உள்நுழையும் என்ற அசம்பாவிதப்பொருள் சித்திக்கும் ஆதலால் இவ்வாறு பொருளுரைத்தல் பொருத்தமன்று.

சொல்லுமிடம் என்றதற்கு சொல்லப்படுமிடம் என்று பிறவினைப் பொருள் கொண்டது போல புகு மிடம் என்றதற்கும் பிறவினைப் பொருளில் புகப் படும் இடம் என்று கொள்ளலே பொருந்தும். சொல் வதற்கும் புகுவதற்கும் கருத்தா, மகன் என்பது தெளிவாதலால் புகுமிடம் சொல்லுமிடமன்று என்றதில் மகனுல் புகப்படும் இடம் அவனுல்

சொல்லப்படும் இடமன்று என்ற பொருளைக் காண வேண்டும். அஃதாவது, மகன் தன்னகத்துட் சென்று காணும் நிலை அவன் சொற்கொண்டு பிற ருக்கு விளக்கக் கூடிய நிலை அன்று என்றவாறு. "மழை பெய்யக் குளம் நிறைந்தது" என்றவிடத்து மழை பெய்து (பெய்தலினால்) குளம் நிறைந்தது என்று பொருள் கொண்டாற்போல சொல்லப்புகு மிடம் என்றவிடத்தும் பிறர் சொல்லி (சொல்லக் கேட்டு) ஒருவன் உட்சென்று காணுமிடம் என்று பொருள்கொள்ள வேண்டும். இது சிவநிலை யாத லால் பிறர் என்றது ஞானகுருவைக் குறிக்கும்; ஒருவன் என்றது சற்பாத்திரம் என்ற சற்சீடனைக் குறிக்கும்.

கண்டவர் விண்டிலர் எனின் ஒரு ஞானகுரு தம் சீடனுக்கு எவ்வாறு விள்ளுவார் எனின் கூறு தும். கல்லாலின் புடையமர்ந்து ஆதி சிவகுருநாத ராகிய தக்கணாமூர்த்தி அவருடைய மாணாக்கர் நால்வருக்கும் "வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய் எல்லாமாய் அல்லவுமாய்" நின்ற பராபரச் சிவபெருமானின் நிலையை "இருந்தபடி இருந்து காட்டி"ச் "சொல்லாமற் சொல்லி" அருளினார் என்றதுபோல் ஒரு சிவஞானகுரு என்பார் நந்தி தேவர் தக்கணாமூர்த்தி முதலாக வர்மையடி வாமை யாக சிவனாணையால் இவ்வுலகுக்குப் போந்து முதல் வனால் ஆவேசிக்கப்படுபவராவார். ஆதலால் அவரும் அவ்வாறே அருந்ததி காட்டுவார் போல் தூலத்தை முன்புகாட்டி சூக்குமத்தைப் பின் உணர வைப்பவராய்ச் சீடனுக்கு அச்சிவநிலையைச் சொல்

லாமற் சொல்லி உணர்த்துவாரென நுண்ணறிவால் அறியக் கிடக்கின்றது. அடியேனுக்கு ஞானகுரு வாய்த் தோன்றி ஆட்கொண்டருளிய திருமூல நாதரின் வழித்தோன்றிய மௌனகுருநாதரும் இருந்ததனை இருந்தபடி இருந்துகாட்டிச் சொல்லாமற் சொல்லி அடியேனுக்குத் துரிய சிவநிலையை உணர்த்தினார் என்ற தொடக்க அநுபவத்தைக் கொண்டும் கூறத்துணிந்தேன்.

இங்கு சொல்லுமிடம் அன்று என்றாற்போல் சிவஞானபோதத்தில் முதல்வனது இலக்கணங் கூறும் வேது சூத்திரத்தில் சிவனது நிலை வாக்கு மனாதீதகோசரம் என்றார். அங்கு வாக்கு, பாச ஞானத்தையும், மனம், பசுஞானத்தையும் ஆகு பெயரால் குறித்து நின்று பசுபாசஞானங்கட்கு எட்டாதவன் முதல்வன் எனப்பட்டது. ஆதலால் இங்கு சிவநிலை என்றதற்கு மன வாக்கிறந்த சிவ நிலை எனப்பட்டது. திருமூலநாதரின் குருபெரு மானாகிய நந்திபிரான் அவருக்கு "கதிவைத் தவாறும் மெய்க் காட்டியவாறும் விளம்பவொண் ணாதே" என்றும்; "உரையற்ற தொன்றை உரை செய்யுமூமர்காள் – கரையற்ற தொன்றைக் கரை காணலாகுமோ" என்றும், "கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த சொரூபத் திறத்தினன் சொல்லிறந்தோமே" என்றும் திருமந்திர ஆகமத் திற் கூறியுள்ளதைக் காண்க. மேலும், "உரை யுணர்விறந்து நின்(று) – உணர்வதோருணர்வே யானுன்னை உரைக்குமா றுணர்த்தே" என்றும், "சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க"

என்றும், சிவனடிச் செல்வர்கள் போற்றியுள்ளார்கள். அந்நிலையைச் சொல்லியுணர்த்த முடியாமைக்குக் காரணம் அது சிவநிலையாதலால் என்று உடன் கூறி முடித்தார். ஏனெனில், நூலின் தொடக்கத்திலேயே, "அகளமாய் யாரும் அறிவரிதப் பொருள்" என்று கூறியுள்ளாராதலால் அவன் வாக்கு மனாதீதன் என்றதிலிருந்து அவனுக்கு வேருகாத அவனது நிலையும் அவ்வாறேயாமென உய்த்துணர்ந்து கொள்ளட்டுமென்று விரித்துரையாது முடித்தார். நாமென் செய்கோம் என்று கூறி மகனுடைய சிற்றறிவின் கீழ்மையை வெளிப்படுத்தினர் என்க.

(கருத்து): அதீத சிவமுத்தி நிலையானது மெய்ஞானகுரு உபதேச வுதவியினல் அடைந்த ஞானக் கண்கொண்டு துரியங் கடந்து மனவாக்கிறந்த அதீத சிவநிட்டையினுல் தன்னில் உணரக் கூடிய நிலையாகும் (என்றவாறு).

30. (திருவடிபற்றிய துறவு)

எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண்
டேநின்றர்
விட்டார் உலகம் என்று உந்தீபற
வீடே வீடாகும் என்று உந்தீபற. (24)

(கொண்டுகூட்டு): எட்டுக் கொண்டார் தமைத் தொட்டுக்கொண்டே நின்ருர்; உலகம் விட்டார்; வீடே வீடாகும் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): எண்வகைக் குணங்களையுடைய (சிவபிரானாகிய) முதல்வனை (அவனுடைய திருவடியைப் பற்றி)ச் சார்ந்து நின்றவர் உலக விடய போகங்களையும் (உலகுக்கு ஆதாரமாகிய) தத்துவக்கூட்டங்களையும் கைவிட்டவராவார். இவ்வாறு உலகைக் கைவிடுதலே முத்தியாக விளையும் என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை உணர்வு, முற்றுணர்வு, இயல்பாகவே பாசங்களில் நீங்குதல், பேரருள், முடிவிலாற்றல், வரம்பிலின்பம் ஆகிய எண்குணங்களையுடையவன் சிவபிரான் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. திருக்குறளிலும் "எண்குணத்தான் தாள்" என்று முதல்வனுடைய திருவடியைக் குறிப்பிட்டுள்ளார். திருமூலநாதர் இயற்றிய திருமந்திரத்தில் கடவுள் வாழ்த்துப் பகுதியின் தொடக்கத்தில் சிவபிரானுடைய எண்குணங்களும் ஒவ்வொன்றாய்ப் பிரகாசிக்கின்ற அவனது எட்டுவித நிலைகளையும் அடக்கிக் கூறியுள்ள முதற் செய்யுட் பொருளைக் காண்க.

"ஒன்றவன்தானே இரண்டவன் இன்னருள்–
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து–
வென்றனன்ஆறு விரிந்தனன் எழும்பர்ச் – சென்
றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே".

சிவபிரானைத் தொடுதல் என்றது அவனது சேவடியைச் சார்தல் என்ற பொருள் கொண்டது.

முதல்வனுடைய மலரடி என்பது அவனது அருண் மயமான சிற்சத்தி – அதனைத் திருவடியாகக் கூறுவது வேதாகமங்களின் மரபும் மெய்யுணர்ந்தோரின் துணிபுமாகும். அவனருளைக்கொண்டல்லது அவனை அறிதலும் அவனுடன் கூடலும் கூடாவாகலான் அருளை நாடி அடைவார் சேவடியைச் சார்ந்து நிற்பவராவார். அதனால் அன்னுரை "எட்டுக் கொண்டார்தமைத் தொட்டுக் கொண்டே நின்றவர்" என்றார். இக்கருத்துப் பற்றியே "அடியெனு மதுவும் அருளெனு மதுவும் அறிந்திடில் நிற்குண நிறைவு" என்றார் தாயுமானாரும்.

"என்னையே நினைந்தெழவுன் மனத்தினையென்
னிடையேவை
என்னையே நினைந்திருநீ மற்றெனக்கே
பூசனைசெய்
என்னையே குருவாகக்கொள் எப்போதும்
இதுசெய்யில்
என்னையே வந்தடைதி இதுமெய்யே இது
மெய்யே"

என்ற கீதையுபதேசத்தையும் நோக்குக.

முதல்வனுடைய திருவடியைப்பற்றி நிற்றல் ஞானத்துரிய நிலையாகும். மெய்ந்நூலுணர்வாலும், மேலோரின் கேள்வி உணர்வாலும் அபரஞானமென்னும் முயற்சிஞானங் கிட்டும். அப்பால் சரியை முதலிய ஞானப்படிகளில் பழகித்தேர்ந்து மெய்க் குருவையடைந்து சிவயோக சாதனையை அறிந்து பற்றி தன் இயல்பையுணர்ந்து உடல் உலகப்பற்

றைக் கைவிட்டு முதல்வனுடைய மலரடியை அறிந்து அறிவாற்பற்றி நிற்பவர் ஞானத்துரிய நிலையில் எட்டுக் கொண்டார்தமைத் தொட்டுக் கொண்டே நிற்பவராவர். "தொட்டேயிருமின் துரிய நிலத்தினை" என்று நிலத்தின் மேல்வைத்துக் கூறிய திருமந்திரவாக்கின் கருத்தும் இதுவே.

உலகம் என்றது உலகவிடய போகத்தையும் தத்துவக் கூட்டத்தினையும் அடக்கி நின்றது. ஞானகுரு உபதேசத்தால் தன்னை உள்ளவாறுணர்ந்து பஞ்சேந்திரியங்களின் தீயசேர்க்கையை விட்டு விலகும்போது தானாக அநுபவிக்கப்படும் தத்துவங்களும் விடயபோகங்களும் தன்னைவிட்டு விலகுவனவாகும். இவை நீங்கப்பெற்றுத் திருவடியைக் சார்ந்து நிற்பவரை உலகைவிட்ட துறவி எனக் கூறினார். இது துறவின் உண்மை இலக்கணத்தைக் கூறியவாறுயிற்று.

பாசக்கூட்டம் நீங்கியவிடத்து சேவடியைத் தீவிரதரத்தில் விடாதுபற்றி நிற்போருக்கு அருட்பதிவும் அதன் பயனாக முத்திப்பேறுங் கிட்டுவது சுலபமாதலால் பாசக்கூட்ட நீக்கத்தின் அருமையை நோக்கி அது நீங்கியபோதே முத்தியின் அடைவு நிச்சயமென்பார், அவ்வீடே வீடாகும் என்றார்.

ஐம்புலன்களினால் ஏற்படும் பாசத்தொடர்பு ஐம்புல நீக்கத்தாலன்றி நீங்காது. புலன்களை யடக்குவது அரிது என்றும், ஆசையென்னும் பாசம்பற்றும் அறுபடவேண்டுமென்றும் பகவத்கீதையில்

சாங்கிய கருமயோக அத்தியாயங்களிற் கூறியுள்ளதைக் காண்க. "குறையுமாப் பிணியுற்றுலும் கொண்டவிப்புலன்களெண்ணில்—அன்றகடலனைய நெஞ்சத் தவாவருன் அறிவினில்லான்—மறைமொழி பலவும் ஓதி அடக்குவான் மனத்தைவாங்கிப்—பொறைகெடப் புலன்களைந்தும் பொறியிலே புகட்டுங் கண்டாய்". "தீதியல் அவாவருன் செய்லை மாற்றுவான் – பீதியல் வினையுருன் வீடு மேவிடான்".

வீடு என்றது வீடாகும் என்றதனல் பின்னர் முத்தியாக விளையும் என்றதை உணர்த்திற்று. பாச நீக்கத்தின் பயனுக சத்திநிபாதம் என்னும் அருள் வீழ்ச்சி (பதிவு)யும், முத்திப்பேறும் உண்டாகும் என்றவாறு. வீடே என்றதிலுள்ள ஏகாரம் தேற்றம். இதில் முதலாய் நின்ற வீடு தொழிற் பெயராய் விட்டுவிடுதல் அல்லது கைவிடுதல் என்ற பொருளைக் கொண்டது.

எட்டுக்கொண்டார் என்பதற்கு எண்வகை மூர்த்தங்கொண்டு நிற்பவர் எனப்பொருள் கொள்ளல் இவண் பொருந்தாது. ஏனெனில், எண் மூர்த்திகளில் ஒருவரை வழிபடுவோர் உலகைவிட்டவர் ஆகாததுமன்றி அவர் முத்தி கூடுதலும் இன்று ஆகலான் என்க.

(கருத்து): தன்னையறிந்து பாசத்தைவிட்டு விலகி பதியின் திருவடியையே சார்ந்து நிற்கும் ஞானத்துரிய யோகி முத்தியைக் கூடுதல் திண்ணம் (என்றவாறு).

31. (சீவன் சித்தாகி ஒன்றுபடல்)

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
ஒத்ததே ஒத்தது என்று உந்தீபற
ஒவ்வாதது ஒவ்வாது என்று உந்தீபற. (25)

(கொண்டுகூட்டு): சித்தமுங் கரணமும் தீய சித்திலே ஒத்ததே ஒத்தது. ஒவ்வாதது ஒவ்வாது என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): சித்தம் முதலிய அந்தக் கரணங்களும் மெய் முதலிய புறக்கரணங்களும் வெந்தழியும் பொருட்டு (பாசப்பற்றறத் துறந்த துரிய ஞானயோகி) தானும் முதல்வனும் சித்தாம் தன்மையில் (சிவோகம் பாவனையினால்) முதல்வனுடன் ஒன்றாய்ப் பொருந்தி நிற்றல் ஒன்றும் தன்மையாகும் (அதாவது ஒன்றுபடலாகும்) அஃதன்றி (இயல்பின் பொருத்தத்தை உணராமல் தன் முனைப்பால்) பிரிந்து நிற்றல் ஒன்றுபடல் ஆகாது; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): சித்தம் அந்தக்கரணங்களில் ஒன்றாகலான் சினையாகு பெயராய் அவற்றைக் குறித்தது. கரணம் என்றது மேற்சொன்ன அகக் கரணங்களை நீக்கிப் புறக்கரணங்களைக் குறித்து நின்றது. தீய என்ற சொல்லைச் சிம்ம நோக்கில் வைத்து சித்தமுந்தீய கரணமுந்தீய என்று பொருள் காணவைத்தார். தீய என்றது தீய்ந்து நீறும் பொருட்டு என செயவெனவெச்சப் பொருளில்

நின்றது. சித்து, அறிவு அல்லது அறிவுடைப் பொருள். சித்தில் என்றது அறிவுடைப்பொருளாந் தன்மையில் என்ற பொருள் கொண்டது. சித்திலே என்றதிலுள்ள ஏகாரம் அசை. ஒத்ததே ஒத்தது என்றது ஆற்றுவது ஆற்றல் என்றாற்போல் இயைந்து நின்றது. ஒத்தல் சமமாய் நிற்றல், ஒன்றுபடல் என இருபொருள் கொள்ளும். ஆதலால் ஒத்ததே என்றதற்குச் சமமாய் நிற்றலே என்றும், ஒத்தது என்றதற்கு ஒன்றுபடலாகும் என்றும் இருபொருளும் அமைய உரை செய்யப்பட்டது. சமம் என்றது சித்தாய் வியாபகமாய் நிற்குந் தன்மையில் மட்டும் என்று கொள்ளவேண்டும். ஏனெனில் மற்ற தன்மைகளில் உயிர் சிவனுக்கு என்றும் அடிமையாதலால் என்க. சித்தமுங் கரணமும் வெந்தழிதல் என்றது அவற்றின் பண்புகள் மடங்கி நிற்றல் என்ற பொருளில். உயிருக்கு அமைச்சரவை போன்ற அந்தக்கரணங்களும் செயலாளர்களைப் போன்ற புறக்கருவிகளும் செயலற்ற வழி உயிருக்குப் புறவிடயங்களைச் சிந்தித்துப் பற்றும் ஆற்றல் கெடுமாதலால் சித்தக்கரணங்களின் பண்பு கெடும் ஆற்றை எடுத்தோதினர்.

முதல்வன் இயற்கையுணர்வும் முற்றுணர்வுமுடையவன். உயிரும் இயற்கையில் அறிவுடைப் பொருள். இது உடல்கொண்டு சீவனஞ்செய்யுங் காலை அதன் அறுதிசெய்கைக்குற்றம் என்னும் மலத்தால் மறைந்த அதனறிவு சற்று விரிந்து தொழிற்படக் காணப்படினும் அதன் திருவருள் துணைகொண்டு குற்ற மலமும் கருவிகரணங்களும்

நீங்கியவிடத்து அதன் அறிவு வியாபகத் தன்மை யுடைந்து விரியும். இவ்வாறு வியாபக அறிவைக் கொண்ட உயிரும் முதல்வனும் சித்து (அறிவு)ப் பொருள்களாயிருத்தலால் இத்தன்மையை நோக்க இருவரும் ஒத்தவர்கள் (சமமானவர்கள்)ஆவார்கள். இவ்வொற்றுமையைத் தன்னுள் உணர்ந்து கூடி நிற்றல் இரண்டற்று ஒன்றுபட்டு நிற்றலுக்கு ஏதுவாகும் என்பார் ஒத்ததே ஒத்தது என்றார். சித்துப் பொருள்களுக்கு அழியுந்தன்மை இன்றாகலான் சித்தாயுள்ள முதல்வனும் உயிரும் அழியாமையாகிய சத்துத்தன்மையாலும் ஒத்தவராவார் என்பதை சித்திலே ஒத்ததே என்று கூறினதைக் கொண்டே உய்த்துணர வைத்தார் எனக் காண்க. இவ்வாறு "தத்" பொருளாகிய முதல்வனுக்கும் "தொம்" பொருளாகிய உயிருக்கும் உள்ள ஒற்றுமையைக் கண்டுணராவிடில் அவ்விருவருக்குள்ளும் ஐக்கியம் ஏற்படாது என்பார் ஒவ்வாதது ஒவ்வாது என்றார்.

இவ்வாறு ஒற்றுமையை உணர்ந்து பற்ற வேண்டியது மேலைச் செய்யுளிற் குறிப்பிட்ட பாசப் பற்று நீங்கிய ஞானத்துரிய யோகிதான் என்று வருவித்துரைக்கப்பட்டது.

மேலே 28, 29வது செய்யுட்களில் கேட்டற்ற நிலையென்றும், வாக்கு மனோதீத நிலை யென்றும் அதீதநிலைக்கு இலக்கணத்தை மட்டும் கூறினார்.

தன்னையறிந்து முதல்வனுடைய திருவடியைப் பற்றி நின்று உலகத்தைத் துறந்த துரியயோகி

அதற்கு மேலாகிய அதீத நிலையைக் கவர்ந்து பாசப் பற்றறுத்து முத்திப் பேற்றை அடைதலுக்குரிய உபாயத்தினை இச்செய்யுளில் கூறியுள்ளார். அவ்வுபாயம் யாதெனில் முதல்வனுக்கும் தனக்குமுள்ள ஒற்றுமையைக் கண்டுணர்ந்து சிவோகம்பாவனை என்னும் சித்தாந்த மகாவாக்கியத்தை அநுசந்தானஞ் செய்து தன் பழமையை மறந்து திருவடியில் அழுந்திநின்று முதல்வனேயாய் அத்துவிதமாய்க் கலந்து நிற்றல் என்று உணர்த்தியுள்ளார். அசத்தைக் கண்டு நீக்கி சத்தாகிய முதல்வனை அடைவதற்கு உபாயம் கூறிய மெய்கண்டார் 9-ம் சூத்திரத்தில் 2-வது அதிகரணத்தில் "கண்டதை யன்றன்றெனவிட்டு" என்று தொடங்கும் உதாரணச் செய்யுளில் சோகம் பாவனையினால் நிட்டை கூடி முதல்வனோடு ஒன்றுதலைக் கூறியிருப்பதையுங் காண்க.

இவ்வாறன்றி மனமும் தீயதாயுள்ள புலன்களும் முதல்வனுடைய நிறைந்த (பேர்) அறிவோடு ஒன்றுபட்டால் அதுவே மெய்யான ஒற்றுமையாகும் எனப் பொருள் கொள்ளலின் விபரீதம் சித்தாந்த நூலறிவுடையோர்க்குப் புலனாகும். மேலும் சித்தம் என்றதற்கு சீவன் என்றும், தீய கரணம் என்றதற்கு விபரீத அந்தக்கரணங்கள் என்றும் ஒத்தது என்றது புண்ணிய பாவ கருமங்கள் துலையொத்தல் என்றும் இருவினையொப்பு என்றால் புண்ணிய பாவங்கள் சம எடையாய்க் காணல் என்றும் பொருள் கூறுதல் சித்தாந்த ஞான நூல்களுக்கும் மெய்யனுபவத்துக்கும் முரண்பட்டதாகும் என்றறியலாம்.

(கருத்து): தன்னையறிந்து முதல்வனுடைய திருவடியைப்பற்றி நிற்கும் துரியயோகி முதல்வனையுங்கண்டு அவனருளில் அழுந்தி பாசப்பற்றையும் ஒழித்து சிவோகம்பாவனையால் முதல்வனோடு இரண்டறக் கலந்துநின்று சிவப்பேறெய்தக் கடவன் (என்றவாறு).

32. (உயிரில் இறையொளி படிதல்)

வீட்டில் இருக்கிலென் நாட்டிலே போகிலென்
கூட்டில்வாள் சாத்திநின்று உந்தீபற
கூடப் படாதுஅது என்று உந்தீபற. (30)

(கொண்டுகூட்டு): வீட்டில் இருக்கில் என், நாட்டிலே போகில் என், கூட்டில் வாள்சாத்தி நில், (இல்லையேல்) அது கூடப்படாது; என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (ஞானசிவயோகியானவன்) இல்லறத்தோடு கூடி வாழ்ந்தான் எனினும் (இல்லந் துறந்து துறவு பூண்டு வசிக்குமிடமின்றி) உலகில் திரிந்தான் எனினும் (அதனாலே அவன் அடையும் பெரும்பயன் ஒன்றுமில்லை, ஆனால்) பறவைக் கூடு போன்ற அவனது உடலுள் (வசிக்கும் உயிரில் முதல்வனுடைய) ஒளிபடிந்து பிரகாசிக்கும்படியாக நிற்கக்கடவன். (இல்லையெனில் சொல்லிறந்த நிலைக் குரிய முதல்வனோடு ஒன்றாகிக்) கூடும் நிலை அவனுக்கு வாய்க்காது; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): தமிழ்மறைப்படி இல்லறம் துறவறம் என அறம் இருவகைத்து. வடநூலார் இல்லறத்துக்கு அடிப்படை பிரமசரியமென்னும் அறநூல், மெய்ந்நூல்களில் கல்விகற்குமிடமாகிய குருகுலவாச நிலையையும், இல்லந் துறந்து துறவு பூண்டு அதற்குரிய அறத்தைக் கைக்கொள்ளுமுன் இல்லத்தை விட்டும் விடாமலும் துறவறத்தைத் தொட்டுந் தொடாமலும் மனைவி தனக்குப் பணிவிடை செய்ய பத்தியும் மெய்யுணர்வும் வளரக் கூடிய தவத்தைக் கைக்கொண்டு ஒழுகும் வானப்பிரத்தம் என்னும் நடுநிலையையுங் கூட்டி உலக வாழ்க்கையை நான்கு ஆச்சிரம நிலைகளாகப் பகுத்துள்ளார். ஆயினும் முக்கிய அறப்பாகுபாட்டில் வேறுபாடின்மையைக் காணலாம். இங்கு வீட்டில் இருத்தல் இல்லறத்தையும் நாட்டிலே போகல் துறவறத்தையுங் குறித்து நின்றன. நாடு என்றது உலகப்பொது வீட்டின் நீக்கத்தைக் குறித்தது.

கூடு என்றது மகனுக்கு முதல்வனருளால் ஆக்கித்தரப்பட்ட சொப்பன அருவுடலுக்கு உதவியாக அறுவகை தாதுக்களாற் கட்டப்பட்ட பறவைக் கூடு போன்ற தூலவுடல். "குடம்பைத் தனித்தொழிய புட்பறந்தற்றே—உடம்பொடு உயிரிடை நட்பு" என்றும், "கள்ளப்புலக் குரம்பைக் கட்டழிக்கவல்லானே" என்றும், தூலவுடலைப் பறவைக் கூட்டிற்கும் சிறு குடிலுக்கும் முன்னோர் உண்மையறிந்து அதன் நிலையாமையை முன்னிட்டு ஒப்பு கூறியுள்ளார்கள்.

வாள் என்றால் ஒளி, சோதி, பிரகாசம் எனப் பொருள்படும். கத்தி என்ற பொருள் இங்கு பொருந்தாது. சிவஞானபோதம் 11வது சூத்திரம் 2வது அதிகரணத்துள்ள "பொன்வாள்முன்" என்ற தொடக்கமுடைய உதாரண வெண்பாவிலிருந்து வாள் என்னும் பொருளைத் தெளிவு பெறலாம். "மறையாக் கதிர் போலுன் வாளொளியை நோக்கி —நிறைவாய்க் குறையாதே நில்" என்ற ஞான வள்ளலாரின் பூரணநிட்டை விளக்கமும், "காளம் ஆண்ட வாள்அவிர் அங்காளம்" என்ற ஞானமிர்தப் பொன்னுரையும் இதனை வலியுறுத்தும். சாத்தல் என்றால், பூசுதல் அப்புதல்; கூட்டில் வாள் சாத்தி நில் என்றால் என்றது உன் உடலுள் ஒளி அப்பும்படி (படியும்படி) நிற்பாய். அதாவது உன்னகத்தில் (அறிவில்) முதல்வனுடைய ஒளியுரு விளங்கும்படியான களங்கமற்ற (பரிசுத்த) நிலையைக் கைப்பற்றி நிற்பாய் என்றவாறு.

கூடு என்றது ஆகுபெயராய்க் கூட்டில் வாழ் உயிரைக் குறித்து நின்றது. சிவனும் சீவனும் சித்துப்பொருள்கள். சித்து என்றால் அறிவு. அறிவு அறியாமையைக் கெடுப்பது. அறியாமை இருளைப் போன்று ஒன்றையறியவொட்டாமல் மறைப்பது. ஒளியை மறைப்பது இருள்; இருளையொழிப்பது ஒளி. ஆதலால் அறிவு அறியாமைகளை ஒளி இருள்களுக்குத் தனித்தனியே ஒப்பு கூறுவர் மெய்யுணர்ந்தோர். இங்கு அறிவை அறியாமையாகிய இருளைப் போக்கும் ஒளிக்கு ஒப்பு கூறினார். முதல்வனுக்கு நிறைந்த அறிவே சொரூபமாதலால் அவனை சோதி

சொரூபன் என்பது அனுபவத்தையொட்டிய மரபு. உயிர் சிற்றறிவுப் பொருளாயினும் அதன் செயற்கைக் குற்றமாகிய சகசமலத்தால் அதனறிவு மறைப்புண்டு கிடந்து இறையருளால் உடலெடுத்த பின்னர் சிற்றறிவு துலங்கி நிற்கும். அந்நிலையில் அதனறிவு தெளிவற்று மயங்கியும் நினைப்பு மறப்புடன் இருத்தலால் இருளுக்கு ஒப்பு கூறப்பட்டது. சுட்டறிவிறந்து தன்னையும் தனக்குத் தஞ்சமாம் முதல்வனது திருவடியையும் உணர்ந்த நிலையில் அதனறிவு விரிந்து பிரகாசமடைகிறது. அப்பால் அத்திருவடியில் நிலைத்து நிற்கும் சிவதுரிய நிலையில் அதனறிவில் நீங்காது நிலைத்து நிற்கும் முதல்வனது பிரகாசமென்னுந் திருவடி ஞானத்தைப் பிரகாச அறிவு கொண்ட உயிரானது தன்னகத்துள் அநுபூதியில் அறிந்து நிற்கும். இந்நிலையைத்தான் சோதிக்குட்சோதி நிலையென்பர். அதனையே இங்கு "கூட்டில்வாள்சாத்தி நில்" என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார் எனக் காண்க. இவ்வுண்மையை அடியிற்குறித்த அநுபூதி வாக்கியங்களால் அறியக் கூடும்.

"உளங்கொளியாவதென் உள்நின்ற சீவன்—வளங்கொளியாகி நின்ற மாமணிச்சோதி—விளங்கொளியாய் மின்னி விண்ணில் ஒடுங்கி—வளங்கொளியாயத்துளாகி நின்றானே". "நீரும்நிலனும் விசும்பங்கி மாருதம்—தூரும் உடம்புறு சோதியுமாயுள்ளான்"; "அண்டவொளியும் அகண்டவொளியுடன் — பிண்டவொளியாய்ப் பிதற்றும் பெருமையை உண்டவெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது".

"சோதியே சுடரே சூழொளி விளக்கே"; "சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம் ஒருவனே"; "மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே"; "மாசற்ற சோதி"; "காண்பரிய பேரொளியே" "தோற்றச் சுடரொளியாய்"; "துரியமுமிறந்த சுடரே போற்றி"; "அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்"; "சோதிக்குட் சோதிக்குட் சோதி".

மேலும், சிவஞானபோதம் 9ம் சூத்திரத்தில் 2வது அதிகரணத்துள்ள உதாரணச் செய்யுளிற் கண்ட "ஆறு அறிவாய் (அறிவிறந்து) தோன்றுஞ்ரே" என்ற பதத்திற்கு "சுட்டறிவிறந்த தன் அறிவின்கண் நீங்காது நிலை பெறுவதாய்ச் சோதிக்குட் சோதியாய் விளங்கித் தோன்றுன் கொல்லோ" என்று சிவஞானமுனிவர் பொருள்கண்டிருப்பதையுங்காண்க. பகவத்கீதையில் ஞேயப்பொருளை விளக்கும்போது கண்ணபிரான் "பொருவிலா ஒளிகட்கும் உள்ளொளியாகியே பொலிகின்றது" என்று கூறியுள்ளதையுங் காண்க.

அறிவகத்தில் முதல்வனுடைய ஒளி பிரகாசிக்கும்படியான நிலையில் நிற்கவேண்டுவது 'எற்றுக்கு?' என்ற வினுவிற்கு விடையாக, இல்லையெனில் அது கூடப்படாது என்று உடன் கூறினுர். இல்லையெனில் என்றது சொல்லெச்சம். அதாவது, வாக்கு மனதீத சிவனுடன் கூடும் ஞான பூரண நிலை சிவயோகிக்கு வாய்க்காது என்றதனுல் முதல்வனுடன் அவனேயாய் இரண்டறக்கூடி நிற்றல் முத்தியெனலால் அந்த யோகிக்கு முத்தி

க்கூடாது என்றவாறு. அது என்றது மேலைச் செய்யுளிற் குறிப்பிட்ட சிவ ஐக்கிய நிலை. இவ் வுன்னத சிவநிலையை யடைவதற்கு இல்லறம் துறவறம் என்ற இருநிலைகளும் ஒன்றுபோல் உபகரிப்பனவாம் என்ற உண்மையை அறிவுடையோர் உணரச் செய்துள்ளார் ஆசிரியர்.

"தேட்டமொன் றறவருட் செயலி னிற்றியேல்
வீட்டறந் துறவுற மிரண்டு மேன்மையே"

என்ற, தாயுமானாரின் அநுபவச் சான்றையும் அறிக. திருக்களிற்றுப்படியாரில் வீடு நாடு என்ற சொற்களை வீட்டு (முத்தி) நெறி உலகநெறி என்ற பொருள்களில் உபயோகித்திருப்பினும் கூட்டில் வாள் சாத்தி நிற்க வேண்டுமென்ற போதனையில் மாற்றமின்றித் தக்கனுடைய வேள்விப்பயனைச் சான்று கூறி அப்போதனையை வலியுறுத்தியுள்ளார் என்பதை நோக்குதல் பொருந்தும். மேலும் சிவப்பிரகாசத்தில் பசுவிலக்கணங் கூறுமிடத்து "உள்நிலவும் ஒளியதனால் இருளகற்றிப் பாதம்— உற்றிடும் நற்பசு வர்க்கம்" என்று போதித்திருப் பதையும் ஒப்பு நோக்குக.

இவ்வாறன்றி வாள் என்றதற்குக் கத்தி என்னு மோர் படைக்கலமாகக்கொண்டு ஞானவாள் என்று கோடல் விபரீதப் பொருளைத் தரும். மேலும், கூடு என்றதற்குக் கத்தியின் உறை எனக்கொண்டு ஞானவாளை அதன் உறைக்குள் கிடத்தி நில் எனல் செய்யுட்பொருளைச் சிதைத்து முரண்பட்ட உரையைக் கொண்டதாகும்.

(கருத்து): சிவயோகி இல்லறத்திலேனும் துறவறத்திலேனும் நின்று சுட்டறிவிறந்து தன்னகத்துள் முதல்வனுடைய திருவடி ஞானப் பிரகாசம் படியும்படி நின்று அவனுடன் ஒன்றுபடக்கடவன் (என்றவாறு).

33. (அமுதநிலை)

உள்ளும் புறம்பும் நினைப்பறில் உன்னுள்ளே
பொள்ளா அமுதாம் என்று உந்தீபற
முளையாது பந்தம் என்று உந்தீபற. (26)

(கொண்டுகூட்டு) உள்ளும்புறம்பும் நினைப்பறில் உன்னுள்ளே பொள்ளா அமுது ஆம்; பந்தம் முளையாது என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): உன் மனத்தகத்துட் பதிந்து கிடக்கும் பழைய விடயங்களைப்பற்றியும் வெளியிலுள்ள புதிய விடயங்களைப்பற்றியும் உன் மனதில் உதிக்கும் கடல்திரை போன்ற எண்ணங்கள் எழாது ஒழிந்தனவாகில் உன்னகத்துள் முகக்கப்படாத அமுதம் உற்பத்தியாகும். அஞ்ஞானவித்து முளைக்காமல் அழிவுறும்; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): 30வது (24) செய்யுளில் துரிய யோகியின் திருவடிபற்றிய துறவை போதித்தார். 31வது (25) செய்யுளில் அதேநிலையில் சீவன் சித்தாகி முதல்வனுடன் ஒன்றுதலைப் போதித்தார்.

இச்செய்யுளில் அந்நிலைகளினால் அடையக்கூடிய முதற்கண்ணதாய பிரத்தியட்ச அநுபவத்தைக்கூறு கிறார். நினைப்பு உதிக்குமிடம் மனம். உலகவிடயங் களைப்பற்றி எழும் எண்ணம் முதலில் இந்திரியங் களைப் பொதுவில் தாக்கி அப்பால் மனதை (அந்தக் கரணத்தை) நிச்சயவடிவில் தாக்கி முடிவில் உயிரை வேதனை வடிவில் தாக்கிவிட்டு நசிக்கிறது. இவ் வாறு மனமாதியால் அறியப்படும் உணர்வு உயி ரால் அறியப்படும் உணர்வு என்ற இருவகை யுணர்வும் கடல்திரையையொத்து ஒன்றன்பின் ஒன்றாய் உதித்து ஒடுங்கும் என்றார் மெய்கண்ட சிவாச்சாரியார். புறத்தே தோன்றும் எண்ணம் புறக்கருவிகளின் உதவிகொண்டு எழுகிறது. ஆனால் முன்னர் அநுபவித்த விடயங்களின் நினை வினால் வாசனைவடிவில் மனதிலுதித்து உயிரை மறுமுறையாகத் தாக்கி நசிக்கிறது. இவ்வாறு பழையவாசனை மனதில் எழும்போதெல்லாம் உணர் வினால் உயிர்தாக்கப்படுகிறபடியால் எதிர்காலம் முழுவதிலும் அவ்வாசனை உயிரைத்தாக்கிக் கொண் டேயிருக்கிறது. ஆதலாற்றான் விடய அநுபவத் தைவிட அதன் வாசனை மிகக்கொடிதுஎன்றார் மெய் யுணர்ந்தோர். இதுபற்றியே உள்ளெழும் நினைப் பறலை முதலிலும் மற்றதைப் பின்னும் வைத்தோதி னார் எனலாம். இவ்விருவகை எண்ணமும் அற்றால் என்றது புதியவிடயத்தையும் பழையவாசனையை யும் அவற்றிலுள்ள தோடதிருட்டியால் மனாதி களும் சீவனும் விட்டு விலகிநிற்றல் என்று பொருள்பட நின்றது.

மேலிரண்டு 30 — 31-வது செய்யுட்களிலும் முறையே விடயத்தையும் – விடயப்பற்றையும் நீக்க வேண்டிய அவசியத்தை யோகிக்கு உணர்த்தினர்; அந்நீக்கங்கள் எவ்வாற்ருல் சாதிக்கக்கூடுமென் பதை இச்செய்யுளில் "உள்ளும் புறம்பும் நினைப் பறுத"லினுல் சாதிக்கக்கூடுமென்று போதித்தார். "ஆவதொன்றில்லை அகம்புறத்தென்று – ஒவுசிவ னுடன் ஒன்றுதல் முத்தியே" என்ற திருமந்திரப் பொருளை நோக்குக.

இவ்வாறு சாதிக்கும் யோகிக்குறும் இருவித பயன்களையும் உடன் கூறியுள்ளார் – முதற்பயன் உன்னுள்ளே தீண்ட இயலாத திவ்விய அமுதம் ஊரும். இதற்குச் சான்று மெய்யுணர்ந்த சிவயோகி களின் அநுபவந்தான் முதன்மையாகும். "வாக் கிறந்தமுதம் மயிர்க்கால்தொறும் தேக்க செய் தனன்"; "அற்புதமான அமுத தாரைகள்–எற்புத் துளைதொறும் ஏற்றினன்"; என்பன மணிவாசகப் பெருமானின் அநுபவ அமுத மொழிகள். "குறி வழியே சென்று–பாலாம் அமிர்துண்டு பற்றறப் பற்றினுல்-மாலானது மாள மாளுமவ் விந்துவே" என்றது திருமூலநாதரின் அநுபவ போதனை. இத்திருமந்திரச் செய்யுட்பொருளும் திருவுந்தி யாரின் இச்செய்யுள் மேலைச் செய்யுட்பொருள் களும் ஒத்திருப்பதைக் கண்டுணர்க. எவ்வா றெனின் கூறுதும். பற்றறப் பற்றல் என்றது சித் திலே ஒத்தது என்பதனேடும், மாலானது மாள என்றது சித்தமுங் கரணமுந்தீய்ந்து உள்ளும் புறம்பும் நினைப்பறல் என்பதனேடும் பாலாம்

அமிர்துண்டு என்பது உன்னுள்ளே மொள்ளா அமுதாம் என்பதனோடும் விந்து மாளும் என்றது முளையாது பந்தம் என்றதனோடும் ஒப்பிட்டு நோக்கற்பாலன.

இரண்டாவது பயன் பந்தம் முளையாது என்றது. பிறப்பென்னும் பிணிக்குக் காரணமாகிய சகசமலத்தின் காரியமான அஞ்ஞானவித்து மெய் யுணர்வென்னும் ஞானக்கினியால் வெந்தொழிந்த காரணத்தினல் அது அப்பிணியைத் தோற்றுவிக்கு மாறில்லை என்றவாறு. மலக்கட்டும் அதனலுண் டாம் பாசப் பற்றும்பந்தம் என்றதனுள் அடங்கும். பந்தத்துக்கு ஏதுவை பந்தம் என்றது காரணத்தைக் காரியத்தால் குறிப்பிட்டவாறு.

(கருத்து): சிவதுரியங்கடந்த ஞானசமாதி (சிவநிட்டை) நிலையில் நினைப்பும் மறப்புமற்று நிற்கும் சிவஞானி திப்பிய தேவாமிர்தம் உண்ணலு மன்றி பிறவியையும் ஒழித்தான் (என்றவாறு).

34. (அல்லல் அறுத்தல்)

அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்கு
அவிழும்இவ் அல்லல் என்று உந்தீபற
அன்றி அவிழாது என்று உந்தீபற. (27)

(கொண்டுகூட்டு): (அல்லல்) அவிழவிருக்கும் அறிவுடன் நின்றவர்க்கு இவ்வல்லல் அவிழும்; அன்றி அவிழாது என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (பிறப்பினால் உண்டாம்) துன்பம் (என்னும் பின்னல்) பிரிந்து உருவமழிந்து நிற்கும் முற்றறிவுப் பொருளாகிய முதல்வனுடன் கூடி நிலைத்து நின்ற சிவஞானிக்கு இம்மையில் அடையப்படும் சுகதுக்க அநுபவங்கள் என்னும் துன்பப்பின்னல் பிரிந்து உருக்குலையும். அவ்வாறு கூடி நிலைத்து நிற்கவில்லையெனில் அத்துன்ப அநுபவம் உருக்குலையாது; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): மேலைச் செய்யுளில் பந்தம் முளையாது என்று மேலுண்டாகக்கூடிய பிறப்பு அற்றுப் போகும் என்று கூறி இங்கு இம்மைக்கண் பிராரத்த ஆகாமிய வினைகளினால் உண்டாகும் துன்பங்களும் சிவயோக ஞானியைப் பற்றாமல் உருக்குலைந்து போகும் என்று போதிக்கிறார். அல்லல் என்றால் துன்பம். இவ்வல்லல் என்றது இப்பிறப்பில் பிராரத்த கரும வசத்தால் அநுபவிக்க வேண்டிய துன்பத்தைக் குறித்து நின்றது. அவிழ என்றது அவிழ்ந்து என்னும் பொருளில் நின்றது; காலவழு; அல்லல் என்ற சொல்லை அவிழ என்றதனோடுங் கூட்டி அல்லல் அவிழ என்று பொருள் காண வேண்டும். நோயற்ற மருத்துவனைச் சார்ந்து நோயைத் தீர்த்துக்கொள்ளுமாறுபோல துன்பம் நிறைந்த பிறப்பிறப்பென்னும் பின்னற் சடையை அவிழ்ந்த சடையானைச் சார்ந்தேதான் அவிழ்க்க வேண்டும் என்பார் அல்லல் அவிழ இருக்கும் அறிவுடன் நிற்க என்றார். இங்கு அல்லல் என்று

பொதுப்படக் கொண்டதனால் துன்பத்துட் துன்பமாகிய பிறவித் துன்பம் என்று பொருள் காணப்பட்டது — அல்லல் அவிழ இருக்கும் என்றதற்கு உன் அல்லலை அவிழ்ப்பதற்கு இருக்கும் என்று பொருள் கோடல் சிறப்புடைத்தன்று.

அறிவு ஆகுபெயராய் அறிவு வடிவனாகிய முதல்வனைக் குறித்தது. உடன் நின்றவர் என்றது மேலைச் செய்யுளிற் குறிப்பிட்ட சித்துடன் ஒத்து ஒன்றுகூடி நிற்கும் சிவ அதீதயோக ஞானியைக் குறித்தது. அறிவு, சித்து ஒருபொருட் பன்மொழி. அவிழ்தல் – விரிதல் பிரிதல் எனப் பொருள்படும். அல்லல் – துன்பம் என்றும், முடைதல் அல்லது பின்னல் என்றும், இருவேறு பொருள்களைக் கொள்ளும். ஆதலால் ஆகுபெயராய் பின்னப்பட்டிருக்கும் பொருளையுங் குறிக்கும். இவ்விரு பொருள்களும் பொருந்துமாறு இவ்வல்லல் அவிழும் என்றார். இவ் வல்லல் என்றது இப்பிறப்பில் பிரத்தியட்சத்தில் அநுபவிக்கப்படும் சுகதுக்கவடிவ துன்பத்தைக் குறித்து நின்றது. ஆதலால் இவ்வல்லல் என்றதற்கு இம்மைத் துன்பப் பின்னல் என்றும், பின்னல் (அல்லது முடிச்சு) அவிழ்ந்தால் அதன் உருக் குலைந்து தீருமாதலால் அவிழும் என்றதற்கு பிரிந்து உருக்குலையும் என்றும் உரை செய்யப்பட்டது.

முதல்வன் இயல்பாகவே பாசத்தினீங்கிய இறைவனாகையால் பிறவியினால் ஏற்படும் துன்பம் அற்றவன் என்பார், அல்லல் அவிழ்ந்திருக்கும் அறிவன் என்றார். அல்லல் அவிழ்ந்தவன் என்றால்

அல்லல் ஒருக்கால் இருந்து பின்னர் அது அவிழ்ந்தவன் என்று கொள்ளவருமே எனின் வாராது: ஏனெனில், தன்பணியறுத்த தன்னடியார்களின் நித்திய கருமப்பலனைத் தானே ஏற்று பிறவித் துன்பம் அவர்களைப் பற்றுதபடி செய்தருளுகிறுன். என்பது சத்திய மொழியாகையால் தன்னடியாரின் பொருட்டு முதல்வன் அல்லற் படுவன்போல் ஊகிக்கப்படினும் இயற்கையிற் பாசநீக்கமுடைய அவன் அவற்றுல் விகாரமடையாமல் ஒருப்படித்தாகவே நிற்கிறுன் ஆதலால் என்க. சிவஞான போதம் பத்தாம் சூத்திரத்தில் 2வது அதிகரணத்துள்ள உதாரணச் செய்யுளில் "இறைபணியார்க் கில்லை வினை–முற்செய்சினையும் தருவான்முன்" என்றும், "சார்ந்தாரைக் காத்தல் தலைவன்கடனுதல்" என்றுங் கூறியுள்ளதை இங்கு நோக்குக. "தன்னை யடைந்தார் வினைதீர்ப்பதன்றே தலையாயவர்தங் கடனுவதுதானே", "சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கல்லால் நலமிலன்" என்று தேவாரமூர்த்திகளுங் கூறியுள்ளார்கள். மேலும் அவ்வாறு கொள்ளவரினும் அல்லற்படும் சீவனுக்கு அவனுடன் கூடியிருந்து உபகரித்துவரும் முதல்வன் அல்லல் ஒழிந்திருப்பவன் என்று கூறி அதனுல் அல்லலை ஒழிக்கும் உபாயம் அறிந்தவன் என்று ஊகித்துக்காணும்படி சீவனுக்கு தேறுதலும், நம்பிக்கையும் உண்டு பண்ணி முதல்வனைச் சீவன் தொடக்கத்திலேயே பற்றிக் கொள்ளட்டும் என்ற நல்லெண்ணங் கொண்டு அவ்வாறு கூறினர் எனவுங்கொள்ளக் கிடக்கின்றது.

(கருத்து): முதல்வனாகிய ஞானசொரூபனோடு ஒன்றாய்க்கலந்து நிற்கும் யோகாரூட சிவஞானிக்கு உடல் கொள்ளும் சுகதுக்க அநுபவம் பற்றாது (என்றவாறு).

35. (தன்பணி அறுத்தல்)

நம்செயல் அற்றுஇந்த நாமற்று பின்நாதன்
தன்செய் தானே என்று உந்தீபற
தன்னையே தந்தான் என்று உந்தீபற. (6)

(கொண்டுகூட்டு): இந்த நாம் அற்று நம் செயல் அற்றபின் நாதன் தன் செயல்தான்; தன்னையே தந்தான் என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (மதம் என்னும்) அகந்தை நீங்கி (விசித்திரம் என்னும்) மமதையும் ஒழிந்த பிறகு (சீவனிடத்துத் தோன்றும்) செயலனைத்தும் முதல்வனது ஆணையைப் பற்றிய (அடிமையின்) செயலாகவே எஞ்சி நிற்கும். (இவ்வாற்றான்) தற் செயலற்ற இறைபணியாளர்க்குத் தன்னை அடைதலென்னும் பரமுத்திப் பேற்றை முதல்வன் அருளிச் செய்கின்றான் என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) ஊன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): மலத்தொடக்கற்ற ஞான சொரூபனும் முதல்வனுடைய திருவடியை விடாதுபற்றி நிற்கும் துரியஞான யோகியை இம்மையில் ஊழால் ஏற்படுந் துன்பங்கள் தாக்கா என்று பொதுப்படக் கூறி அவ்வாறு நிற்கும் சிவயோகியின் இலக்க

ணத்தை இங்கு விளக்கிக் கூறுமுகத்தான் அக் கூற்றை வலியுறுத்துகிருர் ஆசிரியர். இதுமுதல் மூன்று செய்யுட்களும் சிவயோகி தன்பணியறுத்து சிவபணியில் நிற்றல் என்னும் பொருளைக்கொண் டனவாகும். மதம் ஆணவ மலத்தின் காரியம். உடலையே நானென்று கருதும் விபரீதவுணர்வி லிருந்து இம்மதம் தோன்றும். அகங்கார மமகாரங் களில் முதலாவதாகிய நான் எனுஞ் செருக்கற்ற தைத் தொடர்ந்தே எனது எனுஞ் செருக்கு விடுபடு மாதலால் செய்யுளிற் கண்ட நம் செயல் நாம் என்ற வரிசையை மாற்றி நாம் நம் செயல் எனக் கொண்டு பொருளுரைக்கப்பட்டது. நான் எனது என்னுது நாம் நமது என்றது செருக்கின் முதிர்ச்சியை உணர்த்துதற்கு. தானே என்றதிலுள்ள ஏகாரம் பிரிநிலை – தன்னையே என்றதிலுள்ள ஏகாரம் தேற்றம்.

அஞ்ஞானத்தைச் செய்யும் மலம் மெய்ஞ்ஞானத் தாலன்றிக் கெடாது. முதல்வனையுந் தன்னையும் உள்ளவாறு உணர்தல் மெய்யுணர்வு. தன்னை யறிதற்கு உபாயம் மெய்யுணர்ந்தோரிடமிருந்து உயிருக்கு உறுதிபயக்கும் சரியை, கிரியை, யோக ஞானபாத உபதேசங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து அநுபவித்தலாகும். சரியை முதலிய சிவ தவங்கள் தகுதியுடையவருக்கே கிட்டிப் பயனளிக் கும். மற்றையோர்க்குக் கிடைத்தாலும் ஞானப்பய னளிக்காது சுயநலத்தால் இடையிற் கழியும். உலகு அனைத்தையும் தனக்கு இடமாகக் கொண்டு எங்கணும் நிறைந்திருக்கும் முதல்வனுக்கு மனம்,

வாக்கு, காயங்களினால் தொண்டுந் தொழுதேத்த லும் செய்வதற்கு அனுகூலமாய் உலகவர்க்கென மெய்யுணர்ந்தோரால் ஆகம விதிப்படி குறிக்கப்பட் டுள்ள திவ்விய மூர்த்தங்களில் ஒன்றினுக்கும் அட்சர சக்கரங்களில் ஒன்றினுக்கும் வந்தனை வழி பாடு செய்தல் என்னும் சரியை கிரியைப்படிகளிற் பழகித் தேர்ந்து சகல உயிர்களிடத்தும் சுயநலமற்ற மெய்யன்பு பூண்டு வாழ்தல் முதற்படியாகும். அப்பால், தன்னையறிய உதவும் சிவதவமாகிய அட்டாங்க ராசயோகத்தைக் குருமுகமாய்க் கேட் டுணர்ந்து பழகினால் முதல்வனுடைய திருவருளில் அழுந்தி திருவடி ஞானம் என்னும் அருட்கண் தோன்றும். அதன் பயனாக அஞ்ஞான சகசமலம் வலிகெட்டொழியும். அப்பால் சிவதுரிய யோக நிலையின் முடிவாகிய சுக்கில யோகம் என்னும் அதீத சிவநிட்டை (சிவசமாதி) கைகூடும். அதன் பயனாக சகசமலம் வலிகெட்டொழியும். அத்துடன் இடையேவந்து உயிரைத் தொடர்ந்த பாசங்க ளாகிய மாயை கன்மங்களின் பற்று நீக்கமும் உண்டாகும். இந்நிலை யெய்தும்வரையில் யான் எனது என்னும் செருக்குகள் வேரற்று மடிவதின்று. இவ்வாறு செருக்கற்றோரே தன்பணியறுத்தவர் ஆவர். அந்நிலையில் அவர் இயற்றும் பணியெல் லாம் முதல்வனுடைய அருள் என்னும் ஆணையின் வழித்தாகலான் வினைப்பயன் முழுவதும் அவ்வாணை யைச் சார்ந்து செய்விக்கச் செய்யும் மெய்யடியார் இறைப்பணியாளர் ஆயினார். இக்கருத்துப் பற்றியே பின் நாதன் தன் செயல் தான் என்றார் ஆசிரியர்.

"யானென திறக்கப்பெற்றவர் பெற்றிடும்
பேறேற்"

"சட்டையிற் பம்பர சாலம்போ லெலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து நெஞ்சமே
தேட்டமொன் றறவருட் செயலினிற்றியேல்
விட்டறந்துறவற மிரண்டு மேன்மையே"

"சந்ததமு மெனது செயனினது செயல் யானெனுந்தன்மை நினையன்றியில்லாத் தன்மையால் வேறலேன்", என்று கூறிய தாயுமானுரின் அநுபவ மொழிகளைக் காண்க.

மமதை என்றது எச்செயலும் வினையின்வழி நிகழ்வது என்று அறியாது நான் செய்தேன் அது எனது செயல் என்று எண்ணும் மலத்தின் மற்றொரு காரியமாகிய விசித்திரம். தன்னையே தந்தது யாருக்கு எனின் தற்செயலற்ற இறைபணியாளராகிய ஞானயோக முத்தருக்கு. முதற்செய்யுளில், "தானுகத் தந்தான்" என்றும், இங்கு "தன்னையே தந்தான்" என்றுங்கூறியது சீவனுடைய பெத்தம் முத்தி என்ற இருவகை வாழ்க்கை நிலைகளையும் குறித்து நின்றன. அங்கு அகளமாய் முற்றும் மறைந்து விலகிநின்ற முதல்வன் முதற்கண் சகளனுகி உலகு உயிர்களுடன் கூடி நிற்கும் தனது அத்துவிதத் தடத்த உருவநிலையை சிவயோகிக்கு உணர்த்தினுன். இது பெத்த நிலை. இச்செய்யுளில் தன் மெய்யடியானுகிய சிவநிட்டனின் செருக்கற்ற நிலையில் அவனுடைய செயலனைத்தும் தன் செயலாகக் கொண்டு அவனுடைய கரும

மலத்தை யழித்துத் தன்னை முழுதுமாய் உணரச் செய்கின்றான் என்றதால் சீவன்முத்தி நிலையை அளித்து தன் சொருப நிலையையும் உணர்த்தியவ னாயிற்று. "செயலற்றிருக்கச் சிவானந்தமாகும்"; "செய்வனவெல்லாம் சிவமாகக் காண்டலால் — கை வளமின்றிக் கருக்கடந்தேனே" என்னும் திருமந் திரச் செய்யுட் பொருள்களையும் அன்பருக்கே பேரானந்தக் — கோதிலமு தூற்றரும்பிக் குணங்குறி யொன்றறத் தன்னைக் கொடுத்துக்காட்டும் — தீதில் பராபரம்" என்ற தாயுமானார் மொழியையும் ஒப்பு நோக்குக.

(கருத்து): நான் எனது என்னுஞ் செருக்கற் றுத் தன்பணியறுத்த சிவபணியாளர்க்கு முதல்வ னுடைய சொரூப(பர) முத்தி வந்தெய்தும் (என்ற வாறு).

**36.** (இதுவுமது)

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாரார்என்று உந்தீபற
பிறப்பிறப்பு இல்லையென்று உந்தீபற. (3)

(கொண்டுகூட்டு): கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர் பிண்டத்தில் வாரார். பிறப்பு இறப்பு இல்லை என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (பிரபஞ்ச நிமித்த காரண னாகிய பதியாம்) முதல்வனை (தன்னுள் அத்துவித மாய் நின்று செய்யும் உபகரிப்பினால் தனக்கு

ஆண்டாளுகவும் காட்டக்கண்டு செய்விக்கச் செய்யும் தன்னை அவனுக்கு அடிமையாகவும்) அறிந்து பற்றி (த் தன்னைச் சார்த்துவரும்) வினைப்பயனாகிய அனுபவங்களையும் அவற்றையொட்டி எழும் பிராரத்த ஆகாமிய வினைகளையும் (நான் எனது என்னுஞ் செருக்கற்று முதல்வனின் அருள்வழி நின்று உடல் நிற்குமளவும் அடிமையாக) அநுபவித்துச் செய்து முடித்தவருக்கு (வினைப் பயன் எஞ்சி நிற்பதில்லையாதலால்) மறுபடியும் உடல் எடுப்பதில்லை (வேறு உடல் எடுக்க ஏது வில்லையாகலான்) அவருக்கு இறப்புமில்லை என்றறிந்து (அனுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): கண்டத்தை என்றதில் அத்து சாரியை 'ஐ' உருபு; ஆகலால் கண்ட அதை என எஞ்சி நிற்கும். இங்கு காண்டல், படைத்தல் என்ற பொருள்கொண்டு நின்றது. கண்ட அதை என்றது படைத்த அப்பொருளை அதாவது பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமாகிய பதியைக் குறித்தது. கொள்ளல் – ஏற்கல்; அதாவது அறிந்துணர்தலாகிய அறிவால் ஏற்கல் என்னும் பொருளது. கருமம் என்றது உடல் நிற்குமளவும் அதுகொண்ட பிராரத்த வினையும் அதனையொட்டித் தொடர்ந்து வரும் முயற்சி என்னும் ஆகாமிய வினையும். முடித்தல் முற்றுவித்தல், எஞ்சி நிற்காமல் செய்தல். பிண்டத்தில் வாரார் என்றது எப்புவனங்களுக்கு முரிய உடல் எடுக்கார் எனப் பொருள்கொள்ள

நின்றது. பிறப்பிறப்பு இல்லை என்றதனால் இப் பூவுலகில் மறுசனனம் அற்றுப்போகும் என்றவாறு.

"இருவேறு வகையாய வெவ்வேறு வினை
களையும்
மருவேனென் றறவிட்டு மாயையினான்
மறைப்பரிய
ஒருவனையே பற்றொழியப் பற்றினால்
உனைப் பிறவிக்
கருவேலை கடந்தேறல் கைதருவேன் கதிர்
வேலோய்" என்று அருச்சுனனுக்குக் கண்ணபிரான் உபதேசித்தருளியதையும், "கருமமானது கோடி முன்னே செய்தாலு நின் கருணைப்பிரவாக அருளைத் தாகமாய் நாடினரை வாதிக்கவல்லதோ" என்ற தாயுமானாரின் அருண்மொழியையும் காண்க.

கண்டத்தைக்கொண்டு என்றவிடத்து எவ்வாறு கொண்டு என்ற வினாவிற்குரிய விடையை ஊகித்தறிய விட்டார் ஆசிரியர். முதல்வனை ஏற்றுக்கொண்டு செயலாற்றுபவரின் கருமம் முடிவுற்று மறுபிறப்பற்றவராவார் என்ற முடிவிலிருந்து விடையை ஊகித்தறியலாம். கண்டது என்ற விடத்து தான் கண்டது, தன்னைக் கண்டது என இருவகையாகப் பொருள் கொள்ள நிற்பினும் தான் காண்பது என்பதில் அசத்தாகிய பிரபஞ்சமும் அடங்குமாதலால் அது இங்கு பொருந்தாது. ஆகையால் கண்டது என்றதற்குத் தன்னைக் கண்டது என்றே பொருள் கொள்ளவேண்டும் ஆனால் கண்

டது என்றால் தான் கண்ட மெய்க்காட்சி என்று கூறலாகாதோ எனின் மெய்க்காட்சி கண்ட பொருளைப் பொருத்து பல திறப்படும். அசத்தாகிய உடல் உலகங்கள் சதசத்தாகிய பொருள்களின் இயல்புகளை சீவன் அறியக் கிடத்தலால் மெய்க் காட்சி எனப் பொதுப்பட கற்பனை செய்து பொருள் காணுதல் போலிப் பொருளாகும். சித்தாந்த செந் நெறியின்படி காட்டக் கண்டது சீவன் என்றும், காட்டிக் கண்டது சிவன் என்றும் அறியக் கிடத் தலால் கண்டத்தைக் கொண்டு என்றவிடத்து காட்டக்கண்ட சீவனைக்கொள்ளுதற்கு இயைபில்லை யாகையால் கண்டுகாட்டும் முதல்வனின் உபகரிப் பைக்கொண்டு என்று பொருள் கூறினும் பொருந்தும்.

இங்கு கருமம் என்றது முப்பிரிவாயுள்ள கரும பாசத்தை அன்று; உடலெடுப்பதற்குக் காரணமான பிராரத்தவினையை. ஏனெனில் உடல்கொண்டு இங்கு செய்வதெல்லாம் அவ்வினையின் பயனை அநுப விக்கத்தான் ஆதலால் என்க. இவ்வாறு செயலாற் றுமிடத்து யான் எனது என்னுஞ் செருக்கினாலும் விருப்பு வெறுப்பினாலும் புதிதாக உடன் உண்டா கும் முயற்சிவினை என்னும் ஆகாமியவினையும் கருமம் என்றதனுள் அடங்கும். ஆனால் கருமம் என்றதற்குக் கருமபாசம் என்று கொள்ளுமிடத்து சஞ்சித வினைத்தொகுதியும் அதனுள் அடங்கும். அப்போது அக்கருமத்தையும் செய்துமுடித்தல் எனின் பிறப்பிற்கு முடிவு காணமல் பிறவிக் கட லிற் கிடந்து தடுமாறித் திரிய வேண்டியதுதான்.

ஆனால் மேற்கூறியவாறு பிராரத்த ஆகாமிய வினைப்பயன்கள் எஞ்சி நிற்காமல் செயலாற்றும் மெய்யடியாரின் சஞ்சிதவினைக் கூட்டம் சிவனருளால் குருமூலம் வெந்தழிந்து தத்தபடம் போல் செயலறும். ஆயினும் அதனை அடியாரின் செயலோடு பொருந்தி உரைத்தல் பொருந்தாது.

(கருத்து): இகத்தும் பரத்தும் அத்துவிதமாய் மக்களின் அறிவகத்துள் நின்று உபகரித்துவரும் முதல்வனைப்பற்றி நிற்கும் அதீத சிவநிட்ட ஞான யோகி உடற்கருமங்களை அடிமையாகச் செய்து தீர்த்து பிறவியை ஒழிக்கக்கடவன் (என்றவாறு).

37. (இதுவுமது)

சென்ற நெறியெல்லாம் செந்நெறி யாம்படி
நின்ற பரிசு அறிந்து உந்தீபற
நீ செயல் செய்யாதே உந்தீபற. (37)

(கொண்டுகூட்டு): (நீ) சென்ற நெறியெல்லாம் செந்நெறியாம்படி (முதல்வன்) நின்ற பரிசறிந்து நீ செயல் செய்யாதே என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): நீ இதுகாறும் கடைப் பிடித்து ஒழுகிவந்த சரியை முதலிய ஞானபாதங்களின் வழியாகிய இத்துரிய மெய்ந்நிலை (யில் திருவடி)யை அடையும் படியாக (சரியை முதலிய ஞானநெறிகளை ஆன்மாக்களின் பக்குவத்துக்கு ஏற்றவாறு அமைத்து ஆகமங்களை உண்டாக்கித்

தந்ததுமன்றி) முதல்வன் உன்னுடன் கூடி (கண்டு காட்டும் உபகாரத்தைச் செய்து) நிற்கும் பண்பை யறிந்து (யாதும் அவன் செயலெனக்கண்டு தற்போ தங்கொண்டு) செயல் செய்வதை இனி செய்யாது ஒழிவாய்; என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலே உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): செந்நெறி என்றது சித்தாந்த மெய்ந்நெறியை. ஏனெனில் முதல்வனுடைய திரு வடிப் பேற்றை அடைவிக்கும் நெறி இதுவே ஆக லான் என்க. மேலே 25 (36), 26 (13) 27 (29)வது செய்யுட்களில் குறிப்பிட்ட சிவதுரிய துரியாதீத நிலைகளையடைவதற்கு உபாயமாய் அமைந்த நெறி களையும் அவற்றினுக்கு அகத்துணையாய் அமைந்த முதல்வனுடைய பண்பையும் இங்கு எடுத்தோதி யுள்ளார். நீ என்றது துரிய சிவநிலையையடைந்த ஞானசாதகனை முன்னிட்டு. நீ என்றதை முதலி லுங் கூட்டிப் பொருள்காண வேண்டும்.

முதல்வனுடைய திருவடியைக் கண்டுபற்றி நிற்கும் நிலை நாலாம்யோக பூமியாகிய சிவதுரிய நிலை யாதலால் இதனையடைவிக்கும் நெறி செந் நெறியாயிற்று. இச்செந்நெறிக்கு உபாயமாய்க் கைக்கொள்ள வேண்டிய சரியை முதலிய ஞான பாதங்களை நீ சென்ற நெறி எல்லாம் என்று குறிப் பிட்டார். சித்தாந்த மார்க்கத்தைத் தழுவுவதற்கு முன் பல சன்னங்களில் பின்பற்றி வாழ்ந்த புறச் சமயங்களும் நெறிஎல்லாம் என்ற தொடரில் அடங் கும். புறச்சமய நெறிகள் எல்லாம் சித்தாந்த

நெறிக்குச் சோபான மார்க்கங்களாகவே அமைந்திருக்கின்றன என்ற உண்மையை உணர்ந்து ஒழுகுவோர் சித்தாந்திகள்தான்.

சரியை முதலிய நெறிகளின் வழியாக சிவநிலையடையப்படும் என்ற உண்மையை மேலே எடுத்துக்காட்டிய மூன்று செய்யுட்களிலிருந்து காணலாம். இந்நிலையை எய்தும் வண்ணம் ஆதிமுதல் சன்னங்கள் தோறும் சாதகனுக்கு முதல்வன் உடன் நின்று உபகரித்து வருவதைச் சாதகன் உணர்ந்து தன் அகத்துணையாய் நின்ற பரிசையுணர்ந்து கடைப்பிடிக்க வேணும் என்பார், செந்நெறியாம்படி முதல்வன் நின்ற பரிசரிந்து என்றார். முதல்வன் என்றது சொல்லெச்சம். நின்றபரிசு என்றவிடத்து யார் அல்லது யாது நின்ற பரிசு என்றெழும் வினாவிற்குரிய விடையை மாணுக்கன் ஊகித்தறியவிட்டார். இங்கு செந்நெறி நின்ற பரிசு என்று கொள்ளல் பொருத்தமில்லை. சென்ற நெறிகள் கடந்து கைவிடப்பட்டவை யாதலால் அவை நின்ற பரிசறிவது செந்நெறி நிற்பவருக்குப் பயன் ஒன்றும் பயவாது என்பது வெளிப்படை. நீ நின்ற பரிசு என்று கொள்வோமாகில் அந்நெறிகளில் நீ நின்றபோது தற்போதங்கொண்டு செயலைச் செய்துவந்தவன் நீயாகையால் அப்பரிசு அறிந்தால் இப்போது திடீரென்று நீ செயலை ஒழிப்பதென்பது (காரணத்தைவிட்ட காரியமாய்) முரணாய் முடியும். ஆதலால் நின்ற பரிசரிந்து என்றவிடத்து முதல்வன் நின்ற பரிசறிந்து என்றே கொள்ளவேண்டும். பரிசறிந்து செய்யவேண்டியது என்ன என்பதையும்

உடன் கூறினர். செயல் செய்யாதே என்ருர். அதாவது 'தற்போதங்கொண்டு இனி நீ செய்யக் கடவது ஒன்றுமில்லை என்றவாறு. முதல்வனுடைய கண்டு காட்டும் உபகாரம் இடைவிடாது நிகழ்ந்து கொண்டிருப்பதை உணர்ந்தாலன்றி யாதும் அவன் செயல் எனக் காண்பதற்கு இடமில்லை. யாதும் அவன் செயலெனக் கண்டாலொழிய தற்போதத்தைக் கைவிட்டு சும்மா இருத்தற்குப் பொருத்தமில்லை, என்ருர் என்க.

> ''ஆராயும் வேளையில் பிரமாதியாளுலும்
> ஐயவொரு செயலுமில்லை''
> ''பாராதிதனிலுள்ள செயலெலாம் முடிவிலே
> பார்க்கினின் செயலல்லவோ''
> ''எல்லாமுனடிமையே யெல்லாமுனு
> டைமையே யெல்லாமுனுடைய செயலே''
> ''யானெனதறத் துரிய நிறைவாக நிற்பதே
> யின்பம்''

என்று கூறியுள்ள தாயுமானுரின் பொன்மொழிகளைக் கண்டுதேர்க.

மேலும் துரியஞானயோகி அந்நிலையைக் கடந்து அதீத சிவநிட்டை கூடிச் சாதித்துத் தன் இழப்பில் முதல்வனேடு ஒன்ருய் அவனேயாய் நின்று பரமுத்தியும் பரமானந்தப்பேறும் எய்த வேண்டியனுகையால் அவன் தற்செயல் இழந்து சிவப்பணியில் நிற்கப் பழகினுலொழிய சிவானபூதி கிட்டாது. ஆதலால் துரியஞான யோகியை

நோக்கி இனிநீ தற்போதங்கொண்டு செயல் செய்யாதே என்ற உபதேசத்தைச் செய்தார் என்க.

இவ்வாறன்றி சென்ற நெறியெல்லாம் செந்நெறியாம்படி என்றதற்கு மறுமைக்கு வித்தாகிய குற்றங்களை விளைவிக்கின்ற விடயவழி தானே ஐயமற்ற சூதான பெருவழியாம்படி என்றும் நீ செயல் செய்யாதே என்றதற்கு உன் செயலாலே திருவடி கூடத்தக்கது என்று பாவித்து சனன மரணங்களிலே விழுந்து அழுந்தாதே என்றும் சொற்களின் பொருளுக்குப் பொருத்தமில்லாமல் மனம்போனபடி பிரசங்கித்தல் செய்யுட்பொருளை விளங்க வைத்தல் ஆகாது எனக் காண்க.

(கருத்து): துரியஞானயோகி சிவானுபூதியடையும் பொருட்டு தற்போதச் செயலையொழித்து இறைபணியில் நிற்கக் கடவன் (என்றவாறு)

38. (அறிவின் முடிந்த பயன்)

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீ அறிந்து உந்தீபற
அறிந்தறியா வண்ணம் உந்தீபற (38)

(கொண்டுகூட்டு): வரகுக்கு பொற்கொழுக் கொண்டு உழுவது (உண்பது) ஏன்? அக்கொழு நீயறிந்து (பலனையும்) அறிந்து அறியாவண்ணம் (உழுதுண்) என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்) அற்பமாகிய வரகுதானியப் பலனை வேண்டி பொன்னாற் செய்யப்பட்டகாறு

கொண்டு) (நிலத்தை முயன்று) உழுதுண்பது எவ்வகைத்தாகும்? (அறியாமையின் பாற்படும் என்றவாறு) ஆதலால், அப்பொற்கொழு போன்றதொரு உபகரணம் உன்னகத்தில் (தெளிந்த வியாபக அறிவாய் நிற்பதை) நீயறிந்து (அசத்தாகிய உலகபோகத்தைக் கைவிட்டு அவ்வறிவைக் கொண்டு அடையக்கூடிய சிவபோகம் என்னும்) பெரும் பலனையும் அறிந்து (அதனை விளைவித்து) தற்போதங்கொள்ளாமல் (அநுபவிப்பாயாக) என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): உணவு தானியங்களில் மிக்க கீழ்மையானது வரகு என்பது அநுபவம். கொழு வகையில் பொற்கொழு தலைசிறந்ததாகும். வரகு தானியத்தை விளைவித்து உண்ணும் பொருட்டு அரசனாயினும் அவன் ஆளக்கூடிய பொற்காறு கொண்டு நிலத்தை உழச்செய்து வரகை விளைவித்து உண்பானாகில் அது பயித்தியக்காரனுடைய செயல் எனக்கண்டு உலகம் பழிக்கும். உழவுத் தொழிலின் நுட்பமறிந்த வேளாளன் எவனும் அவ்வாறு செய்ய இசையான் ஆதலால் அவ்வித செயல் நுண்ணறிவற்ற மூடனின் செயலெனத் தகும். இதனை உபமானமாகக் கொண்டுரைத்தார் ஆசிரியர். ஆனால் உபமேயப்பொருளின் ஒற்றுமைப் பகுதிகளை விளக்காமல், உய்த்துணர வைத்தார். முதற்கண் அப்பொற்கொழுவை நீ அறிவாய் என்றார். அதுபோல் வரகு எதற்கொப்பு, உழவும் உண்ணலும் எவ்வெவற்றினுக்கு ஒப்பு என்பனவற்றை ஞான

மாணுக்கன் தெரிந்து கொள்ளட்டுமென்று விளக்காமல் விட்டார்.

உழவுநிலம் தன்னகம்; அற்பமாகிய வரகு தானியம் அசத்தாகிய உலகவிடயபோகம்; இருப்புக் கொழு சிற்றறிவு; பொற்கொழு உயிரின் விரிந்த பதிஞானம்; உழவன் ஞானசாதகன்; நிலத்தில் விளையக்கூடிய மேதக்க அநுபவ விளைபொருள் சிவ போகம்; சிவயோக ஞானப்படிகளில் நின்று சாதித்தல் வேளாண்மை; சிவபோகந்துய்த்தல் இந்த செவ்விய வேளாண்மைப் பலனை புசித்தலாகும் என காணக் கிடக்கின்றன.

சித்தசித்தாயுள்ள சீவன் அசத்தாகிய உலக போகத்தைக்கண்டு ஒருவி சித்தாந்தன்மையில் முதல்வனுடன் ஒப்பு கூற நிற்கும் தன் இயல்பை அறிந்து சார்ந்ததன் வண்ணமாந் தனக்குத்தஞ்சம் முதல்வனுடைய திருவடிதானென்றுகண்டு அதனை யறிந்துபற்றும் அறிவைப் பொற்கொழுவுக்கு ஒப்பிட்டார். அசத்துடன்கூடி அசத்தாய் நின்று சிற்றின்பவிடயபோகத்தை விளைவிக்கும் சிற்றறிவு வரகுக்கு உழவேண்டிய இருப்புக் கொழுவுக்கு ஒப்புகூற நின்றது. ஒரு பரிசனவேதியின் ஆற்றல் கொண்டு களிம்பின் நீக்கத்தில் கரும்பொன்னுஞ் செம்பொன்னுமாறு போல அருட்பதிவின் உதவி கொண்டு அஞ்ஞான மலநீக்கத்தில் சிற்றறிவு என்னும் இருப்புக்கொழு வியாபக அறிவு அல்லது பதிஞானம் என்னும் பொற்கொழுவாக மாறுதலடையுமென்பார் அப்பொற் கொழுவை நீ அறிவாய்

என்றார். கொழுக்கொண்டு நிலத்தையுழுது பண் படுத்தல். அதனின்றும் விளைபலனை உண்ணும் பொருட்டாகலான் உழுவதென் என்றவிடத்து உழுதுண்பது என்? என்று விரித்துரைக்கப்பட் டது. எவன் என்ற சொல் இடைக்குறையாய் என் என மருகி இகழ்ச்சிக் குறிப்பாய் இச்செயல் இழி செயல் என்பதை உணர்த்திற்று. அறியாமையின் பாற்படும் என்றது குறிப்பெச்சம்.

இதிலிருந்து அறியக்கிடப்பது யாதெனின் கூறுதும்; சீவன் கேவலநிலையில் அநுபவிக்கும் விடுதலைக்கு வழி காணாத துயரத்துக்கும், சகலநிலை யில் பிறவிக்கடலிற் சிக்கியுழலும் நீங்கா அல்லலுக் கும், சுத்த நிலையில் இறைவனது திருவடியிற்கூடி அநுபவிக்கும் நித்தியானந்தத்துக்கும் அதன் அறிவின் வெவ்வேறான சேர்க்கையே காரணமா யிருக்கிறது. இஃதன்றியும் அறிவே சீவனின் உண்மைவடிவு என்றறியலாம். ஏனெனில் அறிவு கெட அது கெட்டு அறிவு சுருங்க சுருங்கி அறிவு விளங்கி வியாபிக்க அதுவும் வியாபிக்கின்றது ஆதலாலென்க.

"அறிவுவடிவென்று அறியாத என்னை – அறிவு
வடிவென்று அருள்செய்
தான்நந்தி-அறிவுவடிவென் றருளால்
அறிந்தே–அறிவு வடிவென்
றறிந்திருந்தேனே"

என்ற திருமந்திரச் செய்யுளைக் காண்க. பகவத் கீதையில் சாங்கியயோக அத்தியாயத்தில் 'அன்ன

வகை யாலுரு அழிந்து வருமாங்கே—என்னுருவ மாமறிவிறந்து பிறவாதால்'' என்று கண்ணபிரான் கூறியிருப்பதையுங் காண்க.

ஆதலால் அறிவே தன் வடிவமென்று ஓர் ஞான சாதகன் தன்னறிவு கொண்டு அநுபவமாகக் காண் பானெனில் அறியாமையென்னும் இருட்பிடி யினின்றும் அசத்தின் விபரீதப் பிடிப் பினின்றும் அவன் விடுதலைபெற்று தன் அறிவுக்கு அறிவாகிய ஞானசொரூப முதல்வனோடு ஒன்று கூடி நித்திய சூரியனோடு ஒன்றாய் மிளிர்வான். அறிவைக்கொண்டு மற்றெப்பொருளை யறியினும் அது அறிவாகாது. அறிவைக்கொண்டு அறிவை யறிதலே அறிவுடையமைக்குச் சிறப்பாகும் என்றார் மெய்யுணர்ந்தோர் "இயலறிவ திசையறிவ தின மறிவ துளவாம் – அயலறிவதறிவதல அறிவறிவ தறிவே'' "தன்னையறியத் தனக்கொரு கெடில்லை– தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்—தன்னை யறியும் அறிவையறிந்தபின்—தன்னையே அர்ச்சிக் கத் தானிருந்தானே''. "அறிவறிவென்ற அறிவு மனாதி—அறிவுக் கறிவாம் பதியும் அனாதி—அறி வினைக்கட்டிய பாசம் அனாதி—அறிவுபதியிற் பிறப் பறுந்தானே'' என்ற மெய்ஞ்ஞானிகளின் அநுபவ மொழிகளை யோர்க.

ஆதலாற்றான் இங்கு ஆசிரியர் ஓர் ஞான உழவன் என்னும் சாதகன் தன்னகத்துறையும் மெய் யறிவு என்னும் பொற்கொழுவையறிந்து பற்றிக் கையாண்டு அறிவின் முடிந்த பயனாகிய நித்திய

பேரானந்த வாழ்வென்னும் திருவடிப் பேற்றை அடையக்கடவன் என்று போதித்தருளினர்.

அறிந்தறியாவண்ணம் என்றதில் முன்னின்ற அறிந்து என்ருல் எதையறிந்து என்ற வினவிற்குப் பொற்கொழுகொண்டு அடையப்படும் பலனை என்ற விடைதான் கொள்ளத்தகும். பொற்கொழுவுக்கு ஒப்பாகத் தன்னகத்துள்ள தூய மெய்யுறிவுகொண்டு அடையக்கிடக்கும் மேதக்கபலன் சிவபோகம் என்றறியவரும். ஆதலால் அறிந்து என்றதற்கு சிவபோகம் என்னும் பயனையும் அறிந்து எனச் சொல்லெச்சமாகக்கொண்டு உரைசெய்யப் பட்டது. பொற்கொழுவையறிந்ததன்றிப் பலனையும் அறிவாய் என்ருர் என்க. ஏனெனில், ஒரு கருவியைக்கொண்டு பணியாற்றி அடையக்கூடிய பயனையறிந்து பற்றினலன்றி அக்கருவியைக் கையாள மனமிசையாது ஆகலான் என்க.

அறியாவண்ணம் என்றதற்கு வினைமுடிவைக் கூருமல் எச்சமாக நிறுத்தினர். ஏனெனில், உபமானத்திலிருந்து அறியக்கூடிய வினைமுடிவைப் பொருளிலும் இசைத்துப் பொருள்காணவேண்டிய கடமை நுண்ணறிவு படைத்த ஞான மாணுக்கனுக்கு ஆகுமெனக் கொண்டார் என்க. வரகுக்கு உழுதுண்பது என் என்ருராகையால் நீயறிந்த பொற்கொழுக்கொண்டு அடையக்கிடக்கும் பயனையறிந்து விளைவித்து அறியாவண்ணம் உண்பாய்

(அநுபவிப்பாய்) என்ற வினைமுடிவைக் கூட்டிப் பொருள்காணக்கிடக்கின்றது.

அறிதல் உயிரறிவைக்கொண்டுதானுகையால் அறியாவண்ணம் என்றதற்குத் தற்போதங்கொள்ளாமல் என உரைநிகழ்த்தப்பட்டது. தற்போதமின்றி சிவபோகம் அநுபவிப்பாய் என்றது என்னவெனின் கூறுதும். ஞானசிவயோகி பாசத்தை விட்டுத் துரியநிலையில் தன்னையறிந்து திருவடி ஞானம் பெற்று அருளில் அடங்கி இறைபணியில் நின்று சிவபோகத்தை நாடி ஞானத்துரியாதீதத்தே மீதான இன்பபூமியை விரைந்தடைந்து அங்கு விரவி விரவி முயற்சித்து ஞான சிவநிட்டை கூடித் தன்னை இழக்கின்றுன்; தற்போதங் கெடுகின்றுன்; முதல்வனேயாய் ஒன்றுபட்டு நிற்கின்றுன்; சிவபோகந்துய்க்கின்றுன்; என்று சிவாகமமும் சிவஞானிகளும் கூறினுர்கள். ஆதலால், அறியாவண்ணம் சிவபோகத்தை உண்பாய் என்றுர் என்க. முன்னர் 40வது (20) செய்யுளில் சிவபோகம் விளைபூமி இரவு பகலில்லா இன்பவெளி என்று குறிப்பிட்டிருப்பதைக் காண்க.

மேலே 25வது (36) செய்யுளில் மனமிறந்த நிலை எனக் கூறினுர். 37வது (37) செய்யுளில் அந்நிலையை எய்துவதற்கு முதல்வனின் திருவருளையுணர்ந்து யாதும் அவன் செயலெனக்கண்டு தற்போதமிழந்து இறைபணியில் நிற்கவேண்டிய உபாயத்தைக் கூறினுர். இச்செய்யுளில் அவ்வுன்னத நிலையில் பசுத்துவம் அறவே நீங்கியுள்ள

சிவஞானயோகி அதீத நிலையடைந்து அநுபவிக்க வேண்டிய சிவபோகம் என்னும் முடிந்தபேற்றைக் கூறினர் என்க.

அறிந்து என்பதை இரட்டுற மொழிந்து கொண்டு சிவபோகமென்னும் பலனையுமறிந்து அதனை அறிந்தறியாவண்ணம் உண்பாய் அதாவது சிவஞானத்தால் அறிந்து தற்போதங்கொள்ளாமல் அநுபவிப்பாய் என்று கூறுதலும் ஒருவகை.

(கருத்து): பசுபாச அறிவுகள் நீங்கி மெய்யுணர்வு விளங்கிய சிவஞானியின் உயிரானது முதல்வனது அருளில் முந்தியமுந்தி மறைப்புண்டு அவனேயாய் நின்று சிவபோகத்தைத் துய்க்கும் (என்றவாறு).

39. (அத்துவித முத்திப்பேறு)

கள்ளரோடு இல்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாம் என்று உந்தீபற
வீடும் எளிதாம் என்று உந்தீபற. (23)

(கொண்டு கூட்டு): கள்ளரோடு இல்லம் உடையார் கலந்திடில் வீடும் எளிதுஆம் வெள்ள வெளிஆம் என்று உந்தீபற உந்தீபற.

(இதன் பொருள்): (உடலுள்) கள்ளரைப் போன்று ஒளிந்து நிற்பவனாகிய முதல்வனுடன் சிறு வீடுபோன்ற உடலுக்கு உடையானாகிய சீவன் (எதிர்த்தும் விலகியும் இராமல்) ஒன்றுபட்டால் முத்தியடைதல் சுலபமாய்க் கைகூடுவதுமன்றி

பரந்த இன்பவெளியும் சுலபசாத்தியமாகும்; என்ற றிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக் கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): இது சிலேடைச் செய்யுள். இதிற் கண்ட உபமானமாவது; ஒரு இல்லத்துற்ற பொருளை வெஃகவருங் கள்வரோடு அவ்வீட்டில் வசிப்பவர் எதிர்க்காமலும் விலகி நில்லாமலும் கலந்து கூடி நின்றால் வீட்டினுட்புகுதல் சுலபமாய் அமையும். அஃதன்றியும் வீட்டிலுள்ள பொருளும் மறைப்பின்றி எளிதில் கைப்பற்றக் கிடைக்கும். இது வெளிப்படைப் பொருள். இப்பொருளை உபமேயப் பொருளில் அமைத்து செய்யுளின் உண்மைப் பொருளைக் காண வெண்டும்.

இங்கு கள்ளர் என்றது எவருங் காணமல் உடலகத்துள் புகுந்து மறைந்துறையும் பதியாகிய முதல்வனை. மகனின் ஊழையொட்டி அவனுக்குரிய தூலவுடலை ஆக்கி அதனுள் மகனைப்புகுத்தித் தானும் திரோதான சக்தி வடிவில் கூடவே புக்கு, மகன் சுகதுக்கங்களை உண்ணும்பொருட்டு அவற்றின் குண தோடங்களை மறைத்து உண்பித்து தான் மறைந்து நிற்றலால் தீவிர பத்தர்கள் முதல்வனைக் கள்வனென்று துதி செய்தார்கள். “என்னுள்ளங் கவர் கள்வன்”; “கலைநின்ற கள்வனைக் கண்டு கொண்டேன்”; “கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தி” “சற்பனைசெய் கின்றதிரோ தானமெனுஞ் சத்தியினாற் — கற்பனைசெய் தேமயக்குங் கள்வனெவன்—முற்படுமித்—தொண்டுலகில் உள்ளவுயிர்

தோறுமொளித் தாற்றலெலாங் கண்டுலவுகின்ற தொருகள்வனெவன் – விண்டகலா – மண்மயக்கும் பொன்மயக்கும் மாதர் மயக்குமெனுங் கண்மயக்கங் காட்டிநிற்குங் கள்வனெவன்'' என்று திருவருள் துதிப்பாசுரங்களை நோக்குக.

உள்ளத்தைக் கவர்தல் உயிரை மேம்படுத்தும் பொருட்டாகலான் உலகப்பொருளை வெஃகுதலோடு ஒவ்வாது வேறுபட்டிருப்பினும் பத்தியிற் பட்டோ ராகிய சிவயோகிகளும் ஞானிகளும் முதல்வனைக் கள்வன் என்றது நிந்தாத்துதி. அவ்வாறே இச் செய்யுட் பொருளையுங் காண்க.

மேலும் சிவஞானபோதம் 9ம் சூத்திரம் 1வது அதிகரணத்துள்ள ஓர் உதாரண வெண்பாவில் ''உள்ளத்தின்கண் ஆய — கள்வன்தான்'' என்று முதல்வனை உள்ளத்தில் உடனாய் நிற்குங் கள்வன் என்றார். இதற்கு சிவஞான முனிவர் உரை நிகழ்த் தியதில் ''தோற்றாது நிற்றல்பற்றி முதல்வனைக் கள்வன் என்றார்'' என்று காரணங்கூறியதுமன்றி ''மறைந்து நிற்கும் முதல்வனை உள்ளத்திற் காண வல்லார்க்கு அக்கள்ளந் தீர்தலின் தம்மையும், முதல் வனையும் காண்டல் கூடும்'' என்றுரைத்து இதற்கு மேற்கோளாக இத்திருவுந்தியார் செய்யுளின் முதலி ரண்டு அடிகளையும் எடுத்துக் காட்டியுள்ளார் என் பதை அறிக. இக்கருத்துப்பற்றியே திருமூல தேவரும் ''காயப்பைக்குள் நின்ற கள்வன் புறப் பட்டால்—மாயப்பை மண்ணை மயங்கியவாறே'' என்றார்.

கள்ளனாகிய முதல்வனும் இல்லமுடையானாகிய சீவனும் அத்துவிதமாய்க் கலந்து ஒன்றாய் நிற்பதை அநுபவத்தில் உணர்ந்தால் பிறவித்துன்ப நீக்கம் என்னும் வீடு எளிதிற் கிட்டும் என்பார் வீடும் எளிதாம் என்றார். முதல்வன் உயிருடன் எப்போதும் பிரிப்பின்றி நிற்கினும் சீவனுடைய அஞ்ஞானநிலையில் அக்கூட்டுறவை சீவன் அறிவதில்லை. அதன் பயனாக பந்தமும் துக்கமும் அடைகின்றான். மெய்யுணர்ந்தபின்னர் மெய்யறிவு கொண்டு உள்ளத்தில் மறைந்திருக்கும் முதல்வனை அங்கே காண்பவனுக்கு அம்மறைப்பு தீர்தலினால் தன்னையும் முதல்வனையும் உள்ளவாறு காண்கின்றான். அப்போது முதல்வனுக்கும் உயிருக்குமுள்ள அத்துவித சம்பந்தம் சுவானுபவமாய் அறியப்படுகிறது. அதன் பயனாக அஞ்ஞானத்தினின்றும் விடுதலையும் சிவானந்தப்பேறும் சித்திக்கின்றன. அத்துவித சம்பந்த விசேடக் காட்சியைத்தான் முதல்வனுடன் இரண்டறக் கலத்தல் என்று கூறுவர் சித்தாந்த சிவஞானிகள்.

"அத்துவித வத்துவை சொப்பிரகாசத்தனியை" என்று தாயுமானார் துதித்திருப்பதையும், "அந்த பரத்தோடிரண்டற் றயிக்கியமா(ம்)–அந்தநன்னிட்டையே உந்தீபற–அத்துவித வீடென் றுந்தீபற" என்ற அவிரோத உந்தியாரின் செய்யுட்பொருளையும் ஓர்க.

வீடும் என்றதிலுள்ள உம்மை, சிறப்பு. மற்றொரு பயனாகிய சிவப்பேறு என்னும் ஆனந்தானுபவத்திற்

குரிய நிலையாகிய பரந்த இன்பவெளியும் சுலபமாய்க் கிடைக்கும் என்பார் வெள்ள வெளியாம் என்றார். வெள்ளம் மிகுதி; வெள்ளவெளி மிகுதியான அதாவது எங்கும் பரந்து நிறைந்துள்ள வெளி. எளிது என்ற சொல்லை இரட்டுற மொழிந்து வெள்ளவெளி என்பதனோடுங் கூட்டி வெள்ளவெளி எளிது ஆம் என்று உரை செய்யப்பட்டது. வெளி என்றவிடத்து உம்மை தொக்கி நின்றது. வீடும் எளிதாம் வெளியும் எளிதாம் எனல் வேண்டும். உம்மை எண்ணும்மை, – சிறப்பு எனினும் பொருந்தும்.

பிறவி நீக்கம் என்னும் வீடு முன்னரும் சிவானந்தப்பேறு முடிவாகவும் அடையப்பெறுவது அநுபவமாதலான் பொழிப்பில் வீடும் எளிதாம் என்றதை முன்னும் வெள்ளவெளியாம் என்றதைப் பின்னுமாக வைக்கப்பட்டது. இவ்வாறு கூறுதல் உலகப் பொருட்கள்வன் முதலிற் பண்டாரத்துட் புக்குப் பின்னர் போகப்பண்டங்களைக் கொள்ளை கொள்கிறான் என்ற உவமானப் பொருளுக்கும் பொருத்தமுடைத் தென்பதைக் காண்க.

இவ்வாறன்றிக் கள்வர் என்பதற்கு ஐம்புலக் கள்வர் எனக் கொண்டும் கலந்திடில் என்றதற்கு அக்கள்ளர்களைத் தன்வசம் பண்ணினல் என்றும் வெள்ளவெளியாம் என்றதற்கு சீவனுடைய இருதயம் வெளிக்கு வெளியாய்ப் பிரகாசமாய்விடும் என்றும் வெற்றுரை காணல் அறியாமையின்பாற் படும்.

(கருத்து); ஞானத்துரிய யோகி துரியாதீத நிலையில் முதல்வனோடு இரண்டறக்கலந்து முத்தி எய்தி சிவப்பேற்றையடையக் கடவன் (என்றவாறு).

40. (நின்மல துரிய சாக்கிரம்)

துரியங் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரம்
துரியமாய் நின்றது என்று உந்தீபற
துறந்தார் அவர்கள் என்று உந்தீபற. (32)

(கொண்டுகூட்டு): துரியங்கடந்த இத்தொண்டர்க்குச் சாக்கிரம் துரியமாய் நின்றது. அவர்கள் துறந்தார் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (மேலாலவத்தையில் நான்காவது யோகபூமி என்னும்) துரியநிலையைக் கடந்த (துரியாதீத நிலையில் சிவநிட்டையில் அமர்ந்திருக்கக்கூடிய) சிவனடியார் (எனத்தகும் ஞானி)க்கு (உறங்காதுறங்கும் நிட்டைநிலையிலிருந்து) விழிப்படைந்து நிற்கும் நிலை துரியமேயாகும். (அவர் அதன் கீழ்ப்படிக்கு இறங்குவதில்லை என்றவாறு) உண்மையில் துறவுநிலையில் இருப்பவர்கள் (அவ்வுன்னத நிலையையடைந்த சீவன் முத்தர்களாகிய) அவர்களே; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): மேலே 16வது (31) செய்யுளில் புறச்சமயங்களை ஒதுக்கச் சொன்னார் ஆசிரியர்.

ஆதலால் இத்தொண்டர் என்றது கொள்ளவேண்டிய சித்தாந்த சைவநெறியில் நின்று சாதித்துச் சிவனடியார் என்ற பூரணநிலையை எய்தினவரைக் குறித்து நின்றது. இவ்வடியாரின் உண்மை யிலக்கணத்தைத் திருமூலநாதரின் வாக்கிலிருந்து தெள்ளத்தெளிய அறிந்து கொள்ளலாம். "அடியார் சிவஞானமானது பெற்றோர்"; "அடியார் அருளில் அவனடிகூட – அடியா னிவனென்று அடிமை கொண்டானே"; அடியார் "அரனடி ஆனந்தங் கொண்டோர்"; "அடியார் பொன்னம்பலத் தாடல் கண்டாரே" என்ற போதனைகளைக் காண்க. தன்னை யுள்ளவாறு கண்டு பாசத்தை ஒருவி முதல்வனுடைய திருவடியைக் கண்டு பற்றி நிற்பவர் மேலாலவத்தையில் துரியஞான பூமியில் நிற்பவராவார். அந்நிலையினின்றும் அப்பால் தாண்டித் துரியாதீத நிலையில் சிவஞான நிட்டையிற் படிந்து பாசப்பற்றையும் அறுத்து சிவோகம் பாவித்து நிற்பவரைத் தொண்டர் அதாவது சிவன் அடியார் என்ற திருப் பெயரால் உணர்த்தினர் ஆசிரியர்.

உயிரானது மும்மலங்களோடுங் கூடி சகலநிலையில் இப்பூமியில் வாழும்போது மூன்று பிரிவாயுள்ள சகலத்திற் சகலம் சகலத்திற் கேவலம், சகலத்திற் சுத்தம் என்ற மூன்று நிலைகளிலும் வாழும் உரிமை கொண்டுளது. இம்மூன்று நிலைகளையும் தனித் தனியே மத்தியாலவத்தை கீழாலவத்தை மேலாலவத்தை என்று கூறுவர் மெய்யுணர்ந்தோர். இம் மூன்றில் முதலிரண்டு நிலைகளிலும் உயிர்நிற்கும் போது சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளையும்

இயற்கையாகவே அது மாறி மாறிப்பற்றி வருவதாகும். நினைவோடுங்கூடி உலகவியாபாரத்தில் நின்று தொழில் புரியும் நிலை சகலத்திற் சகலமாகிய மத்தியாலவத்தையாகும். தொழிலைக் கைவிட்டு நீங்கி ஒய்வு கொள்வதற்கு உறங்கத் தொடங்கும் நிலை சகலத்திற் கேவலமாகிய கீழாலவத்தையாகும். இவற்றின் ஒவ்வோர் நிலையிலும் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்ற ஐந்து உள்நிலைகள் உண்டு. சித்தாந்த சரியை முதலிய ஞானபாதங்களைக் குருமுகமாய் ஏற்று முதல்வனை நாடி வந்தனை வழிபாடுகள் முதலியன செய்தல் சகலத்திற் சுத்தம் என்னும் மேலாலவத்தையாகும். இதிலும் சாக்கிரமாதி ஐந்து அவத்தைகள் உயிருக்கு உண்டு எனினும் இவ்வைந்தும் மேலான வேறு பயனைத் தரத்தக்கனவாகும்.

ஞானபாதத்தைப் பற்றாத மத்தியாலவத்தை கீழாலவத்தைகளிலுங்கூட துரிய துரியதீத அவத்தைகள் உண்டாகலான் துரியநிலை துரியங் கடந்த நிலை என்று இதை யோகஞான நூலிற் கூறியிருப்பவை இவ்விரண்டு கீழான நிலைகளிற்கூடும் அவத்தைகளைக் குறிக்காமல் முற்றிலும் வேறான அநுபவத்தோடு கூடிய மேலாலவத்தையில் ஞானசாதகன் அடையாநிற்கும் துரியநிலையையும் அதற்கு மேலாயுள்ள அதீத நிலையையும் குறிக்குமென்று உரையிற் கூறப்பட்டது.

துரியாதீத நிலை என்பது முதல்வனின் அருளிற் படிந்து அதனால் மேவப்பட்டு சுட்டிறந்து நிட்டை

கூடி தன்னிழப்பில் முதல்வனோடு அத்துவித சம்பந்தத்தில் ஏகனாகி நிற்கும் நிலையாகும் என்பார் மெய்யுணர்ந்தோர். இந்நிலையில் உயிரைத் தவிர்த்து கருவி கரணம் யாதும் இல்லையாம்.

ஆனால் துரிய நிலையில் கருவிகளை விட்டுச் சுத்தமான சித்தம் மட்டும் உயிருடன் கூடி நிற்கும். சாக்கிர அவத்தையில் அறிபவனும் அறிவும் அறியப்படும் பொருளும் என மூன்று பொருள்கள் உண்டு. இதனைத் திரிபுடி என்பார். ஞானத்துரிய நிலையில் அறிபவன், அசத்தை ஒருவிய உயிர். அறிவு தானடிமையென்றும், முதல்வன் தன்னுடையானென்றும் அறிந்த அறிவு. அறியப்படும் பொருள், (சார்ந்ததன் வண்ணமாந் தன்னியல்பை உணர்ந்தபடியால்) முதல்வனுடைய திருவடியாகும் இவ்வாறாக ஞானத்துரிய நிலையில் திரிபுடி சித்தித்தலால் துரியாதீத சீவன்முத்தனும் சிவஞானிக்கு தற்போதம் இழந்த சிவரூபத் துரிய நிலை சாக்கிர நிலையாகும் என்பார் இத்தொண்டர்க்குச் சாக்கிரம் துரியமாய் நின்றது என்றார். ஆகையால்தான் துரியாதீத நிலையை சாக்கிராதீத நிலையெனவும், நின்மல சாக்கிர நிலையை சீவன் முத்த நிலையெனவுங் கூறுவர் மெய்ஞ்ஞானிகள்.

துரியாதீத நிலையடைந்த சிவயோகாரூட ஞானியைப் பாசக்கூட்டம் தழுவாது விலகி நிற்றலால் உண்மைத் துறவிகள் அவர்களே என்பார் 'துறந்தார் அவர்கள்' என்றார். மேலே 30வது (24) செய்யுளில் துரியஞானி உலகத்தை விட்டவராவார்

என்று கூறினர். இங்கு அதீத சிவ நிட்டரை உண்மைத்துறவி என்று கூறி துறவு நிலையின் இலக்கணத்தை விளக்கியுள்ளார் ஆசிரியர் எனக் காண்க.

(கருத்து): துரியாதீத சிவநிட்டர்கள் துரிய நிலைக்குக் கீழ் இறங்குவதில்லை (என்றவாறு).

41. (நின்மல சாக்கிர சிவபோகம்)

பெற்றசிற் றின்பமே பேரின்பமாய் அங்கே
முற்ற வரும்பரிசு உந்தீபற
முளையாது மாயை என்று உந்தீபற. (33)

(கொண்டுகூட்டு): பெற்ற சிற்றின்பமே அங்கே பேரின்பமாய் பரிசு முற்றவரும்; மாயை முளையாது என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (இகத்தில் தானாக) வந்தடையும் போகந்தானும் (துரியாதீத ஞானியாம் சீவன் முத்தனின்) நின்மல சாக்கிர நிலையில் பரபோகமாய் அதன் தன்மை மேன்மேலும் விளைந்து வருவதாகும். (பிறவிக்கு முதற்காரணமாகிய) மாயை அந்த ஞானியை பற்றாது ஒழியும்; என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): அங்கே-ஏகாரம் சிறப்பு-அங்கு என்றது மேலைச் செய்யுளிற் குறிப்பிட்ட (நிட்டை நீங்கியவழி எழும்) நின்மல சாக்கிர நிலையை. அங்கு பேரின்பமாய் என்றதனால் இங்கு பெற்ற

சிற்றின்பம் என்று உரைக்கப்பட்டது. சிற்றின்பமே என்றதிலுள்ள ஏகாரம் உயர்வு நவிர்ச்சி. தேற்ற மாகவுங் கொள்ளலாம். சிவஞான சீவன்முத்தருக் குத் தற்போதமில்லை. ஆதலால் அவருடல் கொள் ளும் உண்டி முதலிய தீங்கற்ற சிறுபோகங்கள் அவரிச்சையாலன்றி பிறர் இச்சையால் வந்தடை வனவாயினும் அவருடல் கொண்ட அவை சிற் றின்பம் எனப்பட்டன. ஆனால் அவர் தற்போதம் இழந்து தன்னிச்சையற்று தற்செயலற்று அவனே யாய் நிற்கப்பழகினவர். ஆதலால் அவருடைய துரிய சாக்கிர நிலையில் அவருக்கு வந்து கூடும் இக்போகத்தை உடன் நின்று கூட்டும் உபகாரத் தைச் செய்து வரும் முதல்வன் இவன் அவனாய் நின்ற நிலையில் தன்னருளாலே அநுபவித்தலால் அது பரபோகமாய் விளையும் என்பார் இங்கு பெற்ற சிற்றின்பம் அங்கு பேரின்பம் ஆம் என்றார்.

அப்போகம் கூடுமளவிற் சிறிதாயினும் இவன் அவனாய் நின்ற நிலையில் கொள்ளுங்கால் அது முதிர்ந்த பேரின்பமாய் மேன்மேலும் விளையும் என்பார் பரிசு முற்றவரும் என்றார். பரிசு – தன்மை அல்லது குணம் என்ற பொருளைக்கொள்ளும். தானம், ஈகை என்ற பொருள்கள் இங்கு பொருந்தாது எனக் காண்க.

துரியாதீத சிவநிட்டைநிலையில் யோகாரூட சீவன் முத்த சிவஞானி தன்னிழப்பில் முதல்வனே யாய் நின்று சிவானுபூதியைப் பெறுகிறான். ஆத லால் அந்த ஞானி துரியசாக்கிர நிலைக்கு நழுவி வருங்கால் "எங்குஞ் சிவமயமாய்

எங்குஞ் சுகவடியாய் எங்குஞ் சிவலோகத் தெல்லை யாய்-எங்குஞ் சிவனையே கண்டு தரிசித்தல் மாணு- சிவரூப மென்றே தெளி" என்றாற்போல அந்த ஞானயோகிக்கு எங்கும் எல்லாம் சிவானந்தமாகவே விளங்கும். சிவஞானபோதம் 10ம் சூத்திரத்தில் 2வது அதிகரணத்துள்ள ஓர் உதாரண வெண்பாவில் "எத்தனுவில் நின்றும் இறைபணியாளர்க் கில்லை வினை — முற்செய்வினையுந் தருவான்முன்" என்றும், "உடம்புடை யோகிகள் தாம் உற்ற சிற்றின்பம் — அடங்கத்தம் பேரின்பத்தாக்கி" என்று திருக்களிற்றுப்படியாரிலும், "காணுங் கரணங்க ளெல்லாம் பேரின்பமெனப் பேணுமடியார்" என்று திருவாசகத்திலும், "எல்லாஞ் சிவமாய் இருந்ததே" என்று மற்ற ஞானதேசிகரும் கூறியிருத்தலை இங்கு ஒப்புநோக்கிக் காண்க.

சிவஞானபோதம் 11ம் சூத்திரத்தில் 1வது அதிகரணத்துள்ள "ஏகமாய் நின்றே" என்ற தொடக்கமுள்ள உதாரண வெண்பாவிற்கு உரை நிகழ்த்திய சிவஞான முனிவர் முத்திநிலையில் நின்ற சிவயோகி இவனவனாய் நிற்குந் தன்மையினால் விடயங்கள் அவரைப்பற்றாது முதல்வனைப்பற்றும் என்று சொல்லி இத்திருவுந்தியார் செய்யுளை எடுத்துக் காட்டாக உபயோகித்திருப்பதையும் அறியவும்.

இந்நிலையை எய்திய சிவயோக ஞானிக்கு அஞ்ஞானம் நீங்கி மெய்ஞ்ஞானம் பிரகாசித்து ஆணவமலமுங் கருமமலமுங் கழுவப்பட்ட காரணத்தினால் கருமமலப் பயனையுறும் மாயாமலமும் சத்தியற்று

இற்றெழியும் என்பார், மாயை முளையாது என்றார். இவ்வாறன்றி மாயை என்றதற்கு இச்சையெனப் பொருள்கொள்ளல் அறியாமை.

(கருத்து): துரியாதீத ஞானயோகிக்கு நின்மல சாக்கிர நிலையில் எல்லாம் பேரின்பமாகவே அநுபவத்துக்கு வருவதுமன்றி மறுபிறப்பும் அறும் (என்றவாறு).

42. (பேரின்ப சுத்தநிலை)

இரவு பகலில்லா இன்ப வெளி யூடே
விரவி விரவிநின்று உந்தீபற
விரைய விரையநின்று உந்தீபற. (20)

(கொண்டுகூட்டு): இரவு பகலில்லா இன்ப வெளியூடே விரையவிரைய விரவி விரவிநில் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): இரவு பகல் என்னுங் கால வரையறையற்று விந்துநாதங்களைக் கடந்த சுத்த ஞான நிலையாகிய (முதல்வனுடைய திருவடி) இன்பஞ் சொரியும் (பாழில்) வெளியில் அதிவேகமாக முற்றிலுங் கலந்து நிற்பாய்; என்றறிந்து (அனுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): "இராப்பகலற்ற விடத்தே யிருந்து–பராக்கற ஆனந்தத்தேறல் பருகி–இராப் பகலற்ற இறையடி இன்பத்து–இராப்பகல் மாயை இரண்டிடத்தேனே" என்ற திருமந்திர செய்யுளை

யும், "ஆனந்தமயமாகி மனவாக்கெட்டாச் சித்துரு வாய் நின்றவொன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச் சிந்தை செய்வாம்"; "இரவு பகலில்லா விடத்து-ஏகமாய் நின்ற நின்னருள் வெள்ள மீதிலே யானென்பதறவு மூழ்கி" என்ற தாயுமானுரின் துதிப் பாடல்களையும் ஒப்பு நோக்குக. அதீதங்கடந்த சுத்தநிலையை சுத்தவெளி என்றும் முப்பாழ் கடந்த சுத்தப்பாழ் என்றுங் கூறுவர் மெய்ஞ்ஞானிகள். "துரிய அதீதம் சொல்லரும் பாழாம்" என்றதும் திருமந்திரம் அட்டாங்க சிவயோகத்தால் அடையப் படும் இந்த அதீத ஞானநிலையில் முதல்வனுடைய திருவடி இன்பம் மெய்ஞ்ஞானிகளின் அநுபவத் துக்கு வருவதாயுள்ளது என்பார் "இன்பவெளி" என்றார். இவ்வரிய மானுடவுடல் உள்ளபோதே இந்நிலையையடையக் கிடத்தலானும் இவ்வுடல் நின்றுழி நில்லாது விரைவில் அழியக்கூடிய தொன்று ஆகலானும் சிவசாயுச்சியப்பேற்றை விரைவில் துரியஞானி கைக்கொள்ளவேண்டுமென் பதையுணர்த்த விரையவிரைய என்று அடுக்கு மொழிகளால் போதித்தார். இன்பவெளியில் பூரண மாய்க் கலக்கவேண்டிய நிமித்தத்தை விரவிவிரவி என்னும் அடுக்குமொழி கொண்டு உணர்த்தினார்.

இவ்வாறன்றி, பாசத்தை ஒருவி பாசப்பற்றையும் ஒழித்து சிவதுரியநிலையையும் பரோட்ச ஞானநுபவ சிவரூபக் காட்சி நிலையையுங் கடந்து அதீத ஞானநிலையில் முத்தரால் அடையக்கிடக்கும் சிவப்பேறென்னும் பரமானந்த நிலையை துரிய சிவ யோகிக்குச் சொல்லால் உணர்த்தவந்த ஆசிரியர்

இன்ப வெளிக்கு அடைமொழியாகக் கூறியுள்ள இரவு பகல் என்ற சொற்களுக்கு மெய்யறிவில்லாத சகலரைப்பிடித்து நிற்கும்மாயை ஆணவங்களையும், உணர்வு ஒடுக்கங்களையும், பொருள்களாகக் கொண்டு செய்யுட்பொருளை விளக்குதல் சிவயோக நூலுணர்வு இல்லாதவரின் அறியாமையை வெளிப் படுத்தும் என நுண்ணறிவுடையோர் காண்பர்.

(கருத்து): துரியாதீத சுத்த திருவடிப் பேரானந்த நிலையை துரிய ஞானயோகி அதிவிரை வில் முயற்சித்துப் பூரணமாய் அடையக் கடவுன் (என்றவாறு).

43. (சிவானந்தப்பேறு)

பேரின்ப மான பிரமக் கிழத்தியோடு
ஓரின்பத் துள்ளான் என்று உந்தீபற
உன்னையே ஆண்டான் என்று உந்தீபற. (34)

(கொண்டுகூட்டு): உன்னையே ஆண்டான் பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பத்துள் ளான் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): (நீ அடிமையாகி அதன் வழிநின்று ஒன்றுனதைக் கண்ட) உனது ஆண்டா னுகிய முதல்வன் பேரின்ப வடிவினளாகிய பராசத் தியுடன் கூடி ஒப்பற்ற தெளிந்த இன்பமாகிய அநு பூதி இன்பத்துள் நிலைத்துளான். (அதாவது அநு பூதி இன்பத்தை உனக்கு ஊட்டி நின்றுன் என்ற வாறு): என்றறிந்து (அநுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்) மேலைச்செய்யுளிற் குறிப்பிட்ட துரியாதீத சிவயோகியாகிய முத்தனை முன்னிட்டுக் கொண்டு பேசிவரும் முத்திநிலையின் பயனை இங்கு ஒன்ருகக் கூறி முடிக்கின்ருர் ஆசிரியர். ஆண்டான் ஒரின்பத்துள்ளான் என இயையும். உன்னையென்றது அதீத நிலையில் முதல்வனேடு இவனவனுய் ஒன்றுபட்டு நிற்கும் ஞானியை.

ஆணவமலத்தால் அறிவு மறைப்புண்ட சீவனின் பெத்தநிலையைக் கண்டிரங்கி அத்துவித சம்பந்தத்தில் சீவனுடன் கூடிநின்று காட்டிக்காணும் உபகாரத்தைச் செய்து வருகிருன் முதல்வன். ஆனுல் மலகாரிய அஞ்ஞானத்திஞல் அறிவு மறைப்புண்டு கருவிகரணங்களுடன் கூடி சகல நிலையில் தான் அவையேயாய் நின்று சுகதுக்கங்களில் அழுந்தி துன்புறும் மகன் முதல்வனுடைய உதவியின்றித் தான் ஒரு விடயத்தையுங் கண்டு அநுபவித்தல் கூடாதென்ற உண்மையையும் தான் அடிமையாகவும் முதல்வன் தனக்கு ஆண்டாஞகவும் உள்ள சம்பந்தத்தையும் அறிவதில்லை. இது மகனின் பெத்தநிலை. முத்திநிலையில் சீவனுக்கு அந்நியமான பாசக்கூட்டத்தைக் கண்டு ஒருவி சிற்றறிவஞகிய தனக்குப் பேரறிவஞகிய முதல்வனது திருவடிதான் தஞ்சமென்று உணர்ந்து அதனைப்பற்றி நின்று ஆண்டாஞகிய முதல்வனுக்கு தான் அடிமையாமாற்றையும் அவனுடைய அத்துவித உபக்ரிப்பையும் உணர்ந்து துரியாதீத நிலையில் சிவநிட்டை கூடி தன்னையிழந்து முதல்வனது அருளில் அழுந்தி ஒன்றுபட்டு நிற்கும் நிலையில் சிவானுபூதி

என்னும் பிரத்தியட்ச பேரானந்தத்தை அநுபவித்து நிற்கிறான் முத்தன். ஆதலால் ஆண்டான் அடிமை சம்பந்தம் யோகாரூடஞான நிலையில் உயிரானது தானே உணரும் சம்பந்தானுபவம். இவ்வனுபவம் உண்டான ஞான்றே சிவானந்தப்பேறு எய்தும் என்பார் ஓர் இன்பத்துள்ளான் என்றார்.

ஓர் என்றது ஒப்பற்ற, தெளிந்த என இரு பொருள் கொள்ளும். இங்கு இவ்விரு பொருளும் பொருந்துமாதலால் ஓரின்பம் என்றதற்கு ஒப்பற்ற தெளிந்த இன்பம், அதாவது சுவானுபூதி இன்பம் என்று உரை செய்யப்பட்டது.

"இன்ப மயனீசன் இன்பம் விளைத்தலாற்
சம்புவெனும் பேருந் தகும்" என்று ஞானவள்ளலாரும்,

"இன்பமும் இன்பக் கலவியுமாய் நிற்கும்" என்று திருமூலர் பிரானும் கூறியுள்ளதுபோல் பேரானந்த சொரூபனாகிய முதல்வன் தானே பேரானந்தத்தை அநுபவிக்கிறான் என்றல் குற்றமாகுமாதலால் இவ்வானந்தத்தைப் பராசத்தியாக உருவகப்படுத்தி தன்னுடன் இரண்டறக்கலந்து நிற்கும் முத்தனின் பொருட்டு அப்பாகம்பிரியாளுடன் சுவானுபவ இன்பத்துள் நின்றான் என்று கூறினார். முதல்வன் அவ்வாறு நிற்றலால் தானாய் நிற்கும் முத்தனும் சுவானுபவ பேரின்பம் எய்தி நிற்கின்றான் என்றவாறு. முத்தன் பேரானந்தத்தை அநுபவித்தற்பொருட்டு முத்தியிலும் உடன் நிற்கும் தற்

பரன் கண்டு காட்டும் உபகாரத்தினல் அவ்வா னந்தத்தை யுணர்தலால் ஆன்மாச்சிரயம் என்னுங் குற்றம் தற்பரனைச் சாராது. இதனை சிவஞான போதம் 11வது சூத்திரம் 1வது அதிகரணத்துள்ள "ஏகமாய் நின்றே இணையடிகள்" என்ற தொடக்க முடைய வெண்பாவால் அறிக.

மேலே 10வது (5) செய்யுளில் ஏகனய் நின்ற முதல்வன் அநேகனுகி நாதனுகி ஆண்டான் என் ருர். இது மேலே விளக்கிக்கூறிய பொதுவான பெத்தநிலை. அதுகாலை அவன் நம்மை ஆண்டு வருவது அவன் அறிவானேயொழிய நாமாகிய சகலர் அறிவதில்லை. இங்கு உன்னையே ஆண்டான் என்ருரல்லது நம்மையே ஆண்டான் என்று கூற வில்லை. ஏன்? இங்கு முத்திநிலை எய்திய ஞான யோகியை முன்னிலையாக்கிப் பிரித்துக் கூறிய தனுல் என்க. அடிமையாகிய தனக்கு முதல்வன் ஆண்டான் என்று அறிந்தது நின்மல அவத்தையை அடைந்த சுத்தர்தான். ஆதலால் இது கூறியது கூறல் ஆகாது.

மேலே 7வது (14) செய்யுளில் கிடந்த கிழவி யைக்கிள்ளி எழுப்பி உடந்தையுடனே நின்ருன் முதல்வன் என்ருர். அந்தக் கிழவி ஆதிசத்தி என்னும் திரோதானசத்தி. மும்மலத்துள் அழுந்தி அம்மையிற் கிடந்த சிவனுக்குரிய மறுபிறப்புண்டா வதற்கு இத்தலைவியுடன்கூடி நின்ருன் முதல்வன். இங்கு பிரமக்கிழத்தி என்ற சொருபானந்தத் தலைவி யுடன் கூடி நின்று முத்தனுக்குச் சிவப்பேறு

அருளிச்செய்தான். அங்கு முதல்வன் நின்ற நிலையும் நிகழ்த்திய செயலும் இங்கு உணர்த்திய நிலையும் நிகழ்த்திய திருச்செயலும் வெவ்வேருனவை. அங்கு பெத்தனை முன்னிட்டு திரோபவம். இங்கு முத்தனை முன்னிட்டு அநுக்கிரகம் என்னுந் திருவடிப்பேறு.

(கருத்து): பதி அருளில் அழுந்தி பதியேயாய் நிற்கும் சீவன்முத்தனுக்கு சச்சிதானந்த முதல்வன் திருவடி நிழலளித்து பேரானந்தத்தில் நிலைப்பிக்கிருன் (என்றவாறு).

44. (சிவபரன் வாழ்த்து)

சிந்தையின் உள்ளும்என் சென்னியினுஞ் சேர
வந்தவர் வாழ்க என்று உந்தீபற
மடவாள் உடனே என்று உந்தீபற. (44)

(கொண்டுகூட்டு): என் சிந்தையினுள்ளும் சென்னியிலும் மடவாளுடனே சேரவந்தவர் வாழ்க என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): என் மனத்தகத்தும் தலையின்மிசையும் பராசக்தியுடன் கூடிவந்து என்னுடன் ஒன்றுன சிவபிராணுகிய முதல்வன் நீடு வாழ்க என்று வாழ்த்தி (அனுபவித்தற் பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): சேர வந்தவர் என்ற தொடர் வந்து சேர்ந்தவர் என்று பொருள்கொள்ள நின்றது. சேர்தல் — கூடுதல், ஒன்றுதல். சேரல் என்றுல்

அடுத்தல் அல்லது கிட்டல் என்ற பொருள் இங்கு பொருந்தாது. ஏனெனில், முதல்வன் முத்தராகிய இந்த ஞானசிரியருடன் முத்திநிலையில் அடுத்து நில்லாது ஒன்றாய் நின்றான் ஆதலால் என்க. இம்மைக்கும் அம்மைக்கும் மறுமைக்கும் வருதலும் போதலுமாயுள்ள சீவனுடைய வியாபாரத்தை, எப்போதும் அவனுடன் நிற்கும் முதல்வனுக்கும் ஒட்டி, இம்மைக் கண் என்னுடன் வந்து ஒன்றாய்ச் சேர்ந்தவர் என்று அபிநுபாவத்தால் கூறினார் என்க.

முதல்வன் பஞ்சகிருத்தியங்களையும் தானே செய்யாது பராசத்தியைக் கொண்டாற்றலாலும் அந்நிலையில் அவன் சத்திவடிவாகவே உயிரகத்துட் கூடி நிற்றலாலும் "மடவாளுடனே சேரவந்தவர்" என்றார். "சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை — முத்திக்கு நாயகி என்பது றிகிலர்—பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள் — கத்தியநாய் போற் கத்துகின் றாரே" என்ற திருமூலநாதரின் போதனையைக் கண்டுணர்க.

தடத்தநிலையில் முதல்வன் மனத்தகத்துள் சத்தி வடிவில் மெய்யுணராத மகனுடன் மகனாய்க்கூடி நின்று உபகரிக்கின்றான். அப்பால் சன்மார்க்க ஞானபாதங்களிற் பழகிப் பக்குவமுற்ற சாதகனுக்கு மனத்தகத்துள் நின்ற முதல்வன் ஞான குருவாய் வெளிமுகத்தில் தோன்றி (அதாவது ஓர் மெய்ஞ்ஞானியை ஆவேசித்து நின்று) சாதகனுக்கு மெய்யுணர்த்தி அவனுடை தலைமிசைத் திருவடி தீக்கை செய்கிறான். அப்பால் சாதகன் முத்திநிலை

யெய்தி அதீத மீதானத்தே தன்னுடன் ஒன்ருய்க் கூடி நிற்க உபகரிக்கிருன். ஆதலால் பெத்தநிலை யில் மனத்தகத்தும் முத்திநிலையில் சென்னியிலும் உயிருடன் சத்திசிவம் கூடிநிற்றலால் சிந்தையி னுள்ளும் சென்னியினும் சேரவந்தவர் என்ருர். இங்கு "தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த" என்ற சிவஞானபோதம் 8ம் சூத்திரப் பொருளையும் காண்க. காணக்கூடாத சிந்தை யினுள் என்றது பெத்தத்தில் அருவமாய் மறைந்து நின்றளித்தலையும், காணப்படும் சென்னியின் என்றது முத்தி நிலையில் அறிவானந்த சோரூபி யாய்க் கர்ட்சியளித்து கோசரமாகி நின்றளித்தலை யும் உணர்த்தி நின்றன. "இதயத்தும் நாட் டத்தும் எந்தன் சிரத்தும்–பதிவித்த பாதப் பராபரன் நந்தி" என்ருர் திருமூலநாதர்.

மெய்யுணர்ந்தோர் இயற்றும் பக்திஞான நூல் களின் இறுதியில் பாட்டுடைக் கடவுளுக்கு அல்லது தமது ஞானகுருபிரானுக்கு வாழ்த்து கூறுதல் மரபு. அதனையொட்டி இங்கு ஆசிரியர் தம் பாட்டுடை முதல்வனையும் தம் ஞானகுருவாயுமுள்ள பார்வதி சமேதசிவபிரானுக்கு வாழ்த்து கூறியுள்ளார்.

(கருத்து): பெத்தத்தும் முத்தியிலும் எஞ் ஞான்றும் பராசத்தியுடன் கூடி உயிருடன் ஒன்ருய் நின்று உபகரித்துவரும் அத்துவித அருளாளனும் சிவபரன் நீடூவாழ்க (என்றவாறு).

45. (நூற்பயன்)

வைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை உந்தீபற
உண்மை உணர்ந்தார் என்று உந்தீபற. (45)

(கொண்டுகூட்டு): உய்யவந்தான் உரை உண்மை உணர்ந்தார் வையமுழுதும் (ஆம்) மலக் கயம் கண்டிடும் என்று உந்தீபற உந்தீபற.

(இதன்பொருள்): உய்யவந்தான் (உய்யவந்த தேவநாயனார்) இயற்றிய இந்நூலின் மெய்ப் பொருளை அநுபவத்தில் உணர்ந்தவர் இப்பூவுலகம் முழுவதிலும் உள்ள உயிர்கண்மாட்டுப் பதிந்துள்ள ஆணவமலத்தின் நாசத்தை( த் தம்மாட்டு)க் கண்ட வராவார், என்றறிந்து (அநுபவித்தற்பொருட்டு) உன் உந்திக்கனலை உயர எழுப்பெழுப்பு.

(விளக்கம்): இச்செய்யுளில் நூலாசிரியரின் பெயரும் நூலின் பயனும் அடங்கியிருத்தலால் இதனைப் பாயிரச் செய்யுளாகக் கொள்ளவும்படும். ஆயினும் அவ்வாறு கொள்ளத் தேவையில்லை. ஏனெனில், திருஞானசம்பந்தப் பெருமான் இயற்றி யருளிய பற்பல பாசுரங்களின் ஈற்றுச் செய்யுளில் தம்முடைய திருநாமத்தையும் பாசுரத்தின் பயனை யுங்கூறியுள்ளார் என்பதைக்கொண்டு அவற்றைப் பாயிரமாகக் கொள்வார் அரிது.

உய்யவந்தான் என்றது இந்த ஆகமஞான நூலாசிரியராகிய திருவியலூர் உய்யவந்த தேவ

நாயனாரைக் குறித்து நின்றது. தம்மைத் தாழ்த்திக் கொள்வது மெய்யுணர்ந்தார்க்கு ஓர் அணிகலன். ஆதலால் தம்முடைய பெயரைச் சுருக்கி ஒருமையிற் கூறினார் ஆசிரியர். உரை என்றது சொல். அது ஆகுபெயராய் நூலைக்குறித்தது. உய்ய வந்தானுரை என்பதில் 'இன்' உருபு தொக்கி நின்றது. 'ஐ' உருபும் தொக்கது. உய்யவந்தானின் உரையின் உண்மையை என்று விரித்துப் பொருள் காணவேண்டும். உணர்தல் தெளிந்து அநுபவங் கொண்டு அறிதல். அநுபவமில்லையெனில் அறிவின் பயனாக மலக்கயங் காண்டல் கூடாது என்றார் என்க. சிவானுபூதி கொண்ட சிவமுத்தருக்கே சகச மலம் நாசமுறுமாதலால் அவ்வாறு கூறினார்.

மலம் என்றது ஆணவமலத்தை; ஏனெனில் அம்மலத்தின் பரிபாகத்தின் பொருட்டே மகனுக்குப் பிறவி ஏற்பட்டது எனலால் என்க. கயம் என்றது தேய்வு, கேடு, நாசம் அல்லது அழிவு எனப் பொருள் கொள்ளும். நீர், குளம், என்ற பொருள்கள் இவண் பொருந்தாது. மலக்கயம் என்றதில் 'இன்' உருபும் 'ஐ' உருபுப் தொக்கி நின்றன. மனத்தின் கயத்தை அதாவது நாசத்தை என விரித்து உரைக்கப்பட்டது.

வையமுழுதும் மலம் என்றவிடத்து ஆணவ மலத்துக்கு உறைவிடம் உயிர்களாதலால் வைய முழுதும்என்றது ஆகுபெயராய் உலகிலுள்ள அனைத்துயிர்களையுங் குறித்தது. அவ்வுயிர்களிடத்து உள்ள மலம் என விரித்துப் பொருள்கொள்ள நிற்ற

லால் ஆம் என்ற சொல்லை எச்சமாகக்கொண்டு வைய முழுதும் ஆம் மலம் எனக் கூட்டியுரைத்தல் வேண்டும். இது சகசமலத்தின் வியாபகத் தன்மையை யுணர்த்திநின்றது.

கண்டிடும் என்றார்; எதனை? மலத்தின் நாசத்தை. உலக முழுதுமாதுமாம் மலத்தின் நாசத்தையா யெனின் அன்று; தம்மாட்டுள்ள மலத்தின் நாசத்தை மட்டும் ஏனெனில் ஒரு சீவன்முத்தருக்கும் கூட சகலவுயிர்களின் மலக் குற்றத்தைப் போக்குதல் என்பது கூடாத காரியம். அனைத்துயிரையும் பற்றியுள்ள மலம் தன்னையும் பற்றியுள்ளதென்பது வெளிப்படை. ஆதலால், கண்டிடும் என்றதற்குத் தம்மாட்டு கண்டிடும் என்று அவாய் நிலை உத்தி கொண்டு உரைக்கப்பட்டது. ஆணவமலம் வியாபக மாயினும் அது தன் வியாபகத்தால் சகலசீவர்களை யும் ஒன்றுபோல் பற்றி நில்லாமல் அதன் எண்ணிறந்த சத்திக் கூறுகள் சீவர்களில் ஒவ்வொருவரையும் அவரவரின் ஊழுக்குத் தக்கபடி தனித் தனியாகவே பற்றிநிற்கும். ஆதலால் ஒவ்வொரு சீவனும் பிரவிதோறும் முன்னேறி இறுதியாக மகனாய் முத்திநிலையை அடைந்து மலக்கட்டை ஒவ்வொருவனும் தனித்தனியே யொழித்து தூயதாகி முதல்வடன் ஒன்றாய் நின்று சிவப்பேறு எய்துவதே சித்தாந்த முத்தி முறையாகும். ஆதலின், ஒருமகன் முத்தியுற்றால் அதனால் சகல சீவர்களின் மலமும் நாசமுறாது எனக்காண்க.

இவ்வாறன்றி "வையமுழுதும் உய்யவந்தான் உரை உண்மை உணர்ந்தார்" எனக்கொண்டு கூட்டி உலகிலுள்ள அனைத்து மக்களிலும் உய்யவந்தானுடைய நூலின் மெய்ப்பொருளை உணர்ந்தவர், எவரும் தம்மாட்டுள்ள மலத்தின் நாசத்தைப் பெறுவர் என்று பொருள்கோடலும் ஒருவகை ஆயினும் உண்மை உணர்ந்தார் என்ற தொடரில் உண்மை உணர்ந்த எந்த மகனும் என்ற பொருள் அடங்கியிருத்தலால் இவ்வாறு பொருள் கோடல் சிறப்புடைத்தன்று.

இவ்வாறு செவ்விதாகக் கொண்டுகூட்டிச் செய்யுளின் உண்மைப் பொருளைக் காணமாட்டாமல் உண்மையுணர்ந்தாராகிய உய்யவந்தான் என்று கூட்டி மெய்யுணர்ந்தவராகிய உய்யவந்தான் என்று பொருள் கூறுதல் பொருளாலும் இலக்கணத்தாலும் இழுக்குடைத்தாகும். உய்யவந்தான் மெய்யுணர்ந்தவன் என்றால் இலக்கணத்துக்குப் பொருந்தும்; மெய்யுணர்ந்தார் என்றது பொருந்தாது. மேலும் பாயிரமாகக் கொள்ளக்கூடிய செய்யுளில் நூலாசிரியர் தன்னை மெய்ஞ்ஞானி என்று சிறப்பித்துக்கூறி முடித்தார் எனக்கொள்ளுதல் ஆசிரியரின் மெய்யடக்கத்துக்கும் உரையாளரின் அறிவுக்கும் இழுக்கை ஊட்டுவதாகும்.

(கருத்து): உய்வந்த தேவர் அருளிய திருவுந்தியார் என்னும் சித்தாந்த ஞான ஆகம நூலின்

மெய்ப்பொருளைத் தம் அநுபவத்திற் கண்ட சீவன் முத்தரின் அஞ்ஞான மலம் நாசமுறும் (என்றவாறு).

திருவுந்தியார் உரைச்சுவடி முற்றுப் பெற்றது.

திருச்சிற்றம்பலம்





உ

திருமுருகானந்தா

# திருக்குமரவேளின் காட்சிப் பேறு

( துரிய நிலை அநுபவம் உணர்த்துதல் )

1 கண்டொன்று சொல்லக் கருதாதே—தம்பி
கண்டது அல்லதைக் கேளாதே

2 உற்றது சொல்வேன் கேட்பாயே—வாழ்வில்
அற்றது பொருந்தக் காண்பாயே

2 கண்டது காட்சி என்னென்பேன்—பொன்
அண்டருங் காண்பதரிதென்றேன்

4 கணமொரு நேரங் காட்சியப்பா—அருள்
குணமுறு குமரன் மாட்சியப்பா

5 பிண்டப் பதிகண் உள்ளானுன்—அன்பு
கொண்ட உருவந் தானானன்

6 பத்துடனாறும் பருவத்தே—அரன்
அத்தனின் வேடம் பூண்டிட்டே

7 எழிலுறு மாடந் தமர்ந்தானே—உமை
கழிபெருஞ் செல்வக் குமரனுமே

8 யாரெனத்தேறுமுன் சொன்னானே—தன்னைப்
பாரென முத்துக்குமாரெனவே

9 முத்துக்குமரனைக் கண்டேனே—அருள்
முத்தஞ் சொரியக் கொண்டேனே

10 சித்தங்குளிரக் கண்டேனே—நெஞ்சில்
முத்தம் முறுவல் பதித்தனனே

11 முறுவல் நாட்டங் கொண்டெனை—கண்ணால்
அருமை மகனென்றணைத்தானே

12 உள்ளம் உருகிப் பொங்கிடவே—முத்தம்
அள்ளியள்ளிச் சொரிந்தானே

13 நாடிய மனமு மொடுங்கிற்றே—குகனைப்
பாடிய மாடப் பரவிற்றே

14 முத்துக்குமரனைக் கைதொழவே—அன்பால்
ஒத்தென் மனமும் போற்றிடவே

15 நாவுங் குழறிப் பாடிற்றே—கைத்
தாவித் தாளங் கொட்டிற்றே

16 நெஞ்சும் நிறைந்து நிமிர்ந்ததுவே—போற்றிக்
கெர்ஞ்சும் உள்ளங் குழறிடவே

17 கண்ணீர் பெருகி வழிந்ததுவே-ஞான
அண்ணல் திருமுன் இருந்திடவே.

18 மாடமுங் குகையாய் வளர்ந்ததுவே-வள்ளி
ஆடவன் உருவங்கமர்ந்ததுவே.

19 வருந்தியமுது கூவுமுனே-கருணை
செறிந்திக் காட்சியளித் தவனே.

20 அர்ப்பணம் உனக்கெனை உடலுயிரால்-நாதா
சிற்சுகங்கொண்டனன் உனதருளால்.

21 என்றுந்தஞ்சம் பூங்கழலே- உந்தன்
பொன்ரு வாழ்வென் சுதந்தரமே.

22 அன்பைப் பொழியுங்கண்ணப்பா—பிறவித்
துன்பங்கடந்தேன் சித்தப்பா.

23 சரணம் மயில்வேல் சண்முகவா – அடிமை
சரணத்துறையக் கண்டகுகா.

24 கரணஞ்சிவகுரு முருகய்யா—மகனைப்
பிரணவ நிலை மேற்காணய்யா.

25 சரணம் முத்துக் குமரபரா—பர
சரணத் துதியுளங்கொண்டருளே.

முத்துக் குமரவேள் பதம் வாழ்க

# நூல் விளம்பரம்

(சிவனடியார் எழுதியுள்ள நூல்களின் விவரம் வருமாறு)

சன்மார்க்க நன்னூல் :—ஐந்து காண்டத் தொகை நூல்.

1. முதற்காண்டம் :—சிவஒளி

முதலாவது நூல் :—திருமந்திர சித்தாந்த ஞானம் இஃது கடவுட் காட்சிக்கு திருமூல நாதர் வகுத்த வழி.

இரண்டாவது நூல் :—திருவுந்தியார் சிவயோக ஞானம். இஃது கடவுட் காட்சிக்கு உய்யவந்த தேவநாயனர் வகுத்த வழி.

மூன்றாவது நூல் :—அத்துவிதபதி ஞானம் இஃது கடவுட் காட்சிக்கு மெய்கண்ட சிவாச்சாரியார் வகுத்த வழி. இவை இன்னும் வெளியிடப்பெறாத வசன நூல்களாகும்.

2. இரண்டாம் காண்டம் :—உயிரொளி
   அத்தியாயம்–1 அறநெறிச் செறிவு.
   அத்தியாயம்–2 தவநெறித் தேர்வு.
   அத்தியாயம்–3 திருவருட் பதிவு.

இஃது ஓர் சிவயோக ஞானியாரின் சன்மார்க்கச் சுயசரிதமாகும். சிவபூசகர்களும் சிவ, தவ பெரியோர்களும் அறிவு நூல் கற்றோர்களும் சிவபெருமானின் நித்திய திருவிளையாடல் அற்புதங்களை இன்னூலில் கண்டு இறும்பூது எய்தி மகிழக்கூடும் (இன்னூல் இன்னும் வெளியிடப் பெறவில்லை)

3. மூன்றாவது காண்டம் :—அருள் ஒளி–குருவருள் பாசுரம். அத்தியாயம் (1) துதி (2) குறையிரத்தல் (3) திருவருட் பிரசாதம் (4) எந்தையாரின் துதிப் பாடல் திரட்டு (5) சாகா கல்வி கட்டுரை (6) திருவடி வாழ்க்கைச் சோடசம்.

இன்னூலின் முதற் பதிப்பின் நூற்பிரதிகள் முழுவதும் செலவாகி விட்டன. காலகிரமத்தில் இரண்டாம் பதிப்பு வெளிவரும்.

4. நான்காம் காண்டம் :— திருவுந்தியார்-உரைச்சுவடி.

திருவுந்தியார் மூலத்திற்கு ஆங்கில ஆக்கமும் ஆராய்ச்சி விரிஉரையும் அடங்கிய நூல் இஃது விரிவான்தோர் ஆராய்ச்சி உறை நூலாகும்.

விலை நூலகப் பதிப்பு ரூ. 2—50
" பொதுப் பதிப்பு ரூ. 2—00

5. ஐந்தாம் காண்டம் :—சன்மார்க்கப் பால பாடம்

இஃது மாணவர்களுக்கும் இதர இளைஞர்களுக்கும் கடவுள் நம்பிக்கையையும விசுவாசத்தையும் நன்கு ஊட்டக் கூடியதாகும்.

விலை ரூ. 1—00

## இதர நூல்கள்

6. பிரம்ம சூத்திரம்:— வடமொழி முதநூலைச் சுருக்கி தமிழாக்கம் செய்து கையேட்டில் இருக்கிறது.

7. கிருஷ்துவைப் பின்பற்றல் (இமிடேசம் ஆவ்கிறைஸ்ட்) என்னும் பெயர் பெற்ற ஆங்கில சன்மார்க்க வசன நூலை சுருக்கி தமிழாக்கம் செய்து கையேட்டில் இருக்கிறது.

(குறிப்பு) முதற் காண்டத்துள்ள வசன சாத்திர நூல்கள் மூன்றில் யாதொன்றையேனும் ஆறுவது, ஏழாவது, இலக்க கையேட்டு நூல்களில் யாதொன்றையேனும் தங்கள் செலவில் அச்சேற்றி வெளியிட விரும்புவோரும் சன்மார்க்க பால பாட நூற் பிரதிகளை விலைக்கு வேண்டுவோரும் அடியிற்கண்ட விலாசத்திற்கு எழுதி கேட்டு பெற்றுக் கொள்ளலாம்.

கையேடுகளும் (எண் 1, 6, 7) சன்மார்க்க பாலபாட நூல் (எண் 5) பிரதிகளும் கிடைக்கும் இடம்.

சிவனடியார் க. மாசிலாமணி தேசிகர்
"திருமந்திரம்" B, 6 - திருநகர்
மதுரை—6

திருவுந்தியார் உரைச்சுவடி கிடைக்கும் இடம்:
திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம்
தெற்காவணி மூலவீதி
மதுரை—1

# திருவுந்தியார் — உரைச்சுவடி பிழைதிருத்தம்

(முதற்கண்ணே பிழைகளைத் திருத்திக் கொள்க)

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 7 | கோடிட்டபுள்ளி | புள்ளி நீக்கவும் |
| 6 | 15 | Kundalin | Kundalini |
| 8 | 8 | மாயா | மாய |
| 9 | 10 | him | Him |
| 9 | 23 | (for realisatuin) | (for realisation) |
| 10 | 21 | 21 | 24 |
| 10 | 26 | to the feet of fhe lord | (to the feet of the lord) |
| 12 | 5 | of | on |
| 12 | 9 | Pratiana | Pranava |
| 12 | 12 | rouse | rouse, rouse |
| 14 | 3 | and) | and |
| 17 | 4 | உநதி | உந்தி |
| 19 | 23 | in Se perable | in seperable |
| 20 | 9 | Annavamal | Anavamala |
| 20 | 14 | Ser pent fire | Ser pent – fire |
| 22 | 4 | கொள்ளும் | கொள்ளும். |
| 24 | 27 | என்று | என்ற |
| 27 | 2 | இயற்றருளிய | இயற்றியருளிய |
| 27 | 14 | மாணுக்கட்கு | மாணுக்கருக்கு |
| 31 | 2 | என்றும், | “,” நீக்குக |
| 38 | 3 | எங்கள் | எங்கன் |
| 41 | 14 | அருவத் | அருவுருவத் |
| 55 | 4 | இவற்றுல் | இவற்றுள் |
| 57 | 14 | சித்தியைக் | சத்தியைக் |
| 57 | 19 | மூலே இருத்தாரை | மூலே இருந்தாரை |
| 61 | 6 | முதல்வன்க | முதல்வன் |
| 61 | 22 | பதிவாகிய | பதியாகிய |
| 63 | 15 | கூறியிருந்தலால் | கூறியிருத்தலால் |
| 64 | 26 | வென்பாவின் | வெண்பாவின் |
| 66 | 21 | ஏழா வண்ணம் | எழா வண்ணம் |
| 68 | 22 | அவன்கண் | அவன் கண் |
| 73 | 7 | பாவிந்து | பாவித்து |

| | | | |
|---|---|---|---|
| 73 | 24 | சித்தாத்தமாகும் | சித்தாந்தமாகும் |
| 78 | 2 | அழித்தலும் | அழிதலும் |
| 81,83,பக்கத் | | அத்தி—1 | அத்தி—2 |
| 85,87,தலைப்பு | | | |
| 85 | 6 | முதலவன் | முதல்வன் |
| 89 | 13 | பிரபஞ்சத்தை | ஈற்றில் முற்றுப்புள்ளி போடவும் |
| 90 | 18 | காணாது | "," நீக்கவும் |
| 91 | 24 | ஞாண | ஞான |
| 92 | 20 | பதர் | ";" ஈற்றில் அரைப்புள்ளி குறியிடவும் |
| 96 | 3 | சமயங்சள் | சமயங்கள் |
| 101 | 16 | அசத்தால் | அசத்தாய் |
| 103 | 2 | கொண்டு | பொருள் கொண்டு |
| 105 | 1 | உவர்க்கடல் | உவாக்கடல் |
| 112 | 13 | சிவத்தைக் | சிவத்தைக் |
| 138 | 4 | முறைறையும் | முறையையும் |
| 145 | 10 | இடை | இட |
| 148 | 7 | கூறியிதத்தல் | கூறியிருத்தல் |
| 158 | 12 | துரியததித | துரியாதித |
| 163 | 23 | எழும்பர்ச் | எழும்பர்ச் |
| 164 | 12 | நினைந்தெழ | நினைந்தெழு |
| 173 | 13 | என்றால் | சொல்லை நீக்கவும் |
| 178 | 13 | சிவாச்சாரியார் | இச்சிவாச்சாரியார் |
| 181 | 13 | பிரார்த்த | பிராரத்த |
| 191 | 4 | சதசத்தாகிய | (பக்கத்தில் சேர்க்க வேண்டியது) பசு என்னும் சிவன் சிவசத்தாகிய பதி என்னும் முதல்வன் ஆகிய இம்முத்திறத்தாகிய பொருள்களின் |
| 195 | 24 | சிவானபூதி | சிவானுபூதி |
| 210 | 17 | துரிய துரியதித | துரிய துரியாதித |
| 213 | 24 | சீவன் முத்த | சீவன்முத்த |
| 225 | 20 | மனத்தின் | மலத்தின் |

